

மகாமகிமைதங்கிய

திருவள்ளுவநாயனார்.



உ

பரதேவதைசகாயம்.

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி

# மந்தராக்ஷர மாலிகா ஸ்தோத்திரம்.

---

கல்யாணாயுதபூரண சந்த்ரவதனும் ப்ராணேஸ்வரானந்தினீம்
பூர்ணாம்பூர்ணதராம் பரேஷமகிஷீம் பூர்ணாமிருதாஸ்வாதினீம்
ஸம்பூர்ணாம் பரமோத்தமாம் மிருதகளாம் வித்யாவதீம் பாரதிப்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி.

ஏசாராதி சமஸ்த்த வர்னவிவிதாகாரைக சித்ரூபிணீம்
சைதனயாத்மக ஸக்ர ராஜநிலயாம் சக்ராந்த சஞ்சாரிணீம்
பாவா பாவவிபாவினீம் பவபராம் ஸத்பத்திவிந்தாமணீம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. ௨

ஈசாதிப்பர யோகிப்புருந்தவிதிதாம் ஸ்வானந்த பூதாம்பரம்
பஸ்யந்தீம் தனுமத்யமாம் விலவிணீம் ஸ்ரீவைகரி ரூபிணிம்
ஆத்மாநாத்ம விசாரிணீம் விவரகாம் வித்யாந்திரி பீஜாத்மி காம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. ௩

லக்ஷியாலக்ஷிய நிரிக்ஷணாம் நிருபமாம் ருத்ராக்ஷமாலாதராம்
த்ரியக்ஷார்த்தாகிருதிதக்ஷவம்ஸகளிகாம்தீர்க்காஹதீகக்கஸ்வராம்
பத்ராம் பத்ரவரப் பிரதாம் பகவதீம் பத்ரேஸ்வரீம் முத்ரிணீம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி.

ஹ்ரீம்பீஜாகநாதபிந்து பரிதாம்ஓங்காரநாதாத்மிகாம்
பிர்ஹ்மானந்தகனோதரீம் குணவதீம்க்ஞானேஸ்வரீம் க்ஞானதாம்
இச்சாக்ஞானகிருதீம் மகிகதவதீம்கந்தர் வஸம்ஸேவிதாம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. ௫

ஹருஷோன்மத்தஸ்வர்னபாத்ரபரி தாம்பீனோன்னதாகூர்னிதாம்
கும்காரப்ரியஸப்தஜாலநிரதாம் ஸாரஸ்வதோல்லாஸநீம்
சாராசாரவிசாரசாரசதுராம் வர்ணாஸ்ரமாகாரிணீம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி.

ஸர்வேசாங்க விகாரிணீம் ஸகருணாம் ஸந்நாதினீம் நாதினீம்
ஸம்யோகப்ரியரூபிணீம் பிரியவதீம்பிரிதாம்ப்ரதாபோன்னதாம்
ஸர்வாந்தர்க்க ஸாக்ஷிணீம் ஸிவதனுஸந்தீபினீந்தீபினீம்
ஸ்ரீ ஸக்ரபிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. எ

கர்மாகர்மவிவர்ஜிதாம் குலவதிம் கர்மப்ரியாம் கவுளினீம்
காருண்யாம்புதி ஸர்வகாம நிரதாம் ஸிந்துப்ரியோல்லாஸினீம்
பஞ்சப்ரஹ்மஸனாதனாம் ஸனகதாம் கேயாம்ஸயோகான்விதாம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. அ

ஹஸ்த்புக்கும்ப நிபஸ்தனத்விதைய தப்பிஞேன்னதா தானபாம்
ஹாராத்யாபரணாம் ஸுரேந்திரவினுதாம்ஸ்ரீங்காரபீடாலயாம்
யோன்யாகாரகயோனி முத்ரிதகராம்நித்யாம் நவாராத்மிகாம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. கூ

லக்ஷ்மீலக்ஷண பூர்ணபக்தவரதாம் லீலாவினோதஸ்திதாம்
லாக்ஷாரஞ்சித பாதபத்மயுகளாம் பிர்மேந்திரஸம்ஸேவிதாம்
லோகாலோகிதலோககாமஜெனனீம் லோகாஸ்ரயாங்கஸ்திதாம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஸேஸ்வரி. ௰

ஹ்ரீங்காரர்ஸ்ரித ஸங்கரப்பிரியதனும் ஸ்ரீயோகபீடேஸ்வரீம்
மாங்கல்யாயுத பங்கஜாபநயனம் மாங்கல்யஸித்திப்ரதாம்
தாருண்யேண விசேஷிதாங் ஸுமகாலாவண்ய ஸம்ஸோபிதாம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. கக

ஸர்வக்ஞானகளாவதீம் ஸகருணாம் ஸர்வேஸ்வரீம் ஸாவகாம்
ஸத்தியாம்ஸர்வமயீம்ஸகஸ்திரதளஜாம்ஞ்த்வார்ன வோபஸ்திதம்
ஸங்காஸங்க விவர்ஜிதாம்ஸுகரீம் பாலார்க்க கோடிப்ரபாம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. கஉ

காதிக்ஷாந்த சுவர்ணபிந்துஸுதனும் ஸர்வாங்க ஸம்ஸோபிதாம்,
நானாவர்ன விசித்ர சித்ரசரிதாம் சாதுர்ய சிந்தாமணீம்
சித்ரயன்த்கவிதாயினீம் ஸுசபலாம் கூடத்ரையாகாரிணீம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபர்ராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. கங

லக்ஷ்மி ஸானவிதீர்கிர சங்க்ரமகுடாக்யஷ்டாங்க பீடாஸ்ரிதாம்
சூரியேந்துமைக்னிமயைகபீடநிலயாம்த்ரிஸ்தாம்திரிகோணேஸ்வ
கோப்திர்ம்கர்வினிகர்விதாம்க்கனக்ரம்கங்காகணேஸப்ரியாம் [ரீம்
ஸ்ரீ ஸக்ரப்பிரிய விந்துதற்பணபராம் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி கச

ஹ்ரீம்கூடத்ரைய ரூபிணீம்சமைபினீம் ஸம்சாரிணீம்ஹம்ஸினீம்
வாமாசாரசராயணீம் சுகுளஜாம்பிஜர்வதீம் முத்ரிணீம்
காமாக்ஷிம் கருணார்த்திரீம்ஸித்தஸ்கிதாம் ஸ்ரீம்ஸ்ரீம்திரிமூர்த்திய
ம்பிகாம், ஸ்ரீஸக்ரப்பிரியவித்துதற்பணபராம் ஸ்ரீராஜராஜேஸ்வரி

யாவித்தா ஸிவகேஸ்வாதி ஜனனியாவைஜகன் மோகினி
யாப்ரஹ்மாதி பிபீலிகாந்த ஜெகதானந்தைக ஸந்தாயி
யாபன்சப்ரணவத்ரேப நளினி யாஸித் களாமாலினி
ஸாபாயர்த்பர தேவதாபகவதி ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி.

## மந்த்ராக்ஷமாலிகா ஸ்தோத்திரம்

முற்றிற்று.

இதுப்ரமஹம்ஸ பரிவ்ராஜக பண்டிதபிரஹ்மநிஷ்ட ஸ்ரீஜகத்குரு சங்காபூஜ்யபகவத் பாதாசாரியஸ்வாமிகளால் பரதேவதையைத் துதிசெய்துளதாதலினாலும் இந்நூலிற் பயில்வோர்க்குத் தேவியினனுக்கிரகம் அத்யாவஸ்யம் வேண்டப்படுவதாலும் தோத்திரவடிவாகவுள்ள இதனைஇத்துடன் சேர்க்கப்பட்டது அன்புடன் இதனைப்பாராயணம் செய்து இஷ்டசித்தி பெற்றுய்வாராக.

அகத்தீசனடிமலர் வாழ்க.

கடவுள் துணை.

திருவள்ளுவநாயனார்

# சரித்திரச் சுருக்கம்

ஆதியில் பிர்மா சிலபுத்திரரால் வடமொழியையுந்தென்மொழியையும் விளங்கச்செய்ய வேண்டுமென்றெண்ணி வேதவிதிப்படி ஓர் யாகஞ்செய்ய அதன்கண் வைத்திருந்த கும்பத்திலிருந்து கலைமகளவதரித்தனள். அவளைப் பிரமன் விவாகஞ்செய்து கொண்டான். பின்பு அகஸ்தியர்குறியவடிவோடு அக்கும்பத்துதித்தனர் அவர் சமுத்திர கன்னிகையை மணந்து பெருஞ்சாகர னென்பவனைப் பெற்றார். அவர் திருவாரூர்ப் புலைச்சியைச்சேர்ந்து பகவனென்பவரைப் பெற்று அவர்க்குச் சகல சாஸ்திரங்களையுங் கற்பித்தார், அந்நாளில்பிர்மவம்மிசத்தில் தவமுனியென்பவர் அருண்மங்கையெனும் பிராமணமாதைச் சேர்ந்து ஒருபுத்திரியைபெற்று வைத்து விராலிமலையில் தவஞ்செய்யச் சென்றனர். அக்குழந்தையைஉறையூர்ப் பெரும்பறையன் கண்டெடுத்துச் சிலகாலம் வளர்த்துவருகையில் மேல்நடக்கப்போகிற காரணத்தினால் இந்தபெண் தவிர மற்றவர்கள் யாவரும் இறக்கும்படி அந்தச்சேரியில் யாதுகாரணமோமாமண்மாரிபெய்தது. பின்பு அந்தப்பெண் அதற்கடுத்த மேலூர் அகரத்திலே நீதியையன்வீட்டில் வளர்ந்திருந்தனள்.

அப்போது * பகனென்பவர் சகலசாஸ்திர பண்டிதராய்க் கண்டவர் யாவரும் மரியாதை பண்ணும்படி பிராமண கிர்த்தியத்தில் வழுவாதவரா யிருக்கையில், யாத்திரை பண்ணும்படி யிச்சை கொண்டு காசிக்குப் போகும்போது இவ்வகரத்துக்கடுத்த ஒருசத்திரத்திலிறங்கி நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு சமையல் செய்திருந்தார். அவ்விடத்தில் அந்தப்பெண்வர அவளைக் கண்டு நீயார புலைச்சியோ, வலைச்சியோ இங்கே வந்தாயென்று அதட்டி மிகுந்த கோபங்கொண்டு * சட்டுவத்தால் அவளதுதலையிலே உதி

---

* இவரையாளி தத்தமுனிவரெனக்கூறுகின்றது. * வெட்டிக் கிணற்றில் தள்ளிப்போனதாகவும் கூறுகின்றது. இதனை -யாளிகூவற்றாண்டு மாதப்புலைச்சி, காதற் காசனியாகிமேதினி, யின்னிசையெழுவர்ப்பயந்தோள், என்ற ஞானமிருத்தம் ௩௩-வது திருவசனிற் காண்க.

ரஞ்சோர அடித்தோட்டினர். அவள் அழுதுக்கொண்டு தன்னிட த்துக்குப் போய்விட்டாள்.

மறுபடியும் பகவனென்பவர் ஸ்நானஞ் செய்து, போசனம் பண்ணி அதிசீக்கிரத்தில் வழிக்கொண்டு சிலநாளிற் காசிக்குப் போய்க் கங்காஸ்நானஞ் செய்து பிரயாகையிலிருந்து தீர்த்தக்கா வடி கட்டிக்கொண்டு வரும்போது அந்தச்சத்திரத்தில் வந்திரங்கி ஞர். மேற்சொல்லிய பெண்ணனவள் அப்போது மகாலட்சுமி யைப் போலும் அழகும், எவ்வனபருவமும் உடையவளாய் அங் கேவந்தாள் பகவனென்பவர் இவளுடைய சௌந்தரிய முதலிய குணங்களைப்பார்த்து மோகங் கொண்டார், அச்சத்திரத்துக்கு அதிபராகிய நீதியையரென்பவர் அக்குறிப்பினைக் கண்டு என்பெ ண்ணை விவாகம் பண்ணிக்கொண்டு இங்கேயிருமென்று சொல்ல, அதற்கவர் நான்கொண்டுவந்த காவடியை இராமேச்சுவரத்தில் செலுத்திவந்து அப்படியே செய்கிறேனென்று அவரிடத்திலே செலவு பெற்றுக்கொண்டுபோய் இராமலிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணித் திரும்பிவந்தார். அப்போது நீதியையர் விவாகயெத்த னம் பண்ணிப் பந்துக்களோடிருந்து விசேஷமாய் நாலுநாளைய சடங்குகளுஞ்செய்து ஐந்தாநாள் மங்களஸ்நானஞ் செய்விக்கும் போது பகவனென்பவர் அந்தப்பெண்ணினுடைய தலையில் எண் ணெயைப் பெய்யும்படி மயிரைவகிர்ந்தார். அப்போது தான்முன்பு சட்டுவத்தாலடித்த வடுவைக்கண்டு அனுமானித்து இந்தப்பெண் ணினது வரலாற்றையும் விசாரித்து விசனங்கொண்டு நீஆதியளல் லவாவென்று சொல்லிவிட்டு ஓடினர் அதுவே அவளுக்கு ஆதியெ ன்று காரணப்பெயராயிற்று.

அப்படியோடிய பகவனென்பவர் பொழுதுபோகையாலஎதி ரேகண்ட பாணர் சேரியிலிருந்த ஒருமண்டபத்திலே தங்கினர், ஆதியென்பவளும் அவர்பின்னேதொடர்ந்து அவரைக்கண்டுதெய் வச்செயலால் உமக்கும் எனக்கும் இந்தக்காரியம் நடந்திருக்க, நீர் என்னைவிட்டுப் போகுதல் உமக்குத்தகுமோ அல்லது தருமமோ வென்றும் உம்மைநீங்கினல் உயிர்வாழேனென்றும் மிகவும்இரக்க த்துடன் சொல்லப், பிராரத்துவத்தால் இதர்புத்தியினும் அதுசரி யென்றுடன்பட்டுப் பெண்ணே என்னிடத்தில் உனக்கு அன்பிரு க்குமாகில் யான்சொன்னபடிகேட்கவேண்டும் அஃதென்னெனில் உனக்குப் பிள்ளைகள் எங்கேபிறக்கின்றதோ அங்கங்கே அவை களை அப்பொழுதேவிட்டு வருவையாகில் யான் உன்னைக்கூடச்

சம்மதிப்பேனென்று சொல்ல, அவளதற்கு உடன்பட்டபின் அவர்கட்கு ஔவை உப்பை, அதிகமாயின், கபிலர், வள்ளியம்மை, * பிறந்தனர் பின்பு அவ்விருவரும் மயிலாப்பூரில் இலுப்பைத் தோப்பிற் கூடினர்கள் அப்பொழுது திருவள்ளுவர் பிறந்தனர். இந்தக்குழந்தையை யாவர் காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங்கத் தாய்வருந்தும்போது அதுசொல்லியது.

வெண்பா.

எவ்வுயிருங் காக்கவொரு வீசனுண்டோ வில்லையோ
வவ்வுயிரி னல் யாமொருவ னல்லவோ-வவ்வி
யருகுவது கொண்டிங் கலேகுவதே னன்னே
வருகுவது தானே வரும்.

அதுகண்டு மனந்துணிந்து அவ்விருவருந் தீர்த்தயாத்திரைக்கும் போயினர். பின்பு சிவாலயத்தின் அருகேயுள்ள இலுப்பை மரத்தின் கீழிருந்த குழந்தை அவ்விலுப்பை மலரிற்றுளிக்குந் தேனையுண்டு பூர்வம்பிர்ம்மாவாதலால் சிகைஎக்யோபவீதம்சதுர் வேத புஸ்தகமுங்கொண்டு வளர்கையில் கங்காகுலசிரேஷ்டனாகிய ஒருவேளாளன் மனைவி புத்திரனைக்குறித்து அச்சிவாலய சந்நிதியில் தவஞ்செய்திருந்தாள், அப்பொழுது உமாதேவி அவளுடைய த்வத்துக்கிரங்கி தெய்வச்செயலாலுண்டாகிய இக்குழந்தையை நீ எடுத்துக்கொள்ளென் றருள்செய்து, திருவள்ளுவரென்று பூர்வ நாமகரணமுஞ் செய்தாள். அவளும் அக்குழந்தையை யெடுத்து மகிழ்ச்சியடைந்து கொண்டுபோய்த் தன்புருஷன்கையிற் கொடுத்தாள் அவனுந் தன்கையில்வாங்கிப் பேரானந்தம் பெற்று அது வந்த வரலாறுகேட்டு அப்படியிருவரும் அந்த பிள்ளையை நாளொருமேனியாக வளர்க்குங்காலத்தில் அவர்கள்சுற்றத்தார்கள் ஏதோ ஒருபிள்ளையை வளர்க்கிறார்களென்று இவர்களை இகழ்ச்சிபண்ண அதற்கு அவர்களஞ்சிப் புறத்திலுள்ளதோர் தொழுவத்திலேதொட்டிவிட்டு அதில் அக்குழந்தையைக் கிடத்திப் பண்ணைக்காரரைக் காவல்வைத்து வளர்த்தார்கள். பின்பு திருவள்ளுவரும் ஐந்துவயதான காலத்துத் தன்பொருட்டுத் தாயுந்தகப்பனும் சுற்றத்தார்களால் நிந்தைசெய்யப் படுகிறார்களென்று அவர்களைப் பார்த்து என்னால் உங்களுக்கு வருத்தம் வேண்டுவதில்லை. நான்வேறிடத்தி

* ஒவ்வொரு குழந்தையையும் விட்டு நீங்கச் சம்மதியாது திகைத்து நிற்கும்போது ஒவ்வொருவரும், இவ்விதமான பொருள்மைந்த கவியினைக் கூறியுள்ளார்.

யிருக்கின்றேன். நீங்கள் வருந்தாதிருங்களென்று சொல்ல, அவர் கள் அப்பா உன்னைப்பிள்ளைக்கலி தீர்க்கவந்த பெருமானென்றெ ண்ணி யிருந்தோமே நீஇப்படிச் சொல்லலாமாவென்ன, நாயனர் நீங்கள் என்னை நினைக்கும்போது வந்துங்களுக்கு வேண்டியதைச் செய்வேனென்று சொல்லிப் புறப்பட்டு அவ்வூர்க்கருகே ஒருபனை மரத்தினிழலிலே யிருந்தார் அப்பனைமரம் தன்னடிவிட்டு நிழல் சாயாதிருக்க கண்டவர்கள் இப்பிள்ளை தேவனே கடவுளோ இவ் வுருவோடு வந்ததென்று துதிக்க அவர்களைப் பார்த்து நாயனர் இங்கேதவமேது மகிமையேது யாதொன்றும் என்னிடத்திலில்லை போமென்று தாம் அவ்விடத்தைவிட்டு நீங்கித் திருமூலர் போகர் முதலாகிய சித்தர்களும், மாதவர்களும் வாசஞ்செய்கின்ற மலைக் கெழுந்தருளித் தவஞ் செய்வார்களோடு கூடியிருந்தார். அங்கிரு ந்த திருமூலரிவரைக்கண்டு வள்ளுவரே பூர்வத்தில் நந்தி எனக்கு னுக்கிரகம் பண்ணும்போ தங்கிருந்தீரே உலகத்தாருக்குச் சித்தி முத்தி யருளும்படிக்கும் அறம்பொருளின்பமென்னு முப்பா லையுந் தமிழில் அருளிச்செய்யும்படிக்கு இங்குவந் தவதரித்தீரோ வென்று துதிக்க, நாயனரு மகிழ்ந்து அங்கே தவஞ்செய்வோரில் ஒருவராயிருந்து சகலசாஸ்திர பண்டிதரானர். அக்காலத்தில், தொண்டைமண்டலத்தி லொரு வேதாளமானது பயிர்களை அழி த்தும், உயிர்களைவதைத்தும், அநேகதுன்பஞ் செய்துவந்தது அப் பொழுது காவேரிப்பாக்க மென்னும் ஒரூரில் ஆயிரம் ஏர்கொண் டுழுது பயிர்செய்கின்ற மார்க்கசகாயனென்னும் ஒரு வேளாளன் இந்தவேதாளத்தை அடக்கினவருக்கு அளவற்ற திரவியமும் ஒரூ ரும் வேண்டியவைகளையுந் தருகிறேனென்று பிரசித்தம் பண்ணி னன். அது ஒருவராலும் ஆகாமலிருந்தது பின்பு அவ்வேளாளன் திருமூலராதியர் வாசஞ்செய்யும் மலையிலேயிருக்கும் பெரியோர் களை அடுத்துச்சொல்ல, அவர்கள் திருவள்ளுவரோடுசொல்லென் ருர் அவரைவணங்கிச் சொன்னன் அப்போது சிவகாருண்ணிய ராகிய திருவள்ளுவர் அவ்வேளாளன் வேண்டிக்கொள்வதைநிறை வேற்றும்பொருட்டு அவ்வேதாளத்தை விபூதி பஞ்சாட்சரத்தால் வென்று யாவரையும் ரட்சித்தார் பின்பு அவ்வேளாளன் ஒரூரும் அளவற்ற திரவியமுமல்லாமலும் நாயனர் யோக்கியத்தையும் மக த்துவத்தையும் பார்த்து, வாசுகியென்னும் தன்பெண்ணையும் கொ டுக்கும்படி நிச்சயித்து நாயனரிடத்துவந்து என்பெண்ணைத்தேவ ரீருக்குக் கொடுக்க நினைத்திருக்கிறேன். அப்படியே அங்கீகரிக்க வேண்டுமென்று சொன்னர் நாயனர் உலகத்தாருக்கு இல்லற நட

த்திக் காட்டவேண்டுங் காரணத்தை யோசித்து, அந்தப்பெண் நான்கொடுக்கும்மணலை அன்னமாக்கி எனக்கிடுமாகுல் விவாகஞ் செய்துகொள்வேனென்ருர். அந்தப்பெண் அப்படியே சம்மதித் துச் சமைத்துப் படைத்தனள் நாயனுரும் அங்கீகரிததுவிதிப்படி வாசுகியை விவாகஞ்செய்து சிலநாளங்கிருந்து பின்புமனைவியுடன் மயிலையில் வந்தோர் இல்லாக்கிக்கொண்டு இல்லறஞ்செய்து நெய் தற்றெழில் பாபமில்லாததென்று ஏலேலசிங்க னென்னும் வர்த் தகனிடத்தில் நூல்வாங்கி ஆடைசெய்து அக்கூலியால் சீவனஞ் செய்திருந்தனர். பின்பொரு காலத்தில் திருவாலங்காட்டில் சபா நாயகர் மகிட சங்காரஞ்செய்து கெர்வித்திருந்த பத்திரகாளி கெர்வபங்கமாகப் பலவித நடனஞ்செய்ய அவளுந் தோல்வியடை யாமலாடிவந்தாள் பின்புசுவாமி குண்டலங் கழன்றதைக்காதிலே தானே சேரும்படி ஊர்த்துவபாதமாக நடனஞ்செய்தார் அவ ளும் அப்படியாட நாணித்தோற்ருள், அப்பொழுது தேவர்கள் சுவாமீ! தேவரீரூர்த்துவ தாண்டவம் பண்ணிய காரணமென்ன மோ தெரியவில்லையென்றுகேட்க, நீவிர் திருமயிலையிலிருக்குந்திரு வள்ளுவரைக் கேட்டால் தெரியுமென்றுசொல்லத் தேவர்களங்கே போயவரைக் கேட்க அவர்சொல்லியது.

வெண்பா.

பூவி லயனும் புரந்தரனும் பூவுலகத்
தாவி யளந்தானுந் தாமிருக்க-நாவி
லிழைநக்கி நூனெருடு மேழை யறிவேனே
குழைநக்கும பிஞ்ஞகன்றன் கூத்துஎன்று கூறவும்,

அதிலேதெரிந்து தங்கள் சந்தேகம் தெளிந்தார்கள் ஒருநாள் நூல் வாங்கும்பொருட்டு ஏலேலசிங்கன் வீட்டுக்குப்போய் செட் டியார் எங்கேயென்றுகேட்க, அவர்சிவபூசை செய்கிருரென, அத ற்கு அவர்சிவபூசை இங்குசெய்கிருரோ குடும்பத்திற்செய்கிருரோ வென்ன, அதை அவர்பத்தினி உள்ளேபோய் அவருக்குச்சொல்ல அவர்கேட்டுச் சிவபூஜையை விட்டுத் திடுக்கிட்டோடிவந்து நாய ஞர் அவருடைய உபயபாதங்களில் வணங்கிசுவாமி! என்னைப்பாத சாகரத்தினின்று யெடுத்துக் கரையேற்ற வேண்டுமென்றுவிண்ண ப்பஞ்செய்ய, நாயனுர் அவரதுபக்குவத்தையும் இன்னுஞ்சிலமா ணுக்கர் பக்குவத்தையும் சோதிக்கவெண்ணி ஒருநாள் அவர்களை அழைத்துக்கொண்டு ஒருவனந்திற்சென்று அங்கு வெள்ளம்பெ ருகிவரச் செய்தனர். அவர்கள்பயந்து மனோதிடமின்றி இக்கரை

யிலிருந்துடன் போகமாட்டாமல் விழிக்க ஏலேலசிங்கர்மாத்திரம் தம்மைத் தொடர்ந்துவர, அவ்வெள்ளம் வழிவிட்டது பின்புஉயர்ந்த ஒருமரத்தி நுனியிலேறென்று சொல்ல ஏலேலசிங்க ரேறினர் பின்பு பிடித்தகொம்பையும், நின்றகொம்பையும் விட்டுவிடென்றருள, யோசியாமல் விட்டனர் விட்டும் ஒரு அபாயமில்லா திருக்க ஏலேலசிங்கரைத் தமது மடியின்மேல் வைத்து ஞானோபதேசம் பண்ணி எப்படிப்பட்ட சௌந்தரியமுள்ள மங்கையர்கள் மயக்கினும் மயங்காத திடச்சித்தத்தையும் அனுக்கிரகித்தனர்.

பின்பு தம்மிடத்துக்கு வந்துவிட்டார்கள் அப்படியிருக்கு நாளில் அந்நாட்டுக்கு அரசனாகிய அச்சுதராஜன் ஒருநாள் ஏலேலசிங்கரோடு பேசிக்கொண்டிருக்கும்போது உமக்குப் புத்திரப்பேறில்லையே உம்முடைய ஞானாசிரியரை அப்பேருண்டாகக் கேட்கலாகாதாவென்ன அவர் நல்லதென்று போய் மற்றொருநாள் நாயனாரைக்கண்டு விண்ணப்பஞ்செய்ய, அவர்சுவாமி கடாட்சிப்பாரென்று அனுக்கிரகம் பண்ணினார். பின்பு ஒருநாள் பரமசிவமே சிறுகுழவியாய் ஏலேலசிங்கரும் அவர்மனைவியும் நித்தியம் தரிசிக்கும் பசுவின் வாலின்புரத்திற் கிடந்தழுவதைக்கண்டு அவ்விருவரும் இந்தக்குழந்தையை ஏதெனவெடுத்தார்கள் உடனே அந்த அம்மாள் ஸ்தனங்களிலே பால்சுரந்துபெருக, அக்குழந்தைக்குப்பால் கொடுத்து ஞானகுருவாகிய நாயனார் சந்நிதானத்திற் கொண்டு போனார்கள் அவர் அக்குழந்தைக்கு அழகானந்தரென நாமகரணம் பண்ணினார், உடனே ஏலேலசிங்கர் அச்சுதராஜனென்னும் அரசனிடத்திற்சென்று எனக்குத் தெய்வீகத்தினால்குழந்தை உண்டாயிற்றென்று சொல்ல, அவன் அப்படித் தெய்வீகமானால் என்னிடத்திலும் அதுவரலாமேயென்றான். அவ்விருவரும் இப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போது அக்குழந்தை அரசனது மடியில் வந்திருந்தது.

அதை அவன்கண்டு இது அழகானந்தமோவென்று ஆனந்தமடைந்து அணைத்துகொண்டு தன்மனைவி கையிற்கொடுக்க, அவள் வாங்கினவுடனே ஸ்தனங்களினின்றும் பால்பெருக, அதனைக்குழந்தைக்குப் புகட்டினாள், இப்படி அற்புதமாய்வளர்ந்தது, பின்பு அனேகருக்கு ஞானோபதேசஞ்செய்து மகிமையோடிருந்தனர் மற்றொருதினத்தில் ஏலேலசிங்கரது கப்பல்கரைதட்டிப்போக, அதைக்கேள்விப்பட்டு அவர் தம்மரசருடனேசொல்ல, அவன்நம்மாலாகாதென்ன உம்முடைய ஆசாரியருடனேசொல்லுமென்ன, அவர்

போய் விண்ணப்பம் பண்ணிக்கொள்வதற்கு முன்னமே நாயனா ரறிந்து ஏலேலசிங்கரை அழைத்துக் கொண்டுபோய்க் கப்பலிற் கயிறுபூட்டி அனேகம்படவுகாரர் இழுத்தும் எவ்வளவும் அசை யாமற் பதிந்திருப்பதனாலே அவர்கள் சொல்லாஞ் சேர்ந்து கிடப்ப தைக்கண்டு நாயனார் அதனருகிற்சென்று தமதுதிருக்கையாற்றொ ட்டு * ஏலேலயாவென்றிழுங்களென்று கட்டளையிட அப்படியேயிழு த்தார்கள் உடனே நிற்கவேண்டியபடி கப்பல்நின்றது.

பின்பொருகாலம் மழையில்லாமையால் உலகத்தில்தானியங் கொள்ளக்கிடையாமல் அனேகர் இறந்துபோவதைக்கண்டு நாய னார் தமக்கு அன்புள்ள மாணாக்கனாகிய ஏலேலசிங்கரைப்பார்த்து நீர் இந்தபஞ்சகாலம் மாறுகிறவரைக்கும் வாங்கிக்கட்டிவைத்திரு க்கிற நெல்லையெல்லாம் வாங்கின விலைக்கு குறுணியேற்றமாக விற் கக்கடமை யென்றருள, அவரதுசொல்லை ஆகமாகக்கொண்டு விற் றார். பொருள் அதிகவிர்த்தியாய் மலைபோலுங் குவிந்தன அவர் கட்டிவைத்திருந்த நெல்லு யேழுவருஷம் குறைந்ததில்லை, பின்பு மழைபெய்து உலகம்க்ஷேமமடைந்து மறுபடி அவரையழைத்துக் குறுணிகுறைய வில்லென்றார். அப்படியேவிற்கநெல்லெல்லாம்மறு நாள் அஸ்தமனத்துக்குள்ளே செலவாய்ப் போய்விட்டன, பின்பு நாயனார் நீர்நெல்லுவிற்று விருத்தியானபொருளையெல்லாம் உருக் கித்திரட்டிக் கடலிற்போட்டுவிடுமென, அவர்அப்படியேசெய்தார் அதை ஒருபெருமீன் விழுங்கிற்று, சிலநாளைக்குப்பின்பு அம்மீன் வலைக்காரர் கையிலகப்பட்டது அதைஅவர்கள் சோதிக்கும்போ து அதன்வயிற்றில் மலினமும்பாசியும் படிந்தொருஸ்தம்பமிருக்க அதை ஏலேலசிங்கருக்குக் கொடுத்தார்கள், கருங்கல்லென்றெ ண்ணி ஸ்நானம் பண்ணுமிடத்திற் போடுவித்தார். அதன்மேல் நடந்தன்முதலிய பயிற்சியால் மலினநீங்கிப்பிரகாசித்தது. அதில் தமதுபேர் வெட்டியிருத்தலால்தம்பொருளென்றறிந்துகுருவருளை நினைந்து அற்புதமடைந்தார், இப்படியிருக்குங்காலத்தில் அளவில் லாத மகிமைசெய்து லோகப்பிரசித்தமா யிருக்கிறவரும் ஏலேல சிங்கருடைய புத்திரநிற்பாக்கியத்தை நீக்கினவருமாகிய அழகா னந்தரும் சிலபெரியோர்களும் திருவள்ளுவரைப் பார்த்து கற்றற செளிதால் இம்மையாதி மும்மைக்கு முதவியாய் லோகோபகார மாய் உமதுபேரால் ஒருநூல்செய்யவேண்டுமென்று சொல்ல,நாய னார் வேதாகமசாரங்களைத் திரட்டி அறம், பொருள், இன்பமென

* கூலியாட்கள் இப்பொழுதும் ஏலபலியென்றுசொல்லுவது வழக்கம்.

முப்பாலாக்கி 1330 குறள் வெண்பாவாற் பாடியருளினர். பின்பு அழகானந்தர் முதலாயினோர் நாயனரே இதைக்கொண்டு சங்கத்தாரை செயிக்கலாம் போமென்ன, அப்போதேநாயனர் புறப்பட்டுத் தமதுமனைவியை இல்லின்கணிருத்தித் தாம்வழிகொண்டு நடந்து இடைக்காடர்வசிக்கிற இடைக்கழிநாட்டை அணுகசேர்கையில் ஔவைநேர்பட அவளோடும் இடைக்காடரைக் கண்டு தாஞ்சொல்லும்வகையைச்சொல்ல, இடைக்காடரும்நாயனரைநோக்கி இடையாலுங்கடையாலு மழியக்கடவதென்றுஸ்வாமித்மைநிராதரித்த நற்கிராதிசங்கத்தாரை சபித்திருக்கிறர் ஆதலால்என்றுமும்மாறு மழிவுபடப் போகிறதாகையால் நாமும்வருகின்றோம் வாருமென்று இடைக்காடரும் ஔவையும்கூட வரப்பெற்று மதுரையையடைந்து சொக்கலிங்கஸ்வாமியினுடைய ஆலயத்தைப்பிரதக்ஷணமபண்ணி ஸ்வாமியையும் அம்மனையும் தரிசனஞ்செய்து சுவாமி சன்னிதானத்தில் பாண்டியராஜா மந்திரிபிரதானிகள் மற்றச்சனங்கள் ஔவை இடைக்காடர் முதலான பெரியோர்களிடமிருந்து கேட்கும்படித் தாமருளிச்செய்ததிருக்குறள்முப்பாலையும் சங்கத்தார்நெஞ்சிற் றிகிலேறவும் ஏனையற்நெஞ்சிற் களிப்பேறவும் அரங்கேற்றிமுடித்தனர் அதனைக்கேட்டோர்கள் யாவரும்மிகுந்த சந்தோஷமடைந்து ஆனந்தமாகி நாயனரைபுகழ்ந்து துதித்தனர்

பின்புநாயனர் இடைக்காடரும் ஔவையாரும் மற்றவர்களுஞ்சூழ்ந்துவர பொற்றாமரை தீர்த்தத்தின்கண்ணுள்ள சங்கைப்பலகையின்கண் தமிழ்க்கரசராக வீற்றிருக்கின்றவர்களுந்தலத்திலும் ஞானத்திலும் செந்தமிழ்வாக்கிலும் அமைந்தபெரியோராகியதிருவாதவூரென்னும் மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்ததிருக்கோவையார் நானூற்றுக்கும் நூறுகுற்றம் கூறினவர்களும்சொக்கலிங்கசுவாமி தமதன்பனாகிய தருமியென்னும் பிராமணனுக்குப் பொற்கிழிக்கொடுத்தாற் பொருட்டு அருளிச்செய்த கொங்குதேரென்னும்பாடலைக் குற்றம்கூறச் சோமசுந்தரனே வித்வானகவெழுந்தருளிவர நெற்றிக்கண் காட்டினுங் குற்றம் குற்றமேயென்று கூறினவர்களும் மற்றப்புலவர்கள் பாடிய பாடல்களை யெல்லாம் கொள்ளையிட்டு அகஸ்தியரையும் வெற்றிகொள்ளத்தக்கவிலக்கணவிலக்கிய வாராய்ச்சியுள்ளவர்களுமாகிய நற்கிராதியை நற்புலவர்களுடையதைரியமும் தருக்கும் புத்தியுங்கலங்கிச் சோர்வடையும்படி ஆட்டுக்கூட்டத்திற் புலி புகுந்தாற்போலவும், அராக்கூட்டத்தில் கருடனடைந்தாற் போலவும், யானைக்கூட்டத்தில் சிங்கம் வேறுசென்றாற் போலவும் மூங்கில்வனத்தில் தீப்பற்றியது போல

வும் அவர்களிடத்திற்சென்று அவர்கள் தம்மைவினவின அசதி விஞவிற்கெல்லாஞ் செந்தமிழ்ப்பாவா லுத்தரங்கொடுத்தார்.

பின்பு சங்கத்தார் நாயனுரைநோக்கி வள்ளுவரே! நீர்பாடிய குறளை நாம் ஒப்புக்கொள்வதற்கு ஐயமொன்றுளது அஃதியாதெனின் நாங்களிருக்கு மிந்தப்பலகை தெள்ளிய செந்தமிழ்நூலைக்கண்டா லிடங்கொடுக்கு மாதலால், அது ஒப்புக்கொள்ளுமாகில் எங்களுக்கெல்லாஞ் சம்மதியென்று சொல்ல, அவ்வாறே நாயனுர் தம்மாலருளிச் செய்யப்பட்ட திருக்குறள் முறையை அச்சங்கப் பலகைமீதுவைத்தார், உடனே அப்பலகை தன்னிடத்திருந்த சங்கத்தார் யாவரும் பொற்றுமரையில் விழும்படி தெய்வத்தன்மை பொருந்திய திருக்குறட் புத்தகத்தினளவாய்ச் சுருங்கி அதற்கு மாத்திர மிடங்கொடுக்கக் கண்டவர்கள் யாவரும் களிகூர்ந்தனர். அவருட்சிலர் இது தெய்விகமாகிய வேதமென்றுஞ் சிலர் ஆகமமென்றுஞ் சிலர் புராணங்களென்றுஞ் சிலவாலிபர் மதனுகமமென்றுந் தத்தமக்குத் தோன்றியவாறே சொல்லித்துதித்தனர். அன்றியும் அனேகவிசேஷமான தெலுங்காதி சாஸ்திரங்களும் கிரந்த முதலான பாஷைகளிலிருக்கின்ற பலநூல்களும் இத்திருக் குறளினது பாயிரத்தனேர் பாடலின்பொருளுக்கு மொவ்வாதென்றும் இதுவே வித்வான்களுடைய பாக்கியமென்றும், இந்தபயன் அனேகமாயிரம் அகஸ்தயர்கள் ஒருருவாகி வாதுபடப்பட்டதோ வென்றும் பலவித விலக்கண விலக்கியங்கட்கும் இத்தங்கத்தை யொக்குமென்றும், விஷ்ணுவானவர் இவ்வுலகை இரண்டடியாலளந்தார் இதுயெல்லாருளத்தையு மீரடியாலளந்ததென்றும், இதுசட்சமயத்திற்கும் பொதுநூலென்றும், உட்சமயத்துக்கே யுரியநூலென்றும் இப்படிக் கல்விமான்களும் அரசர்களும் மற்றவரும், கொண்டாடித் துதிக்கும்போது பொற்றுமரையில் விழுந்து தடுமாறி வருந்திய புலவர் நாற்பத்தொன்பதின்மரும் மிகக்கலங்கிக் கரையேறி நாயனுரையும் திருக்குறளையும் புகழ்ந்து துதித்து நாற்பத்தொன்பதுபாடல் அருளிச்செய்தனர். அதுது திருவள்ளுவமாலையெனப் பெயர்பெறும், அன்றிஇந்நூலாகிய ஞானவெட்டியையும் நாயனுர் செய்தார் என்பது பண்டையகாலந் தொட்டுப் பரம்பரையாக வழங்கிவருகிறது.

அச்சங்கத்தாரும் உக்கிரப்பெரு வழுதியென்னும் பாண்டியன் முதலானவர்களும் அத்யந்த ஆனந்தமடைந்து வெகுபூசிதம் பண்ணி இந்நூலை அகஸ்தியரும் ஒப்புக்கொளில் நல்லதென்னஅங்ஙனமே விடைபெற்றுப் பொதியமலைக்குப்போய் அகஸ்தியர் முத

லானவர்களைக் கண்டு தான்செய்த நூலைக்காண்பிக்க அவர்கள் அடைந்த சந்தோஷத்தையும் புகழ்ந்தபாடலையும் அனந்தனாலுஞ் சொல்லமுடியாது அவ்விடத்தில் கொங்கணசித்தர் வழிபட அவ ருக்கனுக்கிரகித்து நாயனார் உத்தரவு பெற்றுத் தான்முன்னே போம்போது வழியினேர்படாத ஸ்தலங்களையெல்லாம் தரிசனம் பண்ணிக்கொண்டு திருமயிலைக்குச் சமீபமாக வருவதை அப்பதி யாரும் ஏலேலசிங்கரும் கேள்விப்பட்டு எதிர்கொண்டு போய் அழைத்துவந்தார்கள் அவரும்வந்து தமதில்லத்தில் வாசுகி மாதி னோடுமிருந்தார்.

இப்படியிருக்கையில் ஒருபெரியவர் அவரில்லின்கட் சென்று ஸ்வாமி! இல்லறம்பெரிதோ? துறவறம்பெரிதோ? அடியேனுக்க னுக்கிரகிக்க வேண்டுமென்று பலநாள் பணிசெய்து காத்திருக்க நாயனார் அவருக்கு உத்தரம் ஒன்றுஞ்சொல்லாமல் அவரேஅறிந் துபோம்படி ஒருநாள் தமது வாசுகியென்னு மனையாள் கிணற்றில் ஜலம்தூக்கி கொண்டிருக்கையில் அழைக்க அந்தம்மாள் பாதிக்கி ணற்றளவினில் தூக்கினகுடத்தை அப்படியே நிற்கவிட்டுவந்ததை யும் மற்றொருநாள் அந்தம்மாள் நாயனாருக்குப் பழையதுபரிமாறி நிற்கையில் நாயனார் எனச்கிச்சாதம் சுடுகிறதென அந்தம்மாள்சீக் கிரம் விசிறிகொண்டு விசிறியதையும் மற்றொருநாள் நல்லமத்தியா னத்தில் சிறிதுமிருளணுகா விடத்தில் தாம் நெய்யும்போது கையி லிருந்த குழல் தவறிவிழுந்ததையெடுக்க மனையாளைநோக்கித்தீபங் கொண்டு வாவெனக்கொண்டு வந்ததையும் வந்திருந்தவர் கண்டு இப்படிப்பட்ட மனையாள்வாய்க்கில் இல்லறமே பெரியதென்றும் இல்லையேல் துறவறமே பெரிதென்று எண்ணிக்கொண்டு ஒன்றும் கேளாமற் போய்விட்டார்.

இப்படி நாயனாரும் திருமனைவியும் இல்லறம் நடத்திவருங்கா லத்தில் வாசுகியம்மாள் மோக்ஷமடையும்போது நாயனார் திருமு கத்தைப் பார்க்க நாயனாரும் ஏனென்றார், என்னைமணஞ் செய்த வன்று தேவரீருக்கு யானன்னம் பரிமாறும்போது ஒருசிறியபாத் திரத்தில் சல்மும்ஊசியும் வையெனக் கட்டளையிட்டதின்காரணம் என்னவெனத் தெரியவில்லையென்று விண்ணப்பஞ்செய்ய அதற்கு நாயனார் அன்னம்புறத்திற் சிதறில் எடுத்துப் பரிசுத்தம் செய்வ தற்கென்று சொல்ல உடனே மோக்ஷமடைந்தனள்.

அப்போது நாயனார் சொல்லியது

வெண்பா.

அடிசிற்கினியாளே யன்புடையாளே
படிசொற்றவறாத பாவா-யடிவருடிப்
பின்தூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
வென்றாங்கு மென்கண் ணிரா.

என்றருளி அந்தம்மாள் திருமேனியைச் சமாதி பண்ணினார் நாயனார் பின்னும் அனேகநாளிருந்து அனேகமகிமைகள் செய்து ஏலேலசிங்கர் முதலாகிய சிஷர்களுக்குப் பூரண அனுக்கிரகம் பண்ணி பின்பு ஏலேலசிங்கரை யழைத்து நமக்குப்பரிபூரணதிசை நேரிட்டிருக்கின்றதால் நான் பரிபூரணமான பின்பு நமதுதேகத்தைப் புரிகட்டி இழுத்து ஊர்க்குப்புறத்தில் புதரிற் போட்டுவிடு மென் றனுக்கிரகஞ் செய்து நிஷ்டைகூடிப் பரிபூரணமானவர்போ லிருக்கக்கண்டு ஏலேலசிங்கர் பொற்பெட்டியில் வைத்தடக்கம் பண்ண வெத்தனித்ததை அறிந்துடனே நாயனார் விழித்துப்பார்த்து அப்பா! நான்சொன்ன சொல்லைக் கடவாதையென்று அனுக்கிரகித்து உடனே பரிபூரணமானார். பின்ஏலேலசிங்கரும் நாயனார் கட்டளைப்படி செய்யுமளவில் திருமேனியில் சிதறிய தசைகளைக் காகமுதலானதுக ளருந்திய பொன்மயமானதைக் கண்டு பெரிதான ஆச்சரியமடைந்து அவர் திருமேனி யிருந்தவிடத் தாலய மெடுப்பித்துப் பூசித்துவந்தார்கள், இன்றும் நடைபெற்று வருகின்றது.

## திருவள்ளுவ நாயனார்

சரித்திரச்சுருக்கம்

முற்றுப்பெற்றது.

---

* வைகாசிமாதம் அனுஷ நக்ஷத்திரத்தில் என்று திருவள்ளுவநாயனார் புராணம் கூறுவதைக் காண்க.



உ

ஸ்ரீஸத்குருகடாக்ஷம்.

# பதிப்புரை

சேதனாசேதன வடிவாக விசைந்துள்ள, விப்பிரபஞ்சத்தில், பல்வகைத்தேகமு நீத்துமடைதற்கரிய, மானிடயாக்கையைப் பெறுவது மிக்கருமைத்தாதலின் (எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிதுகாண் எனவும், இத்தகையமானிடவடிவங் கிடைத்தது கொண்டு, தாமதியாமல் இந்திரியப்பராக் கொழித்தும், யெழுந்தெழுந்து பலதலைப்பட்டிழுஞ் சேயினுழலு மனத்தினையடக்கியும், இதையாம் பரத்திலெதிரற்ற பரிபூரணசிதானந்தகனி பூதவடிவாக நினைத்தும், அதன்பலத்தினால் இப்பிறவானிலையை அதாவது சூக்ஷ்மசரீர கமனத்தைக் கெடுத்துச் சிதேகரசமாதலே, முக்கியப் பிரயோசனமாதலால் (ஞானநெறி முக்கிய நெறி) எனவும்.

இந்நிலையைப் பெறுதற்கின்றி யமையாதது யோகசாங்கியமென்னும் இருநெறியே யென்பதைப் (பற்றுவனவற்றிடு நிராசை யென்றொரு பூமி பற்றிப்பிடிக்கும் யோகப்பாங்கிற் பிராணலயமென்னுமொரு பூமியிவைபற்றின்மநமறும்) எனவும்இவ்விருநெறியும் சாதனத்திலும் அவர்ந்தரமாய சித்திகளிலும் பேதமன்றிச் சாத்தியமொன்றேயாமெனப் பலநூலுங்கூறும், இவ்விரு நெறியிலொன்றையாவது மேற்கொண்டு பயிலாதுவாளாவுடலம் விழுந்துவிடவும் யேனையசரீர ப்ராப்தியுறில் பல்வகைக்கிலேசமு மொழியுமார்க்கமில்லாது ஜனன மரணப்பிரவாகம் நஷ்டமாவது மின்றாமென்பது தோன்ற (இப்பிறவிதப்பினால் யெப்பிறவி வாய்க்குமோ யேதுவருமோ அறிகிலேன்) எனவும் (தேகமேநழுவினாலுமோநழுவின் பின்னையுய்யு நெறியுள்ளதோ) எனவும்.

இதில் சாங்கியமென்பது விசாரத்திற்காம், இதனையடைவது பிரபலகரும் மற்றவனாகியும் யோகபலத்தால் மனோசலனமற்றும் சாந்தியாகிய குணங்களைப்பெற்றும் முமுக்ஷுத் தன்மையுடைய புருஷனால் சத்குருலாபத்தினால் அடைந்தும் முடிவில் உடலுமுயிரும் அப்பிலுப்பெனக் கரைந்து விடுவதாம், அன்றியும் சூக்ஷ்மசரீரத்துடன் (தத்தாயோதக நியாயமாக) காய்ந்தஇருப்பிற்பட்ட நீர்த்துளிபோற் கரைந்தானந்த சொரூப மாவதம்; இதனைப்

(பிறவாதநெறியெனக்குண்டென்னி லிம்மையேகற்பூரதீபமின்னும் படிக் கண்டாகார அன்னைபால் வினையேனை யொப்பிவித்து வீட்டு நெறிகூட்டிடுதல் மிகவும் நன்றாமெனவும்.

இந்நெறியடைவான்றடையாய கருசேஷமுளதேல் அதாவது சிலஜென்மத்திற் கேதுவுளதாயின் சித்தயோகநெறியில் ஆசான னுக்கிரகித்தவாறு இயமாதிகளுடன் பயின்று பிராணாபானசம் யோகத்தாற்கும்பகம் சித்திச்சுழிமுனைவழியே சந்திரமண்டலமே கியமிர்த தாரையையுண்டும் சகலநாடி நரம்புகளிலும் பாயப்பசி தாகம் நரைதிரை முதலியனமாறி நீண்டவாணளைப் பெற்றுக் கருமபோகங்கள் யாவும் புசித்தீற்றில் தோன்றியவாறொடுங்கி யத் வைதசொரூபமாதலெனவும் இதனை (இன்னம்பிறப்பதற்கிடமென் னில் இவ்வுடல் மிறவாதிருப்ப மூலத்தெழுமங்கி மதிமண்டலத்தி லூற என்னம்மை குண்டலினி பாற்பின்னம் பிறக்காது சேயென வளர்த்திடப்பேயேனைநல்கவேண்டும்) எனத்தாயுமானஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளியவாறே.

காருண்யக்கடலாகிய இந்நூலாசிரியரும் மேற்கூறிய விருமா ர்க்கமும் விளக்குவான் சர்வசமையப் பொதுவாகச் செந்தமிழ்புல வர் தேக்குமாறு திருக்குறளால் சாங்கியத்தினையும், இந்நூலால் யோகத்தினையும் விரித்தும் விளக்கியுள்ளா ரெனப்புலனாகின்றது.

இங்ஙனமின்றித் திருவள்ளுவநாயனார் சொல்வளம் பொருட் பொலிவுமலியப்பெற்ற திருக்குறள் கூறியவாக்கினால் சொற்சிதை வும் பொருட்திரிபாதியபல இலக்கணவழிக்கள்நிறைந்ததும்எழிய நடையும்பெற்ற ஞானவெட்டியினைக் கூறிலார்மற்றோ பிற்காலத்தி லெவரோ ஒருவர்செய்து திருவள்ளுவர் கூறியதாக வரைந்துளதெ னப்பலரும் ஐயப்படுகின்றனர். இவ்விருநூலினையும் சாவதானத் துடன் உற்றுநோக்குவாராயின் உண்மைபுலப்படாது போகாது, அன்றியும் குறளிலோ மனோசாஞ்சல்யத்திற் கேதுபூதமாகிய தீய குணங்களை யகற்றவும் சற்குணங்களைப்பெறவும் அதன்யேதுவால் உண்மையுணர்வைப் பெறு மார்க்கத்தினைக் கூறியுள்ளது அதனுள் உபாசனைகிரமமும் மனோலயமும் கூறாததுகொண்டு இவ்விருநெறி யிலும் பழகிய புருஷருக்கே குறள் இறித்தென்பது தெற்றென விளங்குகின்றன. அந்நூலுக்கே பலவித்வான்கள் உரைகூறியும் பயன்படாது. பரிமேலழகர் உரையொன்றுமேயாவரும்போற்றத் தக்கதாயுளது, அதிலும் இக்காலத்திய வித்வான்கள் குறைகூற வும் கிடக்கின்றது.

ஞானவெட்டியிலோ மணிமந்திரவவுத பூர்வகமாகிய துணையி னுல் அட்டாங்கயோகம் பயிலும்விதிகளும் பத்தியங்களும் இடை யிலுண்டா மிடையூறுகளைத்தவிற்கு முபாயங்களும் பலனும்தேவி யையு யுபாசிக்குமியல்பும் பலனும் மருந்தினையெடுக்குமிடம்காலம் செய்யுங்கிரமமும் முடிந்தபோதுள்ள பரிசைக்ஷகளும் உண்ணுங்கிர மமும் அக்கால்நேரிடும் அபத்தியமபமிருத்து வாதியவிடுக்கனும் அதனைத் தவிற்குநெறியும் இவைகளினலடையும் தேகசித்தியோக சித்தி வாதசித்தி தேவதாசித்தி யணிமாதி கெவுனசித்திகளும் மந் திரங்களுக்குரிய கருமானமுதலியதும் ஜாலவகைகளுக்குரிய சாத னங்களும் விஸ்தாரமாகவுங்கூறி இவைகளைச் சித்திக்கச் செய்ய வல்லகுருநான்இன்னராகத் தானிருக்கவேண்டுமெனவும்இந்நூல் முடிவுறுதென்பதும், இத்தகைய கஷ்டசாத்திய நெறியிலவா வெ ளுப்புவான் அனேககஷ்டவடிவாகிய கெற்பவாசம் பிறத்தல்வளர் தல் வயோதிகம் மரணம்ஆகிய அபத்தைகளை விரிவாகக்கூறியுள்ள தால் காருண்யசொரூபராகியநாயனர் இலகுபாஷையன்றிக் கடின பாஷையிற் கூறியிருப்பரேல் இந்நூலினையெவரும் கரத்திலும்பரிசி யாரென்பதுதான் திண்ணம்.

சந்தச்சிதைவாதிய பிழைபாடுகள் பின்பின் எழுதினவர்கள் குறைவென்றே யூதிக்கவிடனுகின்றது.

இவர்காலத்துச் சாதிபேதச் சண்டைகள் பலவா இருந்தது கொண்டு இவரைப்பறையனென்று பலரும் இழிவாகக் கூறியது கொண்டு சாதிபேதகத்தின் காரணத்தின் சூக்ஷமத்தினைத் தெளி வாகவும் கூறியுள்ளார்.

ஞானவெட்டியானென்பது வெட்டியானென்போன், கிராம ங்களில் ஆடுமாடு வீடு விளைநிலம் தான்யம் முதலியவற்றைக் காப் போனென்பதாம், ஆலவாய்த்தமிழ்ச் சங்கமழிவது (இடையாலும் கடையாலும்) என்றவசனத்தினுல் கடையென்பது பஞ்சமஜாதி யைகுறிக்குமாற்றுல் இவரைவெட்டியானுக இருக்கவேணுமென்று வற்புருத்தியது கொண்டோ இருந்தபோது இழிவாக நடத்தியது கொண்டோ யேனையவெட்டியான் போன்றுயான் அஞ்ஞான வெ ட்டியான் அன்று எனமறுக்க வேண்டியோ இந்நூலிலுள்ள விளி கள் அதாவது முன்னிலைப்படுத்துஞ் சொற்கள் ஆண்டேஎன்றது மிகுத்துள்ளது அதனுல்தன்பெயரை நுலுக்கிட்டுக் கூறியதாகவும் தெளிவாகின்றது அன்றி ஞானவெட்டியான்-ஞானம் - அறிவுவெ ட்டி யார்க்கம்-ஆன் உடையபுருஷனைக்குறித்தலால்-ஞானமார்க்க

முடையவன் எனஅன்றியும் நாயனாரே இந்நூல்செய்தன ரென்ப தற்குறிய ஆதாரங்களின்னூலிலே காணப்படுகின்றன அவைபா வன தான்குறள் செய்ததாகவும் சங்கத்தாரை வென்றதாகவும் பிரமாசரஸ்வதி பிதாமாதாவானதும் மனைவியுடனிருந்து இல்லற த்தினை நடத்தியதாகவும் நெசவுத்தொழிலியற்றியதாகவும் கொங் கணசித்தருக்குச் சகாயம் செய்ததாகவும் அன்றி ஒருகாரணார்த்த மாகச் சிறுநீரினைச் சுவற்றில்தெளித்துச் சுவர்னமாக்கிக் காட்டிய தும் முடிவில் சரீரத்தினை ஊர்ப்புறத்திலிடச்செய்து அதனையருந் திய பலபக்ஷிகள்யாவும் பொன்மேனிபெற்றுச் சென்றதாகச்சரித மிருப்பதாலும் இவைகளை யோசிக்குமிடத்துச் சித்தயோகசாத்தி யர்க்கன்றி யேனையோர்க்கு இத்தகையசித்திகள்பொருந்தாகலின் இந்நூல்செய்தவர் நாயனாரென்றே துணியப்பெறுகின்றது, இனி யொருவகைச் சந்தேகமுளது அதாவது, மாதாபிதாக்களின் சம் பந்தமுடிவிலேயே ஜெனித்தும் மாதாவுக்குச் சமாதானம் கூறிய கவிகளுமிருக்க இந்நூலில்தான் பத்துமாசம் கெற்பவாசம் செய்த தாகவும் அப்போது அடைந்ததுக்கமும் குழந்தைப் பருவத்தில டைந் துன்பமும் பிறவும்கூறியதாம் இதனையூகிக்கில் தான்முன் ஜென்மங்களிலனுபவித்ததைப் பூர்வக்ஞான விசேஷத்தாலுணர்ந் தும் யேனையோரடையும் துன்பங்களை யெடுத்துக்கூறி விழிப்புண் டாக்கவும் கருதியே என்று கொள்ளற்கேதுவாகின்றது.

கம்பராமாயணம் நைடதம் செய்ததைக் கூறியதுகொண்டு இவரிருந்தகாலம் வரையறுத்துக்கூறவியலாதாகின்றது இதிலுள்ள விரிவஞ்சிவிடுத்தாம் தக்கார்பாலடுத்துத் தெளிந்து இந்நூலைக் கோடல்தகுதியாம்.

இந்நூல் செந்நாப்போதகர் என்பதாகியபல சிறப்புப்பெயர் பெற்ற மகாபுருஷரா லியற்றியதென்று தோணுவதால் இதன்கண் ணுள்ள சிலவற்றைமாத்திரம் செப்பஞ்செய்து அச்சிடப்பட்டது சரிவரமாற்ற மனந்துணிவுறாது இத்துடன் விடுத்தாம்பிழை பாடு ளதேல் அறிவுடையார் பொறுப்பது கடனாம்.

இப்படிக்கு,

ஸ்ரீ மூ வி ரு மு க க் சு க ம்.

பிரமவிட்டுணுக்கள் அண்டத்திற் செய்வதுபோலவே பிண்டத்திலும் தத்தம்செய்கைகளைச் செய்யவேண்டியது அத்தியாவசியமா யிருத்தலால் அவர்களை அண்டபிண்டநிறைந்துநின்ற அயன்மால் என்றும், சர்வவியாபகத் திருவருளையே இந்நூல் உட்கிடையாகக் கொண்டிருத்தலின் 'அகண்டபரிபூரணத்தினருள்' என்றும், அப்படியாகச் சொல்லப்பட்ட இந்நூலானது சந்திர சூரியர்கள் உள்ளவரைக்கும் உலகத்தில் நிலவவேண்டுமாதலால், 'மண்டலஞ்சூழிரவிமதி' என்றும், இந்நூலிற் சொல்லப்பட்டுவரும் ஒவ்வொரு விஷயமும் அக்கினியில்லாமல் முடிவுபெறாதாதலால் 'சுடரை' என்றும் சொல்லப்படுவது தமிழாதலால் அத்தமிழ் தெய்வத்தை 'மதுரதமிழோது மகத்தியனை' என்றும், இவ்வளவும் குருவருளாற் கிடைக்கப் பெற்றதாகலாலும் அக்குரு எட்டுத்திசைகளிலும் உள்ளாரால் புகழப்பட்டவராதலாலும், 'எண்டிசையும் புகழுமெந்தன் குரு' என்றும், இந்நூலுள் திரிநாடிகளின் விஷயமேபெரும்பாலும் சொல்லப்பட்டதாதலால், 'இடைகலையின் சுழிமுனையின் கமலம்' என்றும், இவையெல்லாம் அகத்தின்கண் ஞானமேயாகுமென்று வெளிப்படுத்தும்படி வேறொருபெயரால் விநாயகரைக் கூறாமல் 'குண்டலிக்குளமர்ந்த விநாயகன்' என்றும், அங்ஙனம் விநாயகனைச்சொல்லி முருகனைச் சொல்லாதிருப்பது முறையன்றாதலாய் 'குகமணியின் தாளிணை' என்றுங்கூறினார்.

நான்சொல்லும் இந்தநூலானது யாதொருவிக்கினமும்வாராதபடி சுகமே நிறைவேறும்பொருட்டு மேலேசொன்ன தேவர்களையும் இனிச்சொல்லவிருக்கும் தேவர்களையும் வணங்கியதெனக் கொள்க. (க)

குகனருளின்கிருபையினா லிந்நூல்ஞானங்
கூர்ந்துநவசித்தர்மொழி குறித்துஆய்ந்து
புகழமிர்தச்செந்தமிழா யிரத்தைந்நூறு
புகலவும்பூதலங்களெல்லாஞ் செழித்துவாழ்க
அகமகிழுமம்பிகைப்பெண் ணருளினாலே
யவனிதனில்ஞானவெட்டி யருளயானும
நிகழ்திருவள்ளுவநாய னுரைத்தவேத
நிரஞ்சனமாதின்மொழி ரவிகாப்பாமே.

(இ-ள்.) சுப்பிரமணியக்கடவுளுடைய திருவருளாலும், பார்ப்பதாதேவியினுடைய கிருபையினாலும், நவசித்தர்களும் திருவாய்மலர்ந்திருக்கும் நூல்களையெல்லாம் நன்றாகவாராய்ந்து உலகத்தா

பிரமவிட்டுணுக்கள் அண்டத்திற் செய்வதுபோலவே பிண்டத்திலும் தத்தம்செய்கைகளைச் செய்யவேண்டியது அத்தியாவசியமா யிருத்தலால் அவர்களை அண்டபிண்டநிறைந்துநின்ற அயன்மால் என்றும், சர்வவியாபகத் திருவருளையே இந்நூல் உட்கிடையாகக் கொண்டிருத்தலின்' அகண்டபரிபூரணத்தினருள் என்றும், அப்படியாகச் சொல்லப்பட்ட இந்நூலானது சந்திர சூரியர்கள் உள்ளவரைக்கும் உலகத்தில் நிலவவேண்டுமாதலால், மண்டலஞ் சூழிரவிமதி' என்றும், இந்நூலிற் சொல்லப்பட்டுவரும் ஒவ்வொரு விஷயமும் அக்கினியில்லாமல் முடிவுபெறாதாதலால் 'சுடரை' என்றும் சொல்லப்படுவது தமிழாதலால் அத்தமிழ் தெய்வத்தை 'மதுரதமிழோது மகத்தியனை' என்றும், இவ்வளவும் குருவருளாற் கிடைக்கப் பெற்றதாகலாலும் அக்குரு எட்டுத்திசைகளிலும் உள்ளோரால் புகழப்பட்டவராதலாலும், 'எண்டிசையும் புகழுமெந்தன் குரு' என்றும், இந்நூலுள் கிரியாதிகளின் விஷயமேபெரும்பாலும் சொல்லப்பட்டதாதலால், இடைகலையின் சுழிமுனையின் கமலம்' என்றும், இவையெல்லாம் அகத்தின்கண் ஞானமேயாகுமென்று வெளிப்படுத்தும்படி வேறொருபெயரால் விநாயகரைக் கூறாமல் 'குண்டலிக்குளமர்ந்த விநாயகன்' என்றும், அங்ஙனம் விநாயகனைச்சொல்லி முருகனைச் சொல்லாதிருப்பது முறையன்றாதலாய் 'குகமணியின் தாளிணை' என்றுங்கூறினர்.

நான்சொல்லும் இந்தநூலானது யாதொருவிக்கினமும்வாராதபடி சுகமே நிறைவேறும்பொருட்டு மேலேசொன்ன தேவர்களையும் இனிச்சொல்ல விருக்கும் தேவர்களையும் வணங்கியதெனக் கொள்க. (க)

குகனருளின்கிருபையினா லிந்நூல்ஞானங்
கூர்ந்துநவசித்தர்மொழி குறித்துஆய்ந்து
புகழமிர்தச்செந்தமிழா யிரத்தைந்நூறு
புகலவும்பூதலங்களெல்லாஞ் செழித்துவாழ்க
அகமகிழுமம்பிகைப்பெண் ணருளினாலே
யவனிதனில்ஞானவெட்டி யருளயானும்
திகழ்திருவள்ளுவநாய னுரைத்தவேத
நிரஞ்சனமாதின்மொழி ரவிகாப்பாமே.

(இ-ள்.) சுப்பிரமணியக்கடவுளுடைய திருவருளாலும், பார்ப்பதாதேவியினுடைய கிருபையினாலும், நவசித்தர்களும் திருவாய் மலர்ந்திருக்கும் நூல்களையெல்லாம் நன்றாகவாராய்ந்து உலகத்தா

ர்கள் உஜ்ஜீவிக்கும்படியாக ஞானங்களையே நன்குகிரப்பித்தமிழ்ப்பாக்கள் ஆயிரத்தைந்நூற்றால் ஞானவெட்டியான் என்கிற பேரமைத்து ஒரு அருமையான நூலை நான்சொல்லும்பொருட்டு விளங்குகின்ற திருவள்ளுவநாயனாரால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட சாஸ்திரமாகிய வேதசூரியன் காத்துரக்ஷிப்பான்.

இந்நூலாசிரியர் முருகக்கடவுளையும், உமை யம்மையையும் உபாசிப்பவரென்பார், 'குகனருளின்கிருபையினால்' எனவும், அம்பிகைப் பெண்ணருளினால்எனவும் தமிழ்ப்பாஷையைவிட உயர்ந்த பாஷையில்லை யென்பார். செந்தமிழ் எனவும், இந்நூலால் உலகத்தார்கள் க்ஷேமமடைவார்கள் என்பார்'பூதலங்களெல்லாஞ் செழித்துவாழ்க' எனவும், இந்தநூலே ஒருவெட்டியானும் அவன்சொல்லுவனவெல்லாம் ஞானமுமாகையால் இதற்குபேர்ஞானவெட்டியான் என்பார் அவனிதனில் ஞானவெட்டியருள்' எனவும், இதற்குத் திருவள்ளுவருரைத்த நூல் முதற்காரணமாய்க் காப்பாற்றுவதென்பார், 'திகழ்திருவள்ளுவ நாயனாருரைத்த வேதநிரஞ்சனமாநிலவுபொழிரவிகாப்பாமே' எனவுங் கூறினார்.

ஆயின் இச்செய்யுளால் இந்நூலுக்காசிரியர் திருவள்ளுவநாயனாரவ்லர் என்று வெளிப்படுகின்றது. ஆனால் கர்ணபரம்பரையாக திருவள்ளுவநாயனாரே இந்நூலுக்காசிரியர் என்று வழங்கிவருகிறது. இதுபோலவே இந்நூலுள் ஆங்காங்குத்திருவள்ளுவநாயனார் செய்ததாகவே சொல்லப்பட்டிருக்கிறது. இதுபற்றியே பெரியவர் வாக்கெனப்பாட்டைத் திருத்தாமல்விட்டனம். (உ)

நிலவுபொழியிரவிமதி யருளினாலே
   நின்றிலங்குநாதவிந்தி னிருவிகாப்பு
வலமிடமாய்சூழ்ந்துவருங் காரசாரம்
   வழலையெனுமாமதுர வாணிகாப்பு
உலகமதிற்கடல்சூழ்ந்த புவனைவாலை
   யோங்காரமூலகணபதியேகாப்பு
தவமதிதசனகா கி ரிஷிகள்பாதஞ்
   சடாதாரசூக்ஷ்சடா தாரங்காப்பாம்.

(இ-ள்.) கிரணங்களை வீசாநின்ற சூரியசந்திரர்களது கிருபையினாலிருந்து விளங்காநின்ற நாதமும், விந்துவும், வலமிடமாக்ச் சுற்றிச்சுற்றி வருகின்ற (காரசாரமென்றும் ;வழலையென்றும்உபசாரமாகச்) சொல்லுகின்ற மதுரவாசகத்தை யுண்டாய் சரஸ்வதியும்,

கடலாற் சூழப்பட்ட இவ்வுலகத்தார்களால் துதிசெய்யப்படுகின்ற வாலையும், பிரணவமயமான மூலாதாரகணபதியும் மிக்கவும் மேம்பாடுடைய சனகன்முதலிய ரிஷிகளுடைய பாதங்களும் தூலசடாதாரமும் சூட்சுமசடாதாரமும் (இந்நூல் இனிதுமுடியும் பொருட்டு காவலாகவிருக்கும் எ-று.

நாதமும் விந்துவும் சூரியசந்திர மண்டலங்களிலேயே விளங்க வேண்டுமென்பார், இரவிமதியருளினிலே நின்றிலங்கு நாதவிந்தினிருவிகாப்பு' எனவும், காரசாரவழலைகளையே இந்நூலிற் கூறப்படும் விஷயத்திற்குச் சரஸ்வதியாக உவமித்ததென்பார், காரசாரவழலையெனுமாமதுர வாணிகாப்புஎனவும், இந்நூலில் ஆதாரங்களைச்சொல்லி யிருத்தலின் மானைக்காட்டி மானைப்பிடிக்க வேண்டுமென்கிற நியாயம்பற்றி அவ்வாதாரங்களையும் 'சடாதாரம்சூட்சும சடாதாரங் காப்பாம்' எனவும் கூறியதெனக்கொள்க. (௩)

சடாதாரமதிலிலகுந்தவளவாணி சரஸ்வதியும்பிரமன்பதமாலின்பாதம், *நீடாழிலட்சுமிப்பெண்ணருளின்பாதம்நிரஞ்சனருத்திரன் பாதநேமிபாதங், கடாகமெல்லாநிறைந்துநின்ற மயேசன் பாதங் கருணைமயேஸ்வரியினிருகமலபாதங், தடாதசதாசிவத்தின் மனோன்மணியின்பாதஞ் சாம்பசிவன் பொற்பாதஞ் சந்ததமுங் காப்பாம்.

(இ-ள்.) தூலசடாதாரத்தில் எழுந்தருளியிருக்கும் வெண்மை நிறத்தை யுடையவளான சரஸ்வதியின் திருவடிகளும் பிரமதேவனுடைய திருவடிகளும் விஷ்ணுவின் திருவடிகளும் திருவருள் கடாட்ச வீட்சண்ணியத்தை யுடையவளான இலட்சுமிதேவியின் திருவடிகளும் உருத்திரமூர்த்தியின் திருவடிகளும் அவன் மனைவி யாகிய வாமியின் திருவடிகளும் அண்டகடாகமெல்லாம் வியாபித்திருக்கின்ற (சர்வவியாபகனாயிருக்கின்ற) மகேசனுடைய திருவடிகளும் அவன்மனைவி மகேஸ்வரியின் திருவடிகளும் யாவருடைய நாவிற்கும் இப்படிப்பட்டவனென்று சொல்வதற்குக்கூடாத சதாசிவனுடைய திருவடிகளும் அவன்மனைவி மனோன்மணித்தாயின் திருவடிகளும் இவைகட்கு மேற்பட்ட பதவியோனெனச் சொல்லுகின்ற சம்பசிவமூர்த்தியினுடைய திருவடிகளும் (இந்தநூல்இனிதுமுடியும்பொருட்டு) சதாகாலமும் காவலாகவிருக்கும் எ-று.

மேற்கூறிப்போந்த தேவர்களுடைய திருவடிகளை யெல்லாம் வணங்கவேண்டியது நூற்பரம்பரையாகையால் அப்பரம்பரை தவிராமல் கூறினரென்க.

பாதமடிமூலநடுவிந்தின்மூலம் பராபரையின்வீடு பரப்பிரம வீடு, ஓதுசந்திரபுஷ்கரணி மாலின்வீடு ஓமெழுத்தாய்நின்றிலங்கும் ருத்திரன்வீடு, நாதவிந்தின்மேருமுடிசுடரின்வீடு நாதாந்தமயேஸ்வரத்தின்வாயுவின்வீடு, சூதமுனியீசனுறவாடும்வீடு சோதிமெனு மாக்கினையின் காப்புத்தானே.

(இ-ள்.) பாதத்தின் அடி-மூலம்நடுமூலமும், விந்துமூலமும்பராசத்தியின்வீடும்,பரப்பிரமத்தின்வீடும், சந்திரபுஷ்கரணியையுடைய திருமாலின்வீடும், ஓமெழுத்தின்மயமாய் நின்றிலங்கும் உருத்திரன் வீடும், நாதவிந்துக்களினையுடைய மேருவாகியவீடும், நாததத்துவத்திற்கு அதிகப்பட்டவாயு பூதவிடமான மகேஸ்வரத்தின்வீடும் சூதமுனியும் ஈஸ்வரனும் உறவாயிருந்தாவிளையாடும்வீடும், தேஜோமயமான ஆக்கினையின்வீடும் (இந்நூல்இனிதுமுடியும்பொருட்டுக்) காத்துரக்ஷிக்கும் எ-று.

அடிமூலமென்றது மூலாதாரம். நடுமூலமென்றது அநாகதம். சந்திரபுஷ்கரணியென்றது பிறைவடிவை. அதனிடத்திற் சலம்பெருகுவது சுபாவமாகையால் இவ்வணம் கூறினார். சூதமுனியுமீசனுறவாடும்வீடு என்றது சுழிமுனைவீட்டை. இதுவே மௌனவீடென்றுஞ் சொல்லப்படும். (ரு)

ஆக்கினைக்குள்சத்தம்பிருதிவிபீட மப்புவின்வீடுவன்னி வாயுவின்வீடு, ஏக்கமில்லாவாகாசமேருவீடு இரவிமதிசுடரிலகு மின்பவீடு, பார்க்கபணமுடிநடுவில் நடனஞ்செய்யும்பராசத்திசிங்காதனத்தின்வீடு, பூக்குமலர்வாசியிருந்துலவும்வீடு புகழ்பெரியவைம்பூதம் புலன்காப்பாமே.

(இ-ள்.) ஆக்கினைக்குள்ளிருக்கும் சத்தமும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், மேரு, சூரியசந்திரர்கள் ஆகியஇவைகளின் வீடும் ஆதிசேஷனுக்கு நடுவாயிருக்கும் தலையினின்றும் நடனஞ்செய்கின்ற பராசத்தியானவள் சிங்காசனத்தில் கொலுவமர்கின்ற வீடும் சரமானது மாறிமாறி உலாவுதற்குரியவீடும் ஐம்பூதங்களும் அவற்றிற்குள்ளீடாய் விளங்கும் ஐம்புலன்களும் இந்நூலை யாதொரு இடையூற்றிற்குள்ளும் அகப்படுத்தாமல் காத்துரக்ஷிக்கும்.

பூதாதிபிருந்துவிளையாடுபீடம் பொற்கமலமாயிரத்தெட்டிதழின்பீடம், நாதாக்கள்திருநடனமௌனபீடம் நந்தியொளிவிந்து செகநாதபீடம், வேதாந்தபூரணமெய்ஞ்ஞானபீடம் வித்தாரவாகமத்துக்கதீதமான, ஆதாரமூலவன்னி பீடமாந்தபீடமாநந்தநடனசபை யைந்துங்காப்பாம்.

(இ-ள்.) பூதங்களிருந்து விளையாடுதற்குரிய பீடமும் ஆயிரத் தெட்டிதழ்த் தாமரைமலரானது இருக்கத்தக்க இடமும் பெரிய நாதாக்களெல்லாம் அசைவற்றிருந்து மௌனஞ்செலுத்தின பீடமும் நந்தியொளியை வீசுகின்ற-விந்துஸ்தானமாகிய ஜெகநாதபீடமும் வேதாந்தநூல்களிற் கூறப்பட்ட பூரணஞானபீடமும் மிகவும் விரிந்திருந்த ஆகமநூல்களுக்கு அதீதப்பட்டுள்ளதான மூலக்கனலிலமர்ந்திருக்கும் பீடமும் பஞ்சகிர்த்தியத் தாண்டவஞ்செய்யும் ஐந்துசபைகளும் ஆகியயாவும் சேர்ந்துகொண்டு என்றுற் சொல்லப்பட்ட இந்தநூலைக் காத்துரக்ஷிக்கும் எ-று. (எ)

ஐந்துநவாயுடலெடுத்தவாறின்கூறு மசடில்லாத்தேக மெண்சாணுத்துமக்கூறும், விந்துதித்துச்ச டமெடுத்த நாதக்கூறும் விற்பனமாய்ச்சட முதித்தகாயக்கூறும், தந்திரமாய் நீர்க்குமிழியான கூறுந் தத்துவந்தொண்ணூற்றாறு சைலக்கூறும், இந்திரியசுக்கில சுரோணிதத்தின்கூறு மியம்புதற்குத் தசநாடியியல்பு காப்பாம்.

(இ-ள்.) இந்தத்தேகமெடுத்த விதத்தையும் இந்த எண்சாண் தேகத்தில் வந்திருக்கும் ஆன்மாவின்கூறும், விந்துநாதங்களால் எவ்வாறு தேகம் வந்ததென்பதையும், அப்படிவந்த தேகக்கட்டுகளின் விதத்தையும் அதுநிலையில்லாமல்பிரிற்றேன்றும் முட்டையைப்போல் அழிந்துபோகும் வகையையும் இதுதொண்ணூற்றாறு தத்துவத்தோடு கூடியிருக்கிற தன்மையையும் சுக்கிலம் இப்படிப்பட்டது. சுரோணிதம் இப்படிப்பட்டது என்பதையும் நன்றாகச் சாங்கோபாங்கமாகச் சொல்லுதல்பொருட்டு தசநாடிகள் காத்து ரக்ஷிக்கும் எ-று. (அ)

தசநாடிசுவாசமதுஞ் செனித்தவாறுஞ் செகதலத்திலெனைப் பழித்தசெய்திவாறும், அசைவதிருந்தாக்கையசையாதவாறு மடிநடுவுமுடிவானகற்பவாறும், பசைந்தமண்ணிருப்புவுவெரித்தவாறும் பஞ்சபட்சியஞ்சுநிலைத் திருந்தவாறும், இசையுந்தசதீட்சை மதிரவியின்வாறு மிராஜயோகத்தினருள் காப்புத்தானே.

(இ-ள்) தசநாடிகளும் தசவாயுவும் உண்டான விதத்தையும், இவ்வுலகத்திற்கண் என்னைப்பழித்த விதத்தையும், இந்தத்தேகத்தை அழியாமலிருத்தி வைக்கத்தக்க மார்க்கத்தையும் ஆதிநடு அந்தமாயிருக்கும் கற்பங்கள் சாதிக்கும்விதியையும் பூமிநாதத்தை எடுக்கும் விதத்தையும் இந்தத்தேகத்தில் பஞ்சபட்சி நிலைத்திருக்கும் விதத்தையும் தசதீட்சையின மார்க்கத்தையும் சந்திரசூரியர்

களின் தன்மையையும், நான்சொல்லுதற்பொருட்டு சிவராஜயோகத்தின் திருவருளானது காத்துரக்ஷிக்கும் எ-று. (௯)

யோகாதியோகநிலைத் திருந்தபேர்க்கு முற்பனமாங் கற்பமுண்டுசாவாப்போக்கும், வேகாத்தலையுமதிரவியின்போக்கும்வெண்சாரைகருநெல்லி விதித்தபோக்கும், போகாப்புனலுஞ் சவர்க்காரப் பூநீர்போக்கும் பூதலமெலாமகிழும் பொருளின்போக்கும், ஆகாதமனிதர்களையகற்றும்போக்கு மசடில்லாரது ரசகுளிகை காப்பாம்.

(இ-ள்.) யோகமும், மகாயோகமும், நிலைத்திருந்த விதத்தையும், கற்பம் புசிக்கவேண்டிய முறைப்படி புசித்துச் சகாமலிருக்கும் விதத்தையும் வேகாத்தலையையும், சந்திரசூரியர்களென்று சொல்லப்படுகின்ற கலைகளின் மார்க்கத்தையும், வெண்சாரை,கருநெல்லியென்னும் மிவற்றின் விவரத்தையும் எக்காலத்தும் நீங்காத் சுத்தசலமார்க்கத்தையும், சவர்க்காரமென்று சொல்லப்படுகின்ற பூநீற்றின் மார்க்கத்தையும் அதினால் உலகத்தார்களெல்லாம் பொருளுடையவர்களாக வேண்டியமுறையையும் இத்தொழிலுக்குஉபயோகமாகாத மனிதர்களை நீக்கிவிடுகின்ற விதத்தையும் (என்னுடைய ஞானாசிரியசுவாமிகளின் கிருபைகொண்டு சொல்லும்பொருட்டு) வாலைரசமணியானது காத்துரக்ஷிக்கும் எ-று. (௰)

குளிகைரசமாதுகற்பக் குகையினமூலங் குருபூசைகுண்டலியின்வாசிமூலம், வழியுயிருமவிழ்தமொடு நோய்கள்தீரவழலைமுப்புவைத்தியமுங்கிருதலேகியம், விழிமடவாளம்பிகைப் பெண்ணருளினாலேவிவேகமணிமாத்திரையும் பஸ்பந்தானும், தெளிவுபெறுஞ்சுண்ணமொடு செந்தூரங்கள் திராவகமுஞ்செயநீருஞ்சென்னிகாப்பாம்.

(இ-ள்.) ரசக்குளிகை செய்யும்முறையையும் அதுநின்று முடிவுபெறுதற் காதாரமாயிருக்கத்தக்க பூசைசெய்யும் மார்க்கத்தையும் குருமூலகுண்டலி பூசையாகிய இவைகளைமுடிக்கும் விபரத்தையும் தாரணைசெய்யவேண்டிய மார்க்கத்தையும் தேகத்திலுண்டாகும் நோய்கள் தீரும்பொருட்டு ஔஷதங்களாகிய வழலையென்று சொல்லப்படுகின்ற முப்பூவின் மார்க்கத்தையும் கிருதம், லேகியம், மாத்திரை, பஸ்பம், சுண்ணம், செந்தூரம்,திராவகம், செயநீர் ஆகிய இவைகள்செய்யும் விதத்தையும் உமாபரமேஸ்வரியினுடைய கிருபைகொண்டு சொல்லுதற்கு மேலேசொல்லப்பட்டவை சகலை காவலாயிருக்கும் எ-று. (௧௧)

சென்னிவளர்சிவசிங்காதனத்தின்மேலுஞ் சிதம்பரமாநடன
சபைசித்ரகூடம், வன்னிமதிப்பிரகாசகமலபீட மதுரவின்பவமிர்த
சர்வாணிபீடம், உன்னிதமாய்கன்னியெனக்கமிர்தமூட்டி யுயிருமு
டல் நிலைத்திடவுபாயஞ்சொன்னாள், இன்னிமித்தம் பொருத்தமெ
னக்களித்தஞ்ஞான விருளகற்றிப்பானரச மீந்தாள்காப்பாம்.

(இ-ள்.) உயர்ந்த சிவபெருமானுடைய சிங்காதனத்திலிருக்கி
ன்ற சிதம்பரநடன சபையாகிய சித்திரகூடத்தின்கண் ஒளிபொரு
ந்திய சந்திரன்போலும் பிரகாசத்தைவாய்ந்த கமலபீடமும் இன்
பாமிர்தசர்வாணி எழுந்தருளியிருக்கும் பீடமும் அதினிடத்தில்
எழுந்தளியிருப்பவளான கன்னிகையானவள் இந்தநூலை நான்
உலகத்தில் சொல்லு நிமித்தமே என்மேற்கருணைவைத்து உயிரும்
உடலும் நிலைக்கும்படியான உபாயத்தை உபதேசித்துப் பின்னர்
என்னுடைய அஞ்ஞானமாகிய அந்தகாரத்தை நீக்கி திருவருள்
ஞானமாகிய பானரசத்தை அருள்செய்தாள் ஆகையால் அப்படி
ப்பட்ட அந்தஞானசக்தியானவள் (இந்தநூல் இனிதுமுடியும்பொ
ருட்டு) பாதுகாத்துரக்ஷிப்பாள். (சஉ)

வேறு.

இருள்தனையகற்றுஞ்சோதி யிகபரவெளியேபோற்றி
அருள்தருஞானதேசி யகத்தீசரருளினாலே
திருவுருதவளவாணி சிரோமணிக்கமலந்தன்னில்
அருமலர்பொழிபுஞான மமிர்தசெந்தமிழைச்சொல்வாம்.

(இ-ள்.) எனக்கிருக்கும் அஞ்ஞானயிருளைத் துரத்துஞ்சோதி
யாகவும் இம்மைமறுமைகளாகிய வெளிகளைப்பாதுகாத்துத்திருவ
ருள்செய்கின்ற ஞானாசிரியனுமான அகத்தியமுனிவருடைய திரு
வருளினால் அழகிய வெண்மைநிறத்தையுடைய சரஸ்வதியின்தாம
ரைமலர்போன்ற திருவடிகளில் அரியபுஷ்பங்களிட்டு அர்ச்சித்து
(அவருடைய ஆக்கினையைமேற்கொண்டு) ஞானமிர்தத்தைத் திரட்
டிவைத்திருக்கின்ற இந்த (ஞானவெட்டியான் என்னும்) தமிழ்நூ
லைச் சொல்லுகின்றோம் எ-று. (கங)

∴ இந்தநூலில் ஏதாயினும் குற்றங்கள் வருமேயானாலும் அவை
களையெல்லாம் மேற்சொன்ன கடவுளர்கள்நீக்கி என்னைப் புனித
னாக்குவார்கள் என்பதுகுறிப்பு.

# மூலமும்-பொழிப்புரையும்.

வேறு.

நந்தியொளிப்பிரகாசவட்டத்துள்மேல் நற்கமலமாயிரத்தெட்டி தழைப்போற்றி, உந்திநிலையுந்ததிருமூலர்பாத முவமையுள்ள காலாங்கிபோகர்பாதஞ், சிந்தையுள்ளமகிழ்ந்தசட்டை முனியின் பாதஞ் சிவமயங்கண்ட கோரக்கர்பாதம், அந்திபகலற்றவிடைக் காடர்பாதம நுஞ்சகநாதர் பதமர்ச்சிக்கின்றேனே.

(இ-ள்.) சர்வேஸ்வரனுடைய தேஜோமயமானது வீசுகின்ற வட்டத்திற்குள் உயர்ந்த ஆயிரத்தெட்டிதழ்க் கமலபீடத்தை நமஸ்கரித்து மணிபூரகத்தின் நிலைமையையுணர்ந்த திருமூலநாயனார், உயர்ந்தவரான காலாங்கிநாதர், போகநாதர், சட்டைமுனிவர்சிவ மயமே உண்மையானதென்றுணர்ந்த கோரக்கர் இராப்பகல்களை யுணர்ந்த இடைக்காடர் அருள்செய்கின்ற ஜெகநாதர் இவர்களு டைய திருவடிகளை உண்மையோடு நமஸ்கரித்து அர்ச்சனை செய் தேன் எ-று. (கச)

மதியிருந்துகுலவி விளையாடும்வீடு மகத்தான செங்கதிரோன் மகிழ்ந்தவீடு, பதியிருந்துவிளையாடுமூலவீடு பத்திதருஞ்சித்திதரும் பரமவீடு, துதிபெறவுநாற்சதுரமேலுநின்றுதுலங்குமெழிற்கணபதி வல்லபையைப்போற்றி, நிதிபெறவுமெனையீன்ற குருவின்பாத நெறி முறைமலனுதினமுங் காப்புத்தானே

(இ-ள்.) சந்திரனானவன் இருந்துவிளையாடும்வீடு, சூரியனும் மகிழ்ந்தவீடு தலைவனிருந்து விளையாடுகின்ற மூலாதாரவீடு பத்தி யையும், சகலசித்தியையுங் கொடுக்கின்ற உயர்ந்தவீடு, யாவருந் துதிக்க நாற்கோணத்தின்மேலிருந்து விளங்குகின்ற அழகிய கண பதியையும் வல்லபையையும் போற்றிசெய்து என்னைப் பெற்றெடு த்த ஆசிரியன்திருவடியையும் துதித்து காப்பாக வணங்குவோம்.

திருவிருந்துகனலெழுந்துஆடும்வீடு சிறந்தசத்திவல்லபைதன் கணவனை, மருவிருந்துகொஞ்சுதமிழ்நாவில்மேவு மகிழ்ந்தமதகரி யினிருதாளைப்போற்றி, கருவிருந்தபெருவீடுதாண்டியப்பால் கண் குளிரநின்றாடுவணையிலேறி, பருவியுயிர்நாதவிந்துஆயிபாதம்வண ங்கியிந்த நூல்வகையைப் புகழ்வேனே.

(இ-ள்.) லட்சுமியானவள் எழுந்தருளியிருந்து அக்கினியுடன் ரக்ஷிக்கும்வீடும், வல்லபைகணவன் கொஞ்சுகின்ற இதழ்களில் பொருந்துகின்ற விநாயகனின் இரண்டு திருவடிகளைப்போற்றிகரு க்கள் உற்பவமாகின்ற கிருதுவீட்டைக் கடந்து அப்பால் ஞானக்

கண்ணூனது குளிரும்படி நின்று நடுவணையில்ஏறி, நாதவிந்துக் களின்சொரூபியான ஆயியின் திருவடிகளை வணங்கி இந்தநூலின் வகையைச் சொல்லுவேன் எ-று. (௧௬)

தந்தைதாய்கருவதனிலுதித்தவாறுந் தாரணியில்கருத்திரண்டு பிறந்தவாறும், அந்தமுடன் சாதிகுலம்வகுத்தவாறு மவனிதனிற் பெரியோர்களறிந்தவாறும், சிந்தைதனிலஞ்செழுத்தைப் போற்றி செய்து செப்புகிறேனிந்நூலையிகழவேண்டாம், தந்திரமாமுக்கோ ணந்தன்னில்நின்ற தந்திமுகன்கமலபதங் காப்புத்தானே.

(இ-ள்.) தாய்தந்தையர்களால் கருப்பத்தில் தோன்றினதும் உலகத்தில் வந்துபிறந்ததும் உடனே சாதிகுலங்கள் ஏற்பட்டதும் உலகத்தில் பெரியவர்கள் உணர்ந்ததும், மனத்தின்கண் பஞ்சாட் சரதியானஞ்செய்து இந்நூலைச் சொல்லுகிறேன், யாவரும் இகழ்ச்சிசெய்யவேண்டாம் இதைச்சொல்ல முக்கோணசக்கரத்தில் தந் திரமாக எழுந்தருளியிருக்கின்ற கணேசனுடைய திருவடித்தாம ரைகள் காப்பாகும் எ-று. (௧௭)

கதிரொத்தவிடந்தனிலேயிலகுஞ்சோதி கனகரத்னமிலகுதிரு மண்டபத்தில், மதியொத்துநின்றிலங்குஞ் சுவாதிஷ்டானம் வளர்ந்தவிதழிம்மூன்றுமங்குலத்தில், நிகரொத்தபிரமன் சரஸ்பதியின் பாதம் நினைந்துருகித்தாளிணையைப்போற்றிசெய்து, உதிரத்தில்சுக் கிலந்தான்வந்தவாறு மோரெழுத்தாநாதவிந்தமைந்தவாறே.

(இ-ள்.) கிரணமானதுவிளங்குகின்ற கனகரத்தினமிருக்கின்ற திருமண்டபத்தில் அறிவுதந்து விளங்குகின்ற சுவாதிஷ்டானத் தில் இருக்கின்ற ஆறிதழ்களில் வாசஞ்செய்கின்றபிரமன்சரஸ்வதி இவர்களுடைய இரண்டுதிருவடிகளையும் போற்றுதல் செய்து உதி ரம், சுக்கிலம், ஓரெழுத்தால் நாதவிந்தமைந்தவாறும் உரைக்கி றேன் எ-று. (௧௮)

சொல்லரிதுமந்திரத்துக் கெட்டாவிடு சோதிமணிபூரகத்தில மர்ந்தமூர்த்தி, வெல்லரிதுநாபியதின்கமலத்துள்ளே விளங்கிதழீ ரைஞ்சுபத்துமேலும், வல்லபமாய்நின்றிலங்குமாலின்தேவிவளர்ந்த சபைத்திருமாலை வணங்கிபோற்றித், தொல்லுலகிலுள்ள பெரி யோர்கள்பாதந் துதித்திந்நூல் விளம்புகிறேனுண்டேகேளீர்.

(இ-ள்.) சொல்லுதற்கருமையானமந்திரங்களுக்கெல்லாமெட் டாதவிடமான தேஜஸ்விளங்குகின்ற மணிபூரகஸ்தானத்தில் நாபி யின்கமலத்துள் பத்திதழ்க்குள் வல்லமையுடன் விளங்குகின்ற

விஷ்ணுலட்சுமி இவர்களுடைய திருவடிகளை வணங்கிப்போற்றிஉல கத்திலுள்ள பெரியோர்களுடைய திருவடிகளைத்துதித்து இந்நூலைச்சொல்லுகிறேன் ஆண்டையேகேள் எ-று. (கக)

வட்டமிட்டசட்கோண பாரின்மேலும் வளர்ந்தவிதவிராரு மங்குலத்தில், திட்டமிட்டவனுகதத்தில் வீற்றிருந்த சிறந்தருளும் ருத்திரனும்ருத்திரியைப்போற்றி, வெட்டவெளிவேதமறைநான்கு மோதும் வேதமெல்லாந்திருநீருயானவாறும், அஷ்டதிசையறிந்து ணர்ந்தபெரியோர்பாதமைம்பத்தோரட்சரமுங் காப்புத்தானே.

(இ-ள்.) வட்டமிட்டிருக்கின்ற அறுகோணத்தின்மேல் வளர்ந் திருக்கின்ற பன்னிரண்டு இதழ்களையுடைய அநாகதஸ்தானத்தில் வீற்றிருந்த ருத்திரனையும், ருத்திரியையும் போற்றுதல் செய்து நான்குவேதங்களால் சொல்லப்படுகின்ற பெரியோர்களுடைய திரு வடிகளும், ஐம்பத்தோரட்சரங்களும் காப்பாகும் எ-று. (உ0)

ஆறுகொண்டவம்பலத்தினின்றசோதி யம்பரமார்ந்தப்பரத்தை யேறித்தம், விறுகொண்டவறுகோணவீட்டின்மேலும் விளங்குமி தழ்பதினாறுமேவுமிடம், பேறுபெற்றமயேசன் மயேஸ்பரியுமங்கே பேணியவரிருவர்பதக்கமலம்போற்றி, பாரினுள்ளவேதமறியாமல் நின்ற பழம்பொருளைப் பாடுகிறேனுண்டேகேளே.

(இ-ள்.) வழியாகவிருக்கின்றஅம்பலத்தில்நின்றசோதியம்பல மானஞானசபையில்நிதமும்ஏறி அறுகோணமான வீட்டின்மே லும், பதினாறுஇதழ்களில் அமர்ந்தமகேசன், மகேஸ்வரியின்திருவ டிகளை நமஸ்காரஞ்செய்து வேதங்களாலும் உணரப்படாமல்நின்ற புராதனமாயுள்ள வஸ்துவைநான் பாடுகிறேன் எ-று. (உக)

காலைவட்டமாலைவட்டமாகிநின்ற கதிரமனைபிற்சுருதிமுனையா டுஞ்சோதி, நிலவட்டங்கொண்டெழுந்து கலையெண்ணான்கும் நின் றிலங்குமாக்கினையிலிதழுமூன்று, ஞாலமதிலாதியந்தருபமான நற் கமலமாயிரத்தெட்டிதழின்மேலும், ஆலவிடமுண்ட சதாசிவனைப் போற்றி யம்பிகையின்கமலபதமர்ச்சித்தேனே.

(இ-ள்.) வட்டமாய்நின்றகிரணங்களையுடைய சுருதிகளின்அந் தத்திலும் அறுபத்துநான்குகலைகளிலும் நிறைந்திருக்கின்ற ஆக்கி ஞஸ்தானத்திலுள்ள மூன்றிதழ்களில் ஆயிரத்தெட்டிதழ்களிலும் எழுந்தருளியிருக்கின்ற சதாசிவனையும், அம்பிகையையும் வணங்கி அர்ச்சனைசெய்தேன் எ-று. (உஉ)

திரைகடந்து திரைக்குமேற் பெரும்பாழ்தாண்டிச் சிறந்த சாகாக் காலுமே வேகாத் தலையுந்தாண்டி, மறைபுகுந்துவோதுகின்ற வேதந் தாண்டி மதனகலியானதிருவல்லியோது, வரையெழுந்த பதினெட் டாங்கோட்டின்மேலு மாதளம்பூவடிவா மனோன்மணியைப்போற்றி கரைகடந்து பறையனென்று தள்ளிவைத்த கருத்தைதயினிச்சொல் லுகிறேனின்றே கேளே.

(இ-ள்.) திரைச்சீலையைத்தாண்டி, அதற்குமேலுள்ள பெரும் பாழைத்தாண்டி சாகாக்காலையும், வேகாத்தலையையுந்தாண்டி வே தங்களைத்தாண்டி பதினெட்டாங்கோட்டின்மேலும் மாதுளம்பூ வின்நிறமுள்ள மனோன்மணியைத்துதித்து கரைகடந்துபறையனெ ன்று தள்ளிவைத்தகருத்தை இனிநான் சொல்லுகிறேன்கேள் எ-று.

அந்தமுள்ள குருவினடிக்கமலம்போற்றி யன்னைதந்தையிருவருந் தானுபோகிக்க, தந்திரமாயிரவுதனிலணையும்போது தாதுவிந்து நாதமதுமெழுந்தபோதில், எந்தவுயிர்வேதமறை யறிந்ததாண்டே யிடும்பரெல்லாநீசனென்று தள்ளினார்கள், வந்தவழிபோனவழியிர ண்டுஞ்சொல்வேன் வகையறியாமாந்தர்களே யறிந்துகொள்வீர்.

(இ-ள்.) அழகுள்ளகுருவின் திருவடித்தாமரைகளைப்போற்றி தாய்தந்தையர்கள் அநுபோகஞ்செய்ய, விந்துவும்நாதமும் கலந்த போதில் எந்தவுயிர்தான் வேதத்தையறிந்தது இடும்பர்களெல்லா ரும் நீசனென்றுதள்ளினார்கள் இனிநான்வந்தவழியையும், போன வழியையும் சொல்லுவேன் வகையையறியாமாந்தர்களே நீங்கள் அறிந்துகொள்வீர் எ-று. (௨௪)

பிரமகுலவேதியராய்ப்பிறந்தார்கோடி பெருமையுள்ளக்ஷத்திரிய ராய்ப்பிறந்தார்கோடி, திறமையுள்ளவைசியர்களாய்ப் பிறந்தார் கோடி தெளிவானசூத்திரராய்ப் பிறந்தார்கோடி, உறவதிதநால்வ கையாய்ப்பிறந்தார்கோடி யுள்ளுணர்ந்துபாராமல் தள்ளினார்கள், அரனருளாற் சபைநிறைந்தவாண்டமாரே யாதியிலே சாதிகுல முறைசெய்வேனே.

(இ-ள்.) பிராமணர்களாகப்பிறந்தவர்கள்அளவற்றவர் க்ஷத்தி ரியராய்ப்பிறந்தவர்களும்அளவிலர் வைசியர்களாய்ப்பிறந்தவர்கள் அளவிலர் சூத்திரர்களாய்ப்பிறந்தவர்களும் அளவிலர் இப்படிநால் வகைச்சாதியாய்ப் பிறந்திருப்பதை நன்றாயுணர்ந்துபாராமல் தள் ளிவிட்டார்கள். ஆனாலும் சர்வேஸ்வரனுடைய திருவருளால்சபை யில் நிறைந்திருக்கின்ற ஆண்டமாரே ஆதியிலே சாதிகுலங்களைச் சொல்லுகிறேன் எ-று. (௨௫)

தனருஞூர்விட்டேனப்புமலரும்விட்டேன், கருவூர்மாறிவிட்டேன்
பறையிலங்கும்-காட்சிவிட்டேனெந்தன் கருத்தைவிட்டேன்-தந்த

(இ-ள்.) சோமசூரிய, அக்கினிகள், நதியின்பூரல், இருவினை
நாடு நானிருந்தவிடம், அகஸ்தியர் திருவருள் கருவூர்பறை விளங்
குங்காட்சி, என்னெண்ணம் இவைகளையெல்லாம் விட்டேன் எ-று.

திருப்பெருந்துறையைவிட்டேன்-புஷ்கரணி-தீர்த்தம்விட்டேன்
தெய்வநதியும்விட்டேன், இருகரைநாடும்விட்டேன் மண்டபத்தடி
யீசனிருக்குங்கொடிமுடியும்விட்டேன், மருமலர்கனகரத்ன-வம்பி
கைபதம்வணங்கிய மலரடிகமலம்விட்டேன்,உருவருளுறவும்விட்
டேன் உக்கிரவிசை - உலகுவிட்டேன் மேருதுறக்கம்விட்டேன்-
தந்தன.

(இ-ள்.) திருப்பெருந்துறை,இந்திரபுஷ்கரணிதீர்த்தம்,தெய்வ
நதி, இருகரைநாடு, மண்டபத்தினடி, ஈசனிருக்குங் கொடிமுடி,
அம்பிகையின்திருவடி திருவருளுறவு, உலகு, மேருதுர்க்கம்இவை
களை விட்டேன் எ-று. (சாகூ)

அலையாப்பதியும்விட்டேன்அமிர்தநதி - அதுகடந்தேயக்கினி
ஆற்றைவிட்டேன், தொலையாக்கடலும்விட்டேன் - சுகதுக்க-தாறும்
விட்டேனுடல்கூறுவிட்டேன்,நிலையாநதியும்விட்டேன்- கரையேறி
நிஞ்சிவிட்டேகலைபாஞ்சுவிட்டேன், ஜலசெங்நதியும்விட்டேன் ஜல
நதியின்சார்பும்விட்டேன்சுரையேறிவிட்டேன்-தந்தன.

(இ-ள்.) அலையாப்பதி, அமிர்தநதியைக்கடந்த அக்கினியாறு
தொலையாக்கடல், சுகதுக்கத்தாறு, உடல்கூறு, செங்கநதி, சலத்
தின்சார்பு இவைகளையெல்லாவிட்டுக் கரையேறிவிட்டேன் எ-று.

மந்திரகிரியும்விட்டேன்-மயேந்திரகிரி-மதிளும்விட்டேன் மக
மேருவும்விட்டேன், இந்திரபதியும்விட்டேன்-ஈரைஞ்சிதழ் எல்லை
விட்டேனெந்தன்தொல்லைவிட்டேன்,சந்திரநாடும்விட்டேன் சுகந்த
பரி-சந்தனசவ்வாதுவீசுஞ் சந்நிதிவிட்டேன் - இந்திரசாலம்விட்
டேன்-இமையகிரி-யிங்கிதமாகவேசங்கப்பலகைவிட்டேன்-தந்தன

(இ-ள்.) மந்திரகிரி, மகேந்திரகிரி,மகமேரு,இந்திரபதி,பத்தித
ழெல்லை எந்தன்தொல்லை, சந்திரநாடு, பரிமளம்வீசுஞ்சந்நிதி, இந்
திரஜாலம், இமையகிரி சங்கப்பலகை இவைகளைவிட்டேன் எ-று.

படியிருமூன்றும்விட்டேன் அறுவரையின்பாரும்விட்டேன்திரு
ஊரும்விட்டேன்,அடியெனுமரத்தைவிட்டேன்-நானிருந்த-ஆலயம்
விட்டேன் பசுடசாலையும்விட்டேன், வடிவுள்ளதிரையும் விட்டேன்

கருமாளிகையின்-மதிலை விட்டேன்கெவுன கவனம்விட்டேன் இடிமின்னல்கனலைவிட்டேன் - ஈராறுமிருப்பாறும்விட்டே னெருப்பாறும்விட்டேன்-தந்தன.

(இ-ள்.) ஆறுபடிகளையும், ஆறுதாரங்களையும், திருவூரையும், அடிமரத்தையும். நானிருந்தஆலயத்தையும், திரையையும், கருமாளிகையின் மதிலையும், கவனத்தையும், இடி மின்னல்,கனல்களையும், நெருப்பாற்றையும் விட்டேன் எ-று. (சகஉ)

பூரகநாடும்விட்டேன்-திருமால்தன் - பூஞ்சோலையிம்விட்டே னெக்கியசாலையும்விட்டேன்,சாரைபிரமலத்தைவிட்டேன் பிரகாசவொளிதடத்தைவிட்டேனனதிடத்தைவிட்டேன், கூரழியாப்பாலம்விட்டேன்-சல்லிக்கொடியின்-குறிப்பும்விட்டேன்முகப்புச்சிறப்பும்விட்டேன், ஏறிதழ்நாடும்விட்டேன்-நானிருந்த - இருப்பும்விட்டேன் திரையின்மறைப்பும்விட்டேன் தந்தன.

(இ-ள்.) பூரகநாடு, திருமால்வாழும் பூஞ்சோலை, யாகசாலை, பிரகாசவெளி கூரழியாப்பாலம், சல்லிக்கொடியின்குறிப்பு, முகச்சிறம்பு, நானிருந்த இருப்பு திரைமறைப்பு இவைகளைவிட்டேன்.

சீர்புகழும்பூரகத்தில்-நானிருந்த-தேசம்விட்டேன்சுகசந்தோஷம்விட்டேன், ஆரூர்திருநாட்டைவிட்டேன்-சரஸ்பதியி னாலயம்விட்டேன்சதுஷ்கோணம்விட்டேன், மூர்வதிதநாதமும் விட்டேன் மூவர்க்குமுதல்முத்தியெனுஞ்சத்திசிவ மெத்திசைவிட்டேன் பேரூரவதானியும்விட்டேன்-அம்பிகைமாதுபேர்பெரியபீடம் பிசகாமலும்விட்டேன்-தந்தன.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய பூரகத்தில் நானிருந்த தேசம், சுகசந்தோஷம் ஆரூர்நாடு, சரஸ்வதி யாலயம் நாற்கோணவீடு, விந்துநாதங்கள், சத்திசிவங்கள் அம்பிகையின் திருவடி இவைகளை விட்டேன் எ-று. (சகச)

சித்தியருளாணியும்விட்டேன் தில்லைவழியுந்திருவுருவான சுழிநடுவும்விட்டேன், கத்தரிக்கோல்மாறல் விட்டேன்-கலைபிளா-கங்கைநதிகெங்கைக்கரை பொங்கமும்விட்டேன், அத்திபுரநாளதும் விட்டேன்-நாதமும்விந்து மணுகியத்திருமுகச் சாலையும்விட்டேன், எத்திசைபடைத்தருளும் பிரமாவுடைய-ஏகார்வேசரிரும் தாசிர்மம்வந்தேன்-தந்தன,

(இ-ள்.) சித்தி, அருளாணி, தில்லைவழி, சுழிநடுகத்தரிக்கோல் மாறல் கங்கைநதி அத்திபுரம், நாதவிந்துக்கள் திருமுகச்சாலை, ஆசிரமம் இவைகளை விட்டேன் எ-று. (சகஞ)

விருத்தம்.

திரிபுரத்தைத்தணலாக வெரித்தவீசன் திருநடனம்புரிந்தரு ளுந்தேவநாதன், மருமிருத்தமயிர்ப்பாலங் கருவூர்நாதன் வல்ல அறுகோணமதில்வாழ்ந்தமூர்த்தி, அருவமதுக்கப்புறத்தே யமை த்தமிர்ந்து அணுகுகின்றவெல்லைவிட்டுசுவாதிஷ்டானம், திரிபுரத்து வீதியிலேவாழ்ந்தேன்யானும்சிவஞானசிவபூசைசெயல்விட்டேனே

(இ-ள்.) முப்புரங்களையும் எரித்த யீசனும், நடம்புரியும் நாத னும், அறுகோணத்தில்வாழ்ந்தமூர்த்தியும், சுவாதிஷ்டானவல்லை யில்வாழ்ந்து சிவஞானம் சிவபூசைகளைவிட்டேன் எ-று. (சகசு)

மாராட்டதிசைகடந்துவெளியிற்குள்ளே மன்னுயிரைவகுத்த லிங்கவட்டத்துள்ளே, ஆராடியத்துடனேயன்னையார்தான் அங்க மெல்லாநொந்துமனஞ்சலித்துவாட, பாராட்டங்கொண்டுபரதவித் துநெஞ்சம் பாதமதால்தனஞ்செயனும் படவுதைக்க, வீராட்டங் கொண்டு சுவாதிஷ்டானத்தின் வீதிதனில்வந்து வீற்றிருந்தேனு ண்டே.

(இ-ள்.) மாய்கையாகிய திரையைக்கடந்து ஆகாயத்தின்கண் வகுத்த லிங்கவட்டத்திற்குள் அங்கமெல்லாம் நொந்து மனஞ்சலி த்து பரதவித்து தனஞ்சயன் உதைத்துத்தள்ள சுவாதிஷ்டான வீதியில் வந்திருந்தேன் எ-று. (சகஎ)

வந்துகுடியிருந்ததிருநாட்டைவிட்டேன் மாறுகின்றகத்தரிக் கோல்வட்டந்தன்னில், விந்துநின்றுவிளங்குநதிமையத்துள்ளேவிள ங்குசுவாதிஷ்டான வெளியிலேதான், முந்திநின்றபாதநடு வரையி லேதான் முதலானமூன்றெழுத்துமூலையின்கீழே, எந்தனிடவெண் ணமெல்லாம்பொய்யுமாச்சு ஏளிதமேநிலையாச்சுஇருந்தேனுண்டே.

(இ-ள்.) அங்ஙனம்வந்து குடியிருந்தநாடு, விந்திருந்தஸ்தான மூன்றெழுத்தின்மூலை, இவைகளிலெல்லாம் எம்முடைய எண்ணம் பொய்யாச்சு எளிதம்நிலைத்தது எ-று. (சகஅ)

அடுத்துநின்றவன்னிநதிக் கரையைவிட்டேன் அலகைநின்று வாழ்ந்ததொரு வீதிவிட்டேன், முடித்திருந்த மனதையெல்லாம் பாழாய்விட்டேன்முக்கோணச்சக்கரத்தின்முதலைவிட்டேன்கடுத்த

தெர்ப்ப சயனம்விட்டேன்காணிவிட்டேன் கதிர்மதியுந் துலங்கு புவிகருத்தைப்பார்க்க, துக்கெனவேதனஞ்செயன் தானுதைக்க வென்னைத் துயரமுடன்பிரமாவின்தெருக்கண்டேனே.

(இ-ள்.) வன்னிநதிக்கரை, அலகைவாழ்ந்தவீதி, மனப்பாழ், முக்கோணசக்கரத்தின்முதல், தர்ப்பைசயனம், இவைகளைவிட்டு சூரியசந்திரர்கள் விளங்குகின்ற பூமியை விடும்படி தனஞ்சயனை வன்உதைக்கநான்பிரமாவின் தெருவைக்கண்டேன் எ-று. (சகக)

அக்கரந்தான்முன்மறித்துப்பின்னேதள்ள அலகையொருபுற மதனிலெழுந்துநோக்கச், சிக்கெனவேதேவதத்தன் மேலேநோக் கத்திடுக்கெனவேதனஞ்செயன்தான்கீழேநோக்க,மக்கசிக்குப்பட் டுழன்றுவருத்தமாகி வாழ்புவியில்வரப்பட்டபாடுமெத்த,எக்காலந் துயரமதையாறுவேனோ இருந்தகும்பிவிட்டுவந்த ஏழ்மைதானே.

(இ ள்.) எழுத்துக்கள் பின்னிருந்து தள்ள அலகையானது நோக்க, தேவதத்தனும்மேலேநோக்கத் தனஞ்சயன் கீழேநோக்க சிக்குப்பட்டலைந்து வருத்தமாய் வெளிப்பட்டுவந்த ஏழைநானே யாவேன் எ று.

அக்கினியால்திரிபுரத்தைத் தணலாய்மூட்டி அதிதமதாய்வரு ணசலமயமாய்ப்பாய்ந்து, திக்கினியவாய்வுகடுங்காற்றுவீசி செந்த ணலாய்துரத்தியெமன் தீதான்மூட்ட, மிக்கதிருவெனை வளர்த்த குபேரன்தானு மேல்வாங்கிகைக்கனிபோல் விளங்கச்செய்தான், இக்கடுசாயீசானனிரக்கங்கொள்ள இந்திரனுமெனைக்கடிந்துஇழுக் கின்றானே.

(இ-ள்.) அக்கினியால் திரிபுரத்தையெரித்து வருணசல மய மாய்ப்பாய்ந்து நடுக்காற்றானதுவீச என்னை வளர்த்த குபேரன் என்னை மேல்வாங்கி விளங்கச்செய்தான், ஆகையால் இந்திரனா வன் என்னைக்கோபித்து இழுக்கின்றான் எ-று. (சஉக)

இந்தவிதம்பட்டசளம்யானுந்தாயும் இப்புவியில்செனிக்குமுன்பு இருந்தநேர்மை, கந்தமலர்ப்பூங்குழலா ளாத்தாளென்னைக் கருக் குழிவிட்டினிவரும்போதநந்தம்பேயா, ரந்தமனஞ்சலித்துமிகஆத் துமக்கோல் மளவறிந்துதுன்பமெல்லாமாண்டேகேளீர், விந்தை யினியுரைப்பதெல்லாம் வருமப்போது மிகுவருத்தம் பட்டசளம் விளம்புவேனே.

(இ-ள்.) இந்தவிடத்தில் இப்புவியில்வருமப்போது பட்டகஷ் டம் ...

பிறவித்துன்பம்-தரு.

பட்டசளமெத்தவுண்டாண்டே வருகையில்நான்
பட்டசளமெத்தவுண்டாண்டே.

(இ-ள்.) நான்வரும்போது பட்டகஷ்டம் அதிகமுண்டு எ-று.

வட்டமிட்டபாறைவிட்டு அஷ்டசுழிமூலவாசல்,கிட்டிபேகிட்டிடுக்கிலே முட்டிநான்வருகையிலே, நெட்டவே தனஞ்செயனுங் கிட்டிசேரிடாமல்நேரே, தட்டிமுட்டிடாமல்பாய்ந்து ஒட்டியே நெட்டணையாக-பட்ட.

(இ-ள்.) நான்வட்டமிட்ட பாறையைவிட்டு சுழிவாசலில்முட்டிவரும்போது தனஞ்சயனைவன் பாய்ந்துநெட்டினன் எ-று.

மெட்டுகள்மேடுகள்காட்டச்சிட்டுகள்பாய்ந்ததுபோலும்,ஒட்டியேதனஞ்செயனும் விட்டிடாமலேயுதைக்க, கட்டுகள்கறடில்லாமல் முட்டுகள்முடுக்கில்லாமல், திட்டுகள்திரட்டில்லாமல் கட்டமேயனுபவித்து-பட்ட.

(இ-ள்.) மேடுபள்ளங்களிலெல்லாம்தனஞ்சயனைவன்என்னையுதைக்க முட்டுமுடக்கில்லாமல் திட்டுகள்திரட்டில்லாமல் கஷ்டத்தை யநுபவித்து எ று. (சஉச)

தக்கதீதமுக்கோணத்தில் மக்குசிக்குச்சக்கரத்தில், அக்கரத்துவெளிதனில் சிக்கிநான்வருகையிலே, உக்கிரமதாகியமூலம்லிக்கிரசுழிபக்கமிக்க, நிக்கிரவம்பரத்தைவிட்டு சுக்கானைத் திருப்பிவர பட்ட.

(இ-ள்.) அதீதமாகிய முக்கோணசக்கரத்தில் இரண்டுபக்கங்களிலும் நெருக்குண்டுவருகையில் நான்பட்டகஷ்டத்தைசொல்லுவேன் எ-று. (சஉரு)

பக்கமேயிடைகலைபின்னக்கரைதட்டாமற்பாய்ந்து, சுக்கிரனுதித்தவேளை லக்கினம்ராசியறியும், திக்குதிக்கெட்டாமல் சூழுமக்கரையாவிசோராமல், இக்குழிவூத்தையைத்தாண்டி புக்கிநான்வருகையிலே-பட்ட.

(இ-ள்.) பக்கங்களிலும், இடைகலையிலும்,தட்டாமற்பாய்ந்து எந்தக்கரையிலுஞ் சேராமல் ஊத்தைக்குழியைத் தாண்டி நான் வரும்போது எ-று. (சஉசா)

கருக்குகையும்தனிலுருக்கமாவுதைத்து, அரக்குமண்டபத்தடிபெருக்கநான்வருகையில், வருத்தம்பாராமல்தனஞ்செயனும்பாதத்தினலே, துருத்தத்துடனுடைந்து தூக்கிவிட்டிடவேகானும்,

(இ-ள்.) அந்தக்கருக்குழையில் உருக்கமாகஉதைத்து அரக்கு மண்டபத்தடியில்தனஞ்சயனனவன் சீக்கிரமாகஉதைத்தானென்னை வெளியில் துரத்திவிட்டு எ-று. (சஉ௭)

அருக்கனுதித்தவெதிர் குறுக்கேயெதிர்ப்படையில்,மூறுக்கு களாயிடக்குறுக்கப் பின்னுக்கும்வந்து, சுருக்கச்சுழியைவிட்டுக் கருக்குழியைக்கடந்து, உதைக்கத்தனஞ்செயனு மடக்கில்லாவரு கையில்-பட்ட.

(இ-ள்.) சூரியமண்டலத்திற்குக் குறுக்கேமூறுக்குநாளாய்இரு க்கப் பின்னுக்குவந்து கருக்குழியைக்கடந்து தனஞ்சயனனவன் உதைக்க எ-று. (சஉ௮)

உச்சிதமாகியகண்டத்தொனியி லோடியதாரை, மச்சுழலண் டத்தைவிட்டு வருகஆண்டையேகேளீர், தற்சுரூபமதாகி சத்தியெ னுநாதவிந்து, திச்சிதரூபமாய்வந்தசிதம்பரவீதிதன்னில்-பட்ட.

(இ-ள்.) சிறந்த கண்டத்தொனியி லோடிய தாரையானது அண்டத்தைவிட்டு, சிதம்பரவீதியில் எ-று. (சஉ௯)

அச்சுழல்தாரைவெளியி லருளுஞ்சங்கையைவிட்டு, விச்சுவரூ பங்கடந்து மேதினிவருகையில்நான், நச்சுக்குழலடியில்நடுவணை யின்பின்னாக, இச்சையுடனேதனஞ்செயனுமென்னையுதைக்க பட்ட.

(இ-ள்.) அந்தச்சுழல்தாரையானது வெளியில்வருஞ் சங்கை யைவிட்டு விஸ்வரூபத்தைத்தாண்டி நச்சுக்குழலுக்கு அடியில் நடு வணையின்பின் தனஞ்சயனனவன் என்னையுதைக்க எ-று. (சஙo)

ஓதுந்தாரைவெளியி லாதுஞ்சங்கையைவிட்டு, சூதுசெய்யுமக் கினித் தூணோரம்வருகையில்நான், வாதுஇதுவேதனைமாதர்மனது நோக, சேதியெனதுஅன்னைச் செய்வினைப்பயனேதென பட்ட.

(இ-ள்.) சொல்லப்பட்ட தாரையின் வெளியிலாதுகின்ற சங் கையைவிட்டு அநாகதத்திற்குச் சமீபத்தில் இருக்கின்ற அக்கினி ஸ்தம்பத்தின் ஓரமாகவரும்போது என்னுடைய தாயின் மனது நோகக்கஷ்டப்பட்டாள் எ-று. (சஙக)

பேதாபேதங்கள்மெத்தப் பேதித்துதனஞ்செயனும், பாதார விந்தத்தினாலும் படவேயென்னையுதைக்க, ஆதுஅபானவெட்டுத் தொடர்ந்துமூலத்தின்கீழே, நாதுகுறுங்கநாடித் தனஞ்செயனுந் தள்ளிட-பட்ட.

(இ-ள்.) மிகுந்த வித்தியாசத்தைக் கொடுத்துத் தனஞ்சயனு னவன் தன்னுடையகால்களால் உதைக்குத்தள்ள அபானனை

வன் எட்டிதொடர்ந்து மூலாதாரத்தின்கீழ் தாதுவானது குலுங்கும்படி தள்ளினன் எ-று. (சரு௨)

அடங்குஞ்சக்கரந்தனி லமைக்குமதனைவிட்டு, முடங்கிச்சுழி யின்வாசல்முனையில்வருகையில்நான், தொடங்கித்தனஞ்செயனுஞ் சுருக்காய்பாதத்தினுலும், விளங்கக்குலுங்குதைக்க வெளியினிலம் புவிவர-பட்ட.

(இ-ள்.) அடங்குகின்ற சக்கரத்தில் பொருந்திய சுழிமுனை வாசலில்வருகையில் தனஞ்சயனுனவன் வெகுசுறுக்காக உதைத்துத்தள்ள வெளியில்வரப்பட்ட எ-று. (சருரு)

செடமெண்சாணுங்குலுங்க சிவமெய்ஞ்ஞானம்விளங்கக் குட வயிறுங்குலுங்கக் கையைவிட்டகம்வர, மடவாதலையமீராறு மணி வாசலொன்பது, செடமுமெண்சாணுடலுந்திரையைவிட்டுமேவர.

(இ-ள்.) எண்சாண்தேகமானதுகுலுங்கவும், உண்மைஞானம் விளங்கவும், வயிறனது குலுங்கவும், ஆலயம்பன்னிரண்டும்,வாசல ஒன்பதுந்தாண்டி திரையைவிட்டு எ-று. (சருச)

ஓங்காரத்தொளிதனிலுதித்தகோணமொன்பதில்,ஸ்ரீங்காரத் தொளிவட்டத்தெருவில்வருகையில்நான், நீங்காநெல்லிகனிபோல் நிலைத்தசபையைவிட்டு,தீங்கில்லாதஅக்கினித்தெருவில்வருகையில் நான் பட்ட.

(இ-ள்.) பிரணவஒளியின் கண்ணுதித்தநவகோணத்தில் ஸ்ரீங் காரமென்னுந்தெருவில் வரும்போது ஒழியாதநெல்லிக்கனிபோல் சபையைவிட்டு கெடுதலில்லாத அக்கினித்தெருவில் வரும்போது.

ஆங்கத்திருக்கேணியிலமைத்த சக்கரத்தினில், தேங்கநின்றல யின்தெருவில்வருக ஆண்டே, வாங்குமூலச்சுழியில்வளர்ந்த அக்கி னியின்கீழ், தாங்கத்தனஞ்செயனுந் தடங்கலில்லாதுதைக்க-பட்ட

(இ-ள்.) அவ்விடத்தில் திருக்கேணியில் பொருந்திய சக்கரங் களில்நின்று அலகைத்தெருவில் மூலச்சுழியில் வளர்ந்த அக்கினி யின்கீழ் தனஞ்சயனுனவன் உதைக்க எ-று. (சருசா)

காலைவருத்தம்வாகினாலைப்பறித்துவுயிர், சாலப்பெருத்தச்சித் திரச்சாவடிவருகைபினும், மூலாதாரச்சுழியில் முவனபிர்மத்துக் கப்பால், மாலினுடசந்நிதி மணிபூரகத்தில்வளர்-பட்ட.

(இ-ள்.) காற்றைவருத்த மின்றிக்கட்டி உயிரைச் சித்திரச்சா வடி வருகையில் மூலாதாரச்சுழியில் பிரமனுக்கப்பால் மாலினு டைய சந்நிதியில் எ-று. (சருஎ)

இலேகாலிருவிலக்கமறிகாலெனைமறிக்க, தலேகாலுமே நகரத தனஞ்செயனுதைத்திட, மாலேபின்மாதுமங்கைகள்வாலே கெர்ப்ப மதனில், ஓலமூச்சுழியிஞேரம்வருகையிலும்-பட்ட.

(இ-ள்.) தனஞ்சயனைவன் உதைக்கப்பெண்களுடையகுளங் கர்ப்பத்தில் மூலச்சுழியின் ஓரத்தின்வருகையில் எ-று. (சஙஅ)

சிறந்தவர்கள்வயிற்றில் செனித்தபிறகுதிக்க, அறிந்தவர்கள் கருவிலமைப்பதில்லையாண்டே, வரந்தருமம்புவியில் மனதுகந்து அன்னையும், பிறந்தாலொருபுத்திரன்பின்னும்போதுமென்றதால்.

(இ-ள்.) சிறந்தவர்கள் வயிற்றில் தரித்தபிறகு அறிந்தவர்கள் கருவில் அமைப்பதில்லை, வரங்கொடுக்கின்ற உலகத்தில் மனஞ்சந் தோஷித்துப் பெற்றால் ஒருபுத்திரன்போது மென்றதால் எ-று.

நிரந்தரிசப்பிரகாசநிலேத்தரூட்சத்தைவிட்டு, துரந்தரிகமாகத் துரியாதீதமருகே, பரசபையுங்கடந்து துரைசாமியின்றுணே, மற மேவன் கமலபதமதியைத்தாண்டிவருக-பட்ட.

(இ-ள்.) நிராதரப்பிரகாசத்தின் நிலேத்தரூட்சத்தைவிட்டு துரி யாதீதத்தினருகே பரசபையைக்கடந்து துரைசாமியின் துணேயடி யைமறவேன் வெள்ளிய சந்திரமண்டலத்தைத்தாண்டிவருக எ-று.

இனமாய்த்தனஞ்செயன்வந்தெனேயேயுதைத்துசுழி, கனகரத் தினமூலங்கருதிக்காட்டியுதைக்க, செனனமிந்தப்படிதான்சிவசுரூ பமதாக, புனலருவிகள்பாய பொறியைவிட்டுவரவும் பட்ட,

(இ-ள்.) தனஞ்சயனைவன் என்னேயுதைத்துசுழித்துவிளங்கு கின்ற மூலத்தின்கண் உதைக்க சிவசொரூபமாக புனலருவிகள்பா யப் பொறியைவிட்டுவரவும் எ-று. (சசக)

மனம்புத்தியுமாங்காரமகிழுஞ்சித்தமதனல், இனமாயெனேப் பிரியாதிழுக்கத்தன்ஞ்செயனல், சுனேயிலருவிபாயுஞ் சுழியிலமிர்த மோட, முனையைவிட்டொளிவீச முகப்பைவிட்டுவரவும்-பட்ட.

(இ-ள்.) மனம், புத்தி, ஆங்காரம், சித்தம்ஆகிய இவைகள்என் னேப்பிரியாமலிழுக்கத் தனஞ்சயனல் அமிர்தம்வீசும் முகப்பை விட்டு வரவும் எ-று. (சசஉ)

சாக்கிரஞ்சொற்பனந்தாண்டிதனியேவெளிப்படையில், ஆக்கி மத்தனஞ்செயன்வந்ததட்டியுதைத்திடவும், சிக்கிரமதாகியபிரம னன்சிறியேபின்னிட்டுத்தள்ள, தூக்கியஅபானவாய்வுதொடர்ந்து தைத்திடும்போது-பட்ட.

(இ-ள்.) சாக்கிரம், சொப்பனம் இவைகளைத்தாண்டி வெளி யில் தனஞ்சயன்வந்து அதட்டிஉதைக்க பிராணவாயுவானதுகோ பித்துப் பின்னிருந்து தள்ள அபானவாயுவானது தொடர்ந்து உதைக்கும்போது எ-று. (சசங)

ஆக்கினைதாயிகேணிஆதார்மண்டபந்தாண்டி, நோக்கியேநான் வரும்போதுமோடிக்குள்வாசியுஞ்சிற, பார்க்கப்பார்க்கப் பலவும் பரிபூரணவிலாசம், ஏர்க்கவாசலைவீசிவெளிப்படவும்பிரகாசம்,

(இ-ள்.) கேணிகள்நிரம்பிய திருவாரூர்மண்டபந்தாண்டிநான் வரும்போது சிக்கிரத்தில்வாசியானது சிறபரிபூரணவிலாச மேற்க வாசலைவீச வெளிப்பட எ-று. (சசச)

சுழியின்முனையைவிட்டுத்துரியந்துரியாதீதம்,வழியில்வருமள வில்மாறியேகலைகள்பாய, இழியாக்கேணியில்வீழ்ந்து இருவினைக ளுஞ்சூழ, தொழியாவறுமையில்லாச் சுடரைத்தாண்டிவரவும்.பட்

(இ-ள்.) சுழிமுனையைவிட்டு துரியம்துரியாதீதம் என்பவைக ளின்வழியாக நான்வரும்போது கலைகள்மாறிப்பாயக் கேணியில் விழுந்து இருவினைகளுஞ் சூழாமலும் வறுமையில்லாமலும் சூரிய மண்டலத்தைத்தாண்டி எ-று. (சசரு)

அழியாப்பதவிபெற்று அம்பிகைபொற்கமலத்தில், கழியா வரம்பெற்றுயான் கருவூர்விட்டுவரவும், ஒழியாப்பாசவினைக ளொ ழித்துவோங்காரவாசல், பொழியமதியமிர்தம் வழியமதுரவின்பம் பட்ட.

(இ-ள்.) அழியாதபதவியைப்பெற்று அம்பிகையின் திருவடி களில் கழியாதவரத்தைப்பெற்று நான்கருவூரைவிட்டுவர, நீங்காத பாசவினைகளையொழித்து ஓங்காரவாசலில் மதியமிர்தம்பொழிய.

விருத்தம்.

ஒத்துநின்றபிராணனென்னைமேலேநோக்க ஒருமையினலபான னதுவோங்கித்தள்ள, வெற்றியெனுஞ்சமானனுமேபின்னேதாக்க மேலானவியானனதுமறிக்கமுன்னே, சித்தமேயுதாயினதுந் திசை யைநோக்கத் திமிக்கிடவேகூர்மனவன்விழிதான்மீட்ட, சத்தியுயர் கண்டவெளிமேலேறித்தனஞ்செயனுமுதைத்தென்னைதள்ளினனே

(இ-ள்.) சகலகருவிகளிலுஞ் சமமாய்க்கலந்து நின்ற பிராண வாயுவானது என்னைமேலேபார்க்க அபானவாயுவும் நெருக்கித் தள்ள சமானன்பின்னேதாக்க வியானன்மறிக்க உதானன் திசை யைநோக்க, கூர்மன்விழியைமீட்ட, தனஞ்சயனென்பவன்உதைத்துத் தள்ளினன் எ-று. (சசஎ)

தஞ்சமெனநம்பிநின்றகருவூர்க்குள்ளே சதுரகிரிகாணவந்தா னிருந்தவென்னை, அஞ்சாத்துவமொடுசோப வினையுண்டாகி சூது செய்துநாகனுந்தான் துரோகஞ்செய்தான், வஞ்சமறவெனைவளர்த் தேதேவதத்தன் வருத்தமிகச்செய்துபின்னுந் துரத்தினன்காண், கஞ்சமலர்ப்பாதத்தால் கோபித்தேதான் கருத்துகந்து தனஞ்செ யனு முதைத்திட்டானே.

(இ-ள்.) ஆதாரஇடமென்று நம்பியிருந்த கருவூருக்குள் நாற் கோணமலையைத் தரிசிக்கவிருந்த என்னைச்சூதுசெய்து நாகனை வன் துரோகஞ்செய்தான் என்னைவளர்த்த தேவதத்தன் அதிக வருத்தப்படுத்தி வெளியில்துரத்தினன் இவர்களெல்லாம், இப்படி செய்ய தனஞ்சயன் உதைத்துத்தள்ளினன் எ-று. (சசஅ)

இடைகலைபின்னிருகலையுமிழுக்குமுன்னே யியல்பானசுழிமுனை தானிழுக்கப்பின்னை, தடமகுடசிங்குவையும்புருடன்ரெண்டுஞ்சந் திகட்டி மறித்தவர்கள்மாறித்தள்ள, திடமுடையகாந்தாரி யத்தி யோடு திர்க்கமுள்ளவலப்புருடன்சுழிப்பிலேற, அடவுடைசங்குனி யுங்குருதன்தானுமலமலக்கமூலமதி லழுத்தினனே.

(இ-ள்.) இடைகலை, பின்கலை, சுழிமுனை இம்மூன்றும்இழுக்க, சிங்குவை புருடன் இவையிரண்டுஞ் சந்துகட்டி மாறிமாறித்தள்ள காந்தாரி, அத்தி, அலம், புருடன், இவர்கள்சுழியிலேற சங்குனி யும், குருவும்மலக்க மூலத்திலழுத்தினர்கள் எ-று. (சசகூ)

சிட்டர்கள்தானருகினிலிருக்கும்போது சிறந்திருந்தநாதவிந் துருவுமாகி, வட்டமதில்நானிருந்ததிங்கள்பத்தும் வரிசையுடனே யிருந்துவாழ்ந்தபோது, பட்டபாடதிகமெத்த பாடுபட்டேன்பகர அதைக்கணக்கெழுதிமுடியாதாகில், கட்டமில்லாதகனகசபை நட னங்கண்டோர்கருவுடையார்புவியில்வந்து கருதார்தானே.

(இ-ள்.) சிஷ்டர்கள்அருகேயிருக்கும்போது சிறந்திருந்தநாத விந்துக்கள் உருவமாகி பத்துமாதங்களுமிருந்து வாழ்ந்தபோது அதிகபாடுபட்டேன் ஆகையால் அதுதனைக்கெழுதிமுடியாதாகும், கனகசபையில் நடனஞ்செய்வதைத் தரிசித்தவர்கள் உலகத்தில் வந்துபிறவார்கள் எ-று. (சரு)

வெற்பானவெளிகடந்துஅப்பாலேதான் வேதமுடிநாதவிந் திரண்டுங்கூடி, மயிர்ப்பாலங்கடந்து அறுகோணந்தாண்டி வரை யெழுந்தழுங்கில்வட்டத்தடியுந்தாண்டி, அப்பாறைக்கடந்து வட் டத்தடியார்க்குள்ளே அம்பரத்தின்வெளியில்வந்தமர்ந்தேனான்

டே, இப்பாரிற்பெரியோர்கள்மனமுகந்து எந்தனுடவரலாற்றை யுயம்பிக்கேளீர்.

(இ-ள்.) மலையாயிருக்கின்ற வெளியைத்தாண்டி நாதவிந்துக் களிரண்டுங்கூடி மயிர்ப்பாலத்தையும் அறுகோணத்தையும், முப் பாழையுங்கடந்து அம்பரத்தின் வெளியில் வந்துசேர்ந்தேன், ஆகையால் இனி என்னுடைய வரலாற்றைச் சொல்லுகின்றேன் கேளுங்கள் எ-று. (௪௫௪)

கொச்சகம்.

ஒட்டுப்பலகைதனிலொருசாணுக்கருகே
கட்டகழிகம்பமதினடுவணையின்வீதியிலே
பட்டத்தனஞ்செயனு மாறிவுடபாதமதால்
விட்டவுதையாலே வெங்கதியோரம்வந்தேன்.

(இ-ள்.) அங்குள்ள ஒட்டுப்பலகைக்கு ஒருசாண் தூரத்தில் காட்டப்பட்ட கழியாகிய கம்பமிருக்கும் நடுவணைவீதியில் தனஞ் சயனானவன் மாறிவந்து கொடுத்த உதையினால் வெங்கதியோரத் தில் நான்வந்தேன் எ-று. (௪௫௨)

முன்னிழுக்கபின்னிழுக்க மூவர்மறித்திழுக்க
என்னைச்சுமந்தஅன்னை யினிவேதனைப்படவும்
தன்னிரக்கமில்லா தனஞ்செயனுந்தானெழுந்து
சன்னல்வழிதிறக்கத் தாவியுதைத்தானே.

(இ-ள்.) வாயுவுக்கள்முன்னும் பின்னுமாக இழுத்ததால் என் னைத்தாங்கிய தாயானவள் வருத்தப்பட்டும் கொஞ்சமுமிரக்கமில் லாத தனஞ்சயனானவன் தாவிஉதைத்தான் எ-று. (௪௫௩)

வெண்பா.

உதைத்தவுதையாலே யுள்ளமெல்லாநொந்துஅன்னை
பதைத்துத்துடித்துப் பரதவித்தாள்-சகத்ததிலே
ஊற்றுக்காலோடே யொருகொம்பிருந்ததந்த
ஆற்றுக்கால்நந்தமர்ந்தே னன்றே.

(இ-ள்.) அந்த உதையினால் நான்மிகவும் நொந்து பரதவித் ததால், அதன்பின் நான் ஆற்றுக்காலில் வந்துசேர்ந்தேன் எ-று.

கலித்துறை.

கூடிக்குலாவி யன்னைபிதாவுங் குறைநதுருகி
வேடிக்கையாக நரும்புகின்ற வெளிநாதவிந்து

ஒட்டிக்கலந்து வுருண்டு திரண்டுரு வானபின்பு
நாடிப்புவியில் நான்வருபாடதை நாடறிந்தே.

(இ-ள்.) தாயுந்தந்தையும் வேடிக்கையாய்ச் சேர்ந்து விரும் பினதால் வெளிப்பட்ட நாதவிந்துக்கள் ஒட்டிக்கலந்து திரண்டுஉரு வானபின்னர் நான்உலகத்தில் வரும்பாடு நாடவல்லதே எ-று.

பிறந்தவகை தரு.

தனனந்தன தனன தானதன-தனனந்தனதன தானதனன.

பிர்மாதிகடந்து-துருதைத்த-பெருவெளியாகிய தோர்திட்டுக டந்து, இருமாவொருமாவில் -வருந்தியதோர் - தின்பரசமாயிருந்த கெங்கைகடந்து, மருமாலெழுத்தோடே-தில்லைப்பதியில் - வாழ்ந் துடனேவீற்றிருந்தகெதியைவிட்டு, அரிமாலயன்தேடி-அறியாத- அம்பரத்திலாடுகின்ற பம்பரம்விட்டேன் தனனந்.

(இ-ள்.) பிரமஸ்தானத்தையும் பெருவெளித்திட்டையும், கட ந்து கங்கையினிடஞ்சென்று தில்லைப்பதியில் வாழ்ந்து இருந்தகதி யைவிட்டு பிரமவிஷ்ணுக்களால் தேடியறியப்படாத அம்பரத்தில் நடிக்கின்ற பம்பரத்தைவிட்டேன் எ-று. (௪௫௬)

குறிப்பாயென்னைவளர்த்த-முதலான-குய்யமுதல்நடுவணையைய மும்விட்டு, அறியாதெழுந்துநின்ற செங்கநதி ஆடுகின்றதில்லைவெ ளியம்பரம்விட்டு, சிறியாப்பிறையான சிதம்பரத்தின் -திருக்குளக் கருக்குளைகமுறுக்கைவிட்டு, வறியடிமூங்கிலிலே-நின்றதொரு-தாச கவுகாசமெனும் நேசமும்விட்டேன்-தனனந்.

(இ-ள்.) என்னைவளர்த்த குய்யமுதல்நடுவணையையும், தில்லை யம்பலத்தையும், திருக்குளக் கரையையும்விட்டு மூங்கிலிலிருந்த ஒருநேசத்தையும் விட்டேன் எ-று. (௪௫௭)

கரையொருபுறமாக- வரவழைத்து நெல்லிக்கனிபோல்வைத்திரு ந்தசக்கரம்விட்டு, திரையாமறைவீட்டில்-வீற்றிருந்த- சீர்கமலத்தி ருக்கேணிவாசல்விட்டுக், கரையாதுணையும்விட்டு - எனைப்பிரிந்து; முன்மறித்துப்பின்னெழுப்புஞ்சந்நிதிவிட்டு, கரையாநிலையும்விட்டு நானிருந்த-காணியுஞ்சங்கதாரையின்வேணியும்விட்டேன்-தனனந்

(இ-ள்.) கரையின்ஒருபக்கமாக உள்ளக்கை நெல்லிக்கனிபோ லிருந்த சக்கரத்தைவிட்டு மறையாகியவீட்டில் வீற்றிருக்குந் திருக் கேணிவாசலைவிட்டு என்னை பிரித்தெழுப்பின சந்நிதியையும்விட்டு நானிருந்த பாகசாலை முதலியவைகளையும் விட்டேன் எ-று.

ஒட்டியபடிமுட்டியும்விட்டு நின்றதொரு - ஆத்தைக்குழியான தொருசேற்றையும்விட்டுக், குட்டிமறைச்சுட்டியும்விட்டு - மெய்ஞ் ஞானபர-குருவான அன்பறிவுகூற்றையும்விட்டு, மட்டுமே யெண்சா ணுடலிரண்டாறு மாறியேவளர்ந்தகருவூரையும்விட்டு, சட்டெ னச்சக்கரத்ததனில்-தனஞ்செயனுந்-தாக்கவுமேயென்மனது மேக் கழும்விட்டேன்-தனனுக்.

(இ-ள்.) அடிமுடிகளையும், சேற்றுக்குழியையும், மறைச்சுட்டி யையும் மெய்ஞ்ஞானக்கூற்றையும்கருவூரையும், சக்கரத்தில்தனஞ் சயனனவன் தாக்கவிட்டுவிட்டேன் எ-று. (௪௫௧)

தொக்குத்தொட்டெழுத்தையுங்கொண்டு - அம்பரத்தினில் - சோதிநடனம்புரியும்வீதியும்விட்டு, தக்கபுகழ்சுழியைவிட்டு-நந்தி கொலுவின்-தடத்தினில்வீற்றிருந்தேன் திடத்தைவிட்டு, திக்கினி யாநாடும்விட்டு-சிவமிருந்தசெந்தியொளிசிவசிங்காதனத்தைவிட்டு அக்கினிகம்பத்தையும்விட்டு - அடுத்துவிளை - யாடவுமிருந்ததின் கூடம்விட்டாலமே தனனுக்.

(இ-ள்.) தொக்கைத்தொட்ட வழுத்தைக்கொண்டு அம்பரத் தில் நடனஞ்செய்யும் வீதியையும், சுழியையும், நந்திகொலுவை யும், நல்லநாட்டையும், சிவமிருந்தசிங்காதனத்தையும்விட்டு எ-று.

மக்கர்சிக்கச்சக்கரத்திலேவருகையிலே - மாறிதனஞ்செயனு மேற்றிபுதைத்தான், உக்கிரமதாய்நானிருந்தபாண்டத்துக்கு வுட ம்பெல்லாநொந்துமெத்த தள்ளாட்டமாய், பக்கமுள்ள மாதர்கள் வந்து-அன்னையவட்கு - பத்திரமாயெச்சரிக்கை யுத்தரஞ்சொல்லி, சிக்கியேநான்வருகையிலே-சுமந்திருந்த - சித்துடம்புதத்தளிக்கச் சத்தமிடவே-தனனுக்,

(இ-ள்.) சக்கரத்தில் நான்வரும்போது தனஞ்சயனனவன் என்னைமீறிபுதைத்தான், ஆகையால் உடம்பெல்லாம் நொந்து மிக வும் தள்ளாடியிருக்கையில் பெண்கள்வந்து தாய்க்குமிகவும் எச்ச ரிக்கைசொல்லி உடம்புதத்தளிக்க எ-று. (௪௯௧)

நோய்ந்தநுக்கமிகவதிகசுற்றிலும்நின்ற நோகையர்கள்மெள் ளவந்துவள்ளலுதவ, கைத்தலத்தைபிருத்திக்கொண்டு - அன்னைய வட்கு-கைலாகையாகவுமைமெய்லாகையால், மெத்தனவேயிருந்த வர்கள் இருபுறமும்வீற்றிருந்தமாதர்களும்பார்த்திருக்கவுஞ். சாஸ் திரமே நங்கலோதும்-வெநிந ராந்தகுணமாகமொழி தாழ்ந்து [illegible] தனனுந்.

(இ-ள்.) சுற்றிலும் நின்றுகொண்டிருந்த பெண்கள் கைலாகு கொடுத்து வெகுசாந்தமான சொற்களால் தாழ்மை சொல்லிக் கொண்டிருக்கவும் எ-று. (௪௬௨)

சூஸ்திரமாய்சலக்குடத்தை-முன்னையும்விட்டு சுகமுட்டினென் னுடலைப்பின்னையும்விட்டு, காத்திருந்தமருத்துவிச்சி அவளிரண்டு கரத்தில்விரலைத்தொட்டுஅழுத்தினளே, வேற்றுமுகமாகவே தான்- மூர்ந்திபுன்னையும்,வெகுண்டுவெகுண்டுமிரண்டிடவும், கூற்றுவனைச் சமைந்துதென்று-அன்னைமிகவுங்கூக்குரலாய்ச்சத்தமிக நோக்கிட வேதான் தனது.

(இ-ள்.) மிகவுஞ்சூட்சமாக பனிக்குடத்தைமுன்னதாகவிட்டு என்னுடைய உடலைபின்னர்விட்டு வெளியில்வரும்போது மருத்துவச்சியானவள் அவளுடைய இரண்டுகைகளாலும் வேற்றுமுகமாக அழுத்தவே அப்போது தாயானவள் மிகவுங்கூக்குரலிட்டுக்கூவ.

சையோகஞ்செய்யும்போது - இருந்தமனஞ்சந்தோஷந்தப்பி பின்சந்தோஷமாய், நொய்யதிருநாதவிந்து-வரும்போது-துண்மை யறியார்பெரியோராண்மையறியார், பைதனிலுந்திரண்டுருண்டு - வருகையிலும் - பத்தியுடனேயுலகில்புத்திரனென்று, ஐயமறஅறிந்துகொள்வார்-எனைச்சுமந்த - அன்னையுடவருத்தத்தை யாருமறியார்-தனது.

(இ-ள்.) பெண்ணும் புருஷனுங்கூடின காலத்திலிருந்த மனசந்தோஷங்கெட்டு நாதவிந்துக்கள் வரும்போது பையில் திரண்டுருண்டு உலகில் புத்திரனென்று உதிக்கும்போது தாய்பட்டவருத்தத்தை யாவருமுணர மாட்டார்கள் எ-று. (௪௬௪)

வெய்யவனுதிக்குநாட்டில் வெருசாபனும் வேதனைகளாவந்தது பிறந்துவிட்டேன், வையகமேலாந்துதிக்கும் -பிரமாவுடைய-மைந் தன்சரஸ்வதியெந்தனன்னையுமாச்சு, துய்யபரபிரமநிஷ்டை-உதித் தருளுஞ்-சுகந்தபரிபூரணஞானகுலங்காண், செய்வினையாலமைத்த பூர்வக்கியான சித்தியருளாலமைத்தசெய்கைபிதாண்டே-தனது.

(இ-ள்.) சூரியமண்டலத்தின்கண் நான்வேதனைகளை மிகவுமநுபவித்து உலகத்தில் பிறந்துவிட்டேன் நானோ பிரமதேவனுடைய பிரமநிஷ்டையாலுதித்த ஞானகுலமாகும் ஆனால்இதுஎன்னுடைய பூர்வஞானத்தாற் சொல்லப்பட்டதாம் எ-று. (௪௬௫)

விதிமதியிரண்டளவால-விந்துநாதமும - மிகுத்தவச்சிரக்குகை பைதனிலே, அதிகசுக்கிலசுரோணிதமிரண்டுங்கூடி - அமைந்தபடி

யால்யோகசாதகத்தால், பதியராஜாங்கயோக-திட்சைபலத்தின் - பக்குவமுதித்திந்தப்பாரில்வந்தேன், நித்தியயீஸ்வரியத்துடன் விளங்குகின்ற நித்தியசவுக்கியகுலமுற்றவனுண்டே-தனனுந்.

(இ-ள்.) விதிமதிகளின் அளவுபோல் விந்துநாதங்கள் கருப்பையில்கூடின சாதகத்தாலும் ராஜாங்கயோகதீட்சையின் பலத்தாலும் பக்குவம்பிறந்து இந்தஉலகத்தில் வந்துபிறந்தேன் ஆனால் நான் ஐஸ்வரியத்துடன் விளங்குகின்ற சவுக்கியகுலத்தில் வந்தவனுவேன் எ-று. (சசுசு)

திருவுருகருவிதுமுண்-டமைத்தகுல-தெய்விக திரிமூர்த்தியானவரொறு, மருமலர்சுகந்தபரி-மதிரவியின் - மாமலர்க்கமலரத்ன பூமலர்காணும், அருதிருவுருவாகி-பிர்மாதிகுலம்-அவனிதனிலுதித்தஅமிசையினல், குருவனுக்கிரகசெயலால் குவலயத்தில்-குறைவொன்றுமிலேகாணிந்தவகையாண்டே-தனனுந்.

(இ-ள்.) திருவுருவில் கருப்பையின்கண் அமைத்த தெய்வத்தன்மை பொருந்திய திரிமூர்த்தியால் வரலாறுனது சுகந்தத்தையுடைய சூரிய சந்திரர்களின் கமலமலர்போலும் உலகத்தின்கண் அமிசையினுலுதித்து குறைவொன்றுமில்லையாகும் எ-று.

விருத்தம்.

உநதிவிட்டுப்புவியதனிலமைத்துயானும்உதித்துசிறுசிற்றிடைப்பெண்மாதரெல்லாம், எந்தியிருகரத்தாலுமணைத்து அன்னை எனையெடுத்துவொருபுறத்தில்கிடத்தினர்கள்,நொந்துபட்டஅன்னையர்க்குத்துகிலும்வாங்கி நண்மையதாயடிவயிறுதாங்கக்கட்டி, விந்துவிட்டோன்கோத்திரத்தின்குலங்கள்வாழ்க விளங்குபுத்திரன்பிறந்தனெனவிளம்புவாறே.

(இ-ள்.) கருப்பையைவிட்டு உலகத்திற் பிறந்து சிற்றிடைப்பெண்களெல்லாமேந்தி என்தாயின் ஒருபக்கத்திற் கிடத்தினர்கள் அங்ஙனம் பெற்றதாயின் வயிற்றைக்கட்டி தந்தையின் கோத்திரம் விளங்கவென்று வாழ்த்துவார்கள் எ-று. (சசுஅ)

எடுத்தென்னைக்கிடத்திவைத்துமாதரெல்லாம்எறெடுத்து என்முகத்தைப்பார்க்கும்போது, படுத்துயான்கிடக்கையிலுந் தும்பல்பீறபற்றிடவுங்குளிர்நசஜலம் பொழிந்தேமாதர், எடுத்தெந்தன்முகந்தனிலுமிறைக்கும்போதி லேற்றமணிபூரகத்தை நோக்கியாலும், அறிந்திருந்தஅருளையெல்லாமேபோவிபேவியம்புவியிலானைகொண்டாடநின்றேனே.

(இ-ள்.) பெண்களெல்லாரும் என்னையெடுத்துக்கிடத்தி என்னுடைய முகத்தை பார்க்கும்போது நான் தும்மினால் குளிர்ந்தசலத்தையெடுத்து என்முகத்திலிரைப்பார்கள் அப்போது நானும் திருவருளைப்பெற்று உலகத்திலாசைகொண்டு பிறந்தேன் எ-று.

விண்ணைவிட்டுவெளிதனிலும் யானும்வந்து விரும்பியெனைச்சுமந்திருந்த அன்னைபார்த்து, கொண்ணுவிட்டுப்போகவந்த கூற்றனென்று கொடூரமுடனென்முகத்தைக்குறித்துச்சிந்தை,கண்ணெடுத்துப்பாராமல்சலிப்புண்டாகிக்களையாகிமூன்றுபட்டினியுமாச்சு, எண்ணமிட்டுக் கொண்டிருந்தேனறைக்குளே தானெடுத்தெனக்குவுதவிசலங் கொடுத்திட்டாரே.

(இ-ள்.) விண்ணைவிட்டு வெளியேவந்த என்னைத்தாயானவள் பார்த்து கொன்றுவிட்டுப் போகவந்த எமனென்று கோபக்குறியினால் பாராமல் மூன்றுநாள்வரைக்கும் பட்டினியா யிருந்தாள் அதன்பின்னர் என்னைச்சிலரெடுத்து ஆகாரங்கொடுத்தார்கள்.

ஆகமதில்நானிருந்துவந்தபோது அங்கமெல்லாம்வேதனையாவின்றஅன்னை, தாகமுடன்மனசோபமிகவுமாச்சு சஞ்சலத்துக்காளானேனமையோவென்று, வேகமுடனென்னை யொருபுறத்திற்போட்டு வெறுமையுடனவளுமொருபுறமேசாய்ந்து, கோபமினிபறியாமல்நானப்போது கூகூவென்றழுதுசத்தங் கூப்பிட்டேனே.

(இ-ள்.) உடம்பினுள் நானிருந்து வெளியில்வந்தபோது வேதனையோடு பெற்றதாய்க்கு மிகவுஞ்சோபமுண்டாய் சஞ்சலத்துக்கு ஆளானேனேயென்று என்னை ஒருபக்கத்திற்போட்டு அவன்வெறுமனுக மற்றொரு புறஞ்சாய்ந்து இருந்தான் அப்போது நான் அவளுடையகோபத்தை உணராமல் கூக்குரலிட்டழுதேன் எ-று.

என்வருத்தமறியாமலய்யோபாவி ஏன்கிடந்துகூவுகிறாயென்னபாவ, முன்வருத்தமூன்றுநாளுபாசமாச்சு மூர்ச்சையுடனெனக்கிளைப்புமிகவுமாச்சு, என்வருத்தமறியாமலபிர்தங்கேட்டு எனமூதாயென்றனக்கோர்பிராணனில்லை, பின்வருத்தங்கொண்டுநீ வருவாயென்று புத்திசற்றுமறியாமல் பிசகினேனே.

(இ-ள்.) அப்பொழுதுபாவி என்னுடையவருத்தந்தெரியாமல் ஏன்கூவுகிறாயென்று தாயும்மற்றவர்களும் என்னைப்பழித்தார்கள்.

அடங்காதபசியாச்சுஎனக்குஅன்னை அவள்வருத்தமினி யறியாதழுதேன்யானும், மாங்காரங்கொண்டொருந்து ஓங்காரத்தைமடக்கியேபிடித்திழுத்துமருந்தேவைத்தாள், நீங்காமலருகிருந்த மாது

ரெல்லாரிலையாகபலைஅவிழ்நந்செய்துகூர்ந்தார், பாங்காகஅறை யதுக்குள் மூன்றுநாளும் பசியுடனேயானவளும்படுத்திட்டோமே.

(இ-ள்.) எனக்கு அடங்காத பசியாயிருந்ததனால் தாயின்வரு த்தத்தை அறியாமலழுதேன் அப்பொழுது அவள்எனக்கு முலை கொடுத்தாள் பின்னர் அங்கிருந்தவர்களெல்லாரும் மருந்துகொடு த்தார்கள் இப்படியே அந்தஅறைக்குள் மூன்றுநாள் வரைக்கும் பசியுடனேயிருந்தோம் எ-று. (சஎக)

விழுகநாள்மூன்றுங்கழித்துமேவி விரும்பியென்னைச்சுமந்திருந்த அன்னையார்க்கு, வாறனமாதர்வந்துவென்னீர்விட்டு மதனகூதகந் தெளியசிரமேல்விட்டு, சிரானானக்கொக்கசலமீராட்டி செடமது வின்கசடெல்லாஞ்சுத்திசெய்து, நேராகஇருந்தஅறைபுகுந்துமேன் மேல் நிலமுரைத்துத்திலதநெற்றிக்கிட்டார்தானே.

(இ-ள்.) அப்படி மூன்றுநாளுங்கழித்து என்னைச்சுமந்திருந்த தாய்க்கு வெந்நீர்விட்டு குளிப்பாட்டி சுத்திசெய்து அவளிருந்த அறையின் நிலத்தை தேய்த்துப்பொட்டிட்டு எ-று. (சஎச)

மூனாதபசியெடுத்து அறைக்குள்ளேதான் முழுசலிப்பால் குழல்கோதிசிகையும்போட்டு, தாளாமல்வீற்றிருக்கும்கூஷணத்துக் குள்ளே தயவாகஅறுசுவையோடன்னமுண்டு, தேளானபசியாறி யடைக்காய்கொண்டு செழித்தபின்புஎன்முகத்தைப் பார்த்தாள் தானே, கேளானமாதரெல்லாமுடனிருந்து கிருபையுடனென்னையெ டுத்துக்களித்திட்டாரே.

(இ-ள்.) அந்த அறைக்குள் கொடியபசியெடுத்தமையால் சலி ப்பாய் குழலைக்கோதியிருக்குஞ் சமயத்தில் சுற்றத்தார்கள் அறு சுவையுடன்கூடிய அன்னத்தைக்கொடுக்க உண்டுபசியாறி வெற்றி லைபாக்கு போட்டுக்கொண்டபின் என்னுடைய முகத்தைப்பார் த்தாள் அதின்பின்னர் பெண்களெல்லாமிருந்து என்னையெடுத்துச் சந்தோஷித்தார்கள் எ-று. (சஎரு)

மட்டில்லாப்பசியெடுத்துஅன்னையார்க்கு மதிமயக்கந்தெளிந் துகளைசோபநீங்கி, தட்டில்லாசந்தானமுதித்துதென்று சார்வாக பக்ஷமன்புமிகமென்மேலாம்,விட்டிலருகிருந்துமைந்தனருமையாக மிகமகிழ்ந்துமுகமணைத்துமுத்தந்தந்தாள்,கொட்டியான்சப்பாணி யிருகரத்தால் கூர்முகத்தில்சிறுநகையுங்கொண்டாள்தானே.

(இ-ள்.) தாய்க்குப் பசியெடுத்துச் சோபநீங்கிய பின்னரே பிள்ளைபிறந்ததென்று என்னையெடுத்தணைத்து முத்தங் கொடுத் தாள் பின்னர் புன்சிரிப்பையுங் கொண்டாள் எ-று. (சஎசு)

தேகமெல்லாங்குளிர்ந்தன்னைதெளிந்துமேவிசெடவருத்தந்தீர்ந்தான்மேலிரக்கமாகி, ஆகமெலாங்குளிர்ந்துசந்தோஷமாகிஅதீதமையமிட்டுச்சிமுகமுத்திட்டு, பாகமுடனெடுத்தென்னை மடிமேல்வைத்துப்பரிவாகக் கொங்கைமலர்வாயிலீந்தாள், தாகமினிதெளியவேயமிர்தமுண்ட சட்டமதைவின்னதென்றுசாற்றுவேனெ.

(இ-ள்.) தாயானவள் தேகங்குளிர்ந்து வருத்தநீங்கியபின்சந்தோஷத்தையடைந்து உச்சியிலும் முகத்திலும் முத்தங்கொடுத்து என்னைமடிமேல்வைத்து முலைப்பால்கொடுத்தாள் அங்ஙனம்அமிர்தங்குடித்த விதத்தை இனிசொல்லுவேன் எ று. (சஎஎ)

காமப்பாலமுர்தமுண்ணுங்கருவைச்சொல்லக் கருத்தையினியருள்வதென்னஆண்டேகேளீர், சோமப்பாலுண்டதனல் சோதிகாணுஞ் சுத்தமதியமிர்தமுண்டால் சுழிதான்காணும், வாமப்பாலுண்டபலன்பெரியோரானோர் மதுரசஞ்சீவியையுண்டோர் ஞானியானோர் தூமதிதபாலமிர்தமுண்ணுநேர்மை சொல்லுகிறேனமிர்தரசச்சுகத்தையாண்டே.

(இ-ள்.) காமப்பாலுண்டதை விடச் சோமப்பா லுண்டால் சோதிகாணும் சுத்தமாகிய சந்திராமிர்த பானஞ்செய்தால் சுழிமுனைகாணும் மதுரசஞ்சிவியையுண்டார் ஞானமாவார் சந்திரமதியமிர்தம்உண்ணும் விபரத்தைச் சொல்லுகிறேன் எ று.

சுகத்தில்சுகமதிகசுகசூக்ஷாசூக்ஷஞ் சொர்க்கபதியான பதஞ்சுகஞானங்காண்,அகத்திலிருந்ததிதரசபானஞ்சூக்ஷமாறுமறியாத வெகுஅநந்தசூக்ஷம்,மருத்துவத்தையானுரைக்கஎளியோராண்டே வான்புவியுஞ் செகமுழுதுமதற்கொவ்வாது, இகபரமும்பரமுமிது வானசூக்ஷமிருதயத்திலிருந்தவிதமினிசொல்வோமே.

(இ-ள்.) சுகத்தில் சூட்சாசூட்சஞ்சொன்னால் அதுஉள்ளத்திலிருந்து யாருமறியாதசூட்சமாகும் ஆகையால் நான் அதைச்சொல்லுவதென்றல் யாவருக்குஞ் சம்மதமாகாது ஆயினும் என்னுடைய மனத்திலிருந்து உண்டானவித்தை இனிச்சொல்லுகிறேன்.

கொச்சகம்

மாமதுரபானரச வாமரசநாமறிய
கோமளமாதன்னைக்கெர்ப்பக் குகையைவிட்டுநாபிவழி
பூமலர்வாழும்புவியில் பிறந்திருப்பதாமாகில்
காமக்குரோதமோகக் காமியத்திற்செல்வாரே.

(இ-ள்.) மதுரபானரசத்தை நாம்உணர பெண்ணாகிய தாய் கர்ப்பக்குகையைவிட்டு நாபிவழிவருவார் உலகத்தில்பிறந்திருப்பதானல் காமக்குரோதமோக காமியத்தில் போவார்கள் எ-று.

எந்தேசகாலமிருந் தெண்சாணுடல்மீறி
பந்தாயிரம்வருஷம் பாரிலிருப்பார்காண்
உத்தமர்கள்சித்துவிளைந் தூரிலிருந்துச்சிதமாய்
கர்த்தனருள்சித்திபெற்றுக் காயசித்திசெய்வாரே.

(இ-ள்.) எந்தத்தேசத்திலும் எந்தக்காலத்திலு மிருந்து எண் சாணுடலோடு பிறந்தாலும் அதற்கு வரையற்ற அளவுகாலங் கடந்து பதினாயிரவருஷம் வரைக்கும் உலகத்தி லிருப்பார்கள் ஆகையால் உத்தமர்கள் சித்துசெய்து ஊரிலிருந்து விசேஷமாய் கடவுளின் கிருபையைப்பெற்று காயசித்திசெய்வார் எ-று. (சஅக)

கலித்துறை.

நாபிக்கமலத் தருள்வாசல்புக்கிடு நற்கமலந்
தாயித்துஅன்னை வளர்கெர்ப்பவாசல் தனையடுத்து
கோபித்தபான னுதைத்திடயோனிக் குறவழிபோய்
ஆபித்ததுவருஞ் சிவயோகவாச லதுவழியே.

(இ-ள்.) நாபிக்கமலத்திருக்கும் வளர்கின்றவாசலை யடைத்து அபானனைவன் உதைக்க யோனியின் வழியேபோய் சிவயோக வாசலின்வழியே எ-று. (சஅஉ)

வழியோனிமூடி யுந்தியின்வாசல் வரும்பெரியோர்
கழிவில்லைதேக மூத்தைக்குழியதுங் கலைபிரளா
பொழிமலர்வாச மதிமலர்வீசும் புகழுடையா
ருழிவதுமில்லை யபானனுதைத்த துணர்ந்திடுவேன்.

(இ-ள்.) யோனிவழியைமூடி நாபியின்வாசலில் வரும் பெரியோர்கள் யாதொரு இழிவுமின்றி அபானனுதைத்ததை நானறிவேன் எ-று. (சஅ௩)

வெண்பா.

காமப்பாலுண்டு கருக்குழியி லூறும்
நாமப்பாலுண்ணா நல்விதியோ சோமப்பால்
உண்டுகடைத்தேற உந்திவழிவருகா
இன்றுவினைபொழியா தினி.

(இ-ள்.) காமப்பாலாகிய முலைப்பாலைக்குடித்துகர்ப்பாசயத்தி லூறுகின்ற நாம் வாமப்பாலுண்ண முடியுமோ? ஆகையால் உந்தி வழில் வராதவினை நமக்கு ஒழியாது எ-று. (சஅச)

வாமப்பாலுண்டு மகிழ்பெறுவதாமாகில்
காமப்பாலுண்ணக் காரணமேதோ ஏமப்பால்
இருகாலொருகா லிரவிமதியொன்றானால்
குறுகிவரும்வாய்வதுவின் கூறு.

(இ-ள்.) வாமப்பாலையுண்டு மகிழ்வதானால்காமப்பாலுண்ணக் காரணம் ஒன்றுமில்லை ஆனால் இடைகலையும் பின்கலையு மொன்றானால் வாயுவின்கூறு குறையும் எ-று. (௪அ௫)

விருத்தம்.

சந்திரபுட்கரணியதிமதுரவூாசஞ் சைதன்னியப்பா லமிர்தமருவி சூழும்,இந்திரியகாமரசமிகுந்தமாதர்எனையீன்றஅன்னையவளியல்பு தன்னால்,மைந்தன் திருவள்ளுவனுதித்துமேலும்மதனசூதகந்தீர்ந்துவரும்பாலுண்ணா, விந்தவினியானுரைப்பேனுண்டேகேளீர்விபரமதாயமிர்தமுண்ணும் விதிசொல்வேனே.

(இ-ள்.) வாசம்பொருந்திய சந்திரபுஷ்கரணியின் பாலமிர்தமானது சூழ்கின்ற இந்திரியமாகிய காமரசமிகுந்த பெண்களில் என்னைப்பெற்ற தாயினியல்பினால் நான் திருவள்ளுவனாய்ப்பிறந்து சூதகந்தீர்ந்துவரும் பாலையுண்ணா அதினால்ஞானம்பிறந்து அமிர்தமுண்ணும் விவரத்தைச் சொல்லுகிறேன் எ-று. (௪அ௬)

பாலுண்ணல்-தரு.

அமிர்தமுண்டேன்காண்-மதிமல-ரமிர்தமுண்டேன்காண்.

(இ-ள்.) நான் சந்திரனுடைய மலர்ந்த அமிர்தத்தை யுண்டேன் எ-று.

அமிர்தமுண்டேன்மதியாதாரமாகமன்னை தன்மார்போடணையவைத்தாசையால்,குமுர்தமமதிபாலைத்தாராமலுங்கொடியபாவி காமப்பாலைத்தந்தனள்,திமிர்தமேதிருநடனம்புரியுமமிர்தந்தந்தனளன்னையின்பத்துடன், வமிர்தமாமதுமலர்கொண்டுவீசும் வச்சிர உஞ்சல்மீது நித்திரைசெய்துயான் அமிர்த.

(இ-ள்.) சந்திரனனவன் ஆதாரமாகவும் தாயின்மார்போடணைத்து ஆசையினால் மதியமிர்தத்தைக் கொடுக்காமல் காமப்பாலைக் கொடுத்தாள் பின்னர்வச்சிர ஊஞ்சலின்மீது என்னைக்கிடத்த நான் நித்திரைசெய்தேன் எ-று. (௪அ௭)

ஒங்குங்கேளிக்கைபில்லாது கொங்கைநன்மையாக்தக் கரத்தாலு மலர்தநந்தைததொட்டு,நாங்கியேநிற்கவுமபாங்கியலணக்கவுந்தாவி

யடிப்பிற்மேலேறியிருந்துபான்,தேங்கியமாதுகளேங்கியிருக்கவுஞ்சித்திரப்பீதாம்பர மெத்தையின்பேரிலும், பாங்கியுமன்னையதிகசந்தோஷமாயணைத்துப்பாலகனுக்கமிர்தமூட்டினள்-அமிர்த.

(இ-ள்.) வளருகின்ற விளையாட்டில் பெண்ணின்தனத்தை கரங்களால் தொட்டுநிற்கப் பாங்கியானவள் அணைக்கத்தாவிமடியின் மேலேறியிருந்து நான் ஏங்கியிருக்கச் சித்திரமெழுதிய பட்டுமெத்தையின்மேல்அன்னையானவள் அதிகசந்தோஷமாயணைத்துப்பால் கொடுத்தாள் எ-று. (௪௮௮)

இன்றுஅறைக்குள்ளே மூன்றுநாள்பட்டினி யின்பமெல்லாம் வெகுதுன்பமதாச்சு, வென்றுபிறவிக்கடலிலிலங்கிய வேழத்தை விட்டியானேசத்துடனுமே, அன்றுபிறவிக்கருநாட்டிலதுவிட்டகம் பரம்வம்புவிவாழ்க்கையில், கண்டுமிருந்தக்காட்சிகள் யாவையுங் காமபபாலுண்டிடுங்காரணங்காண்கிலேன்-அமிர்த.

(இ-ள்.) பிறந்த அறைக்குள் மூன்றுநாள்வரைக்கும் பட்டினியாயிருந்து பிள்ளையைப்பெற்றபின் உண்டான துன்பங்களெல்லாம் பூர்வவினைப்பயனாகும் ஆனால் நான் காமப்பாலுண்டான காரணமானது எனக்குத்தெரியவில்லை எ-று. (௪௮௯)

ஆதரவாகவேயென்னையடுத்து அழகாய்கொடுங்கையி லென்னையணைத்துடன்,போதரவாகவுமென்முகம்பார்த்துடன் பொல்லாதகாமப்பாலென்தாயிவூட்டினள்,ஊதுந்துருத்தியில்நாதவிந்தாணியும் ஊறிக்குகையிலுருவதுவாகியும், சூதுகளாகவுடலைக்கொண்டு வந்தேன்தொல்லுலகிற்பொல்லாகாமப்பால்தந்தனள்-அமிர்த,

(இ-ள்.) தாயானவள் என்னை ஆதரித்தெடுத்து அணைத்துஎன்னுடைய முகத்தைப்பார்த்து முலைப்பாலை எனக்குண்பித்துவளர்த்தனள் எ-று. (௪௯௰)

செல்வச்சிற்றடியும் ரெண்டடிவைக்கவும் திரும்பச்செங்கை வளர் கொங்கையைக்கிள்ளவும் மூலத்தடியில்முகத்தோ டணைத்துடன்மூட்டியே காமப்பாலூட்டியேதந்தனள்,வாலைசிற்றடியேஞால முதாட்டுறேன் வாருமப்பாவென்றுமார்மேலணைத்துமே, கோலமதாகவுங்கொங்கைமலர்தனைக் கூப்பிட்டுப்பாலனும் வாப்பிட்டுரிஞ்சவும்-அமிர்த.

(இ-ள்.) செல்வச்சிற்றடியிற் இரண்டடி எடுத்துவைக்கதாயானவள்கண்டு ஆநந்தங்கொண்டு என்னைமார்போடணைத்து முலைப்பாலைக் கொடுத்தனள்பின்னர் அப்பா வாருமென்றுகூவிமார்போடணைத்து முலைகொடுக்கப் பிள்ளையும் உறிஞ்சிக்குடிக்கவே எ-று.

ஐயுறவேகருவூர்திருநாட்டினில் ஆதரவும்விட்டுப் பார்தனில் வந்துமே, வையகத்தாசைவருமென்றறியா மனதிலெண்ணமல்மய ங்கிநின்றேகியான், பொய்யாசையின்பப்புதுமையைவிட்டுமேபொ ல்லாப் பசிகாமப்பாலையுண்டாகையால், மெய்யானபுத்தி மறந்து அசதியுமிந்தவிதம்வருமென்றறியாமலும்-அமிர்த.

(இ-ள்.) சந்தேகத்துடன் கருபபாசனத்தில் ஆசையைவிட்டு உலகவாசை வருமென்றுணராமல் மயங்கிநின்று பொய்யாகிய ஆசையைவிட்டு முலைப்பாலையுண்டு உண்மையறிவைமறந்து அசதி யும் இந்தவிதம் வருமென்று அறியாமலும் எ-று. (சகூ௨)

மாய்கைக்கடலில் வருஞ்சையோகஞ்செயில் மாதர்கருக்குழி கெர்ப்பந்தரித்ததில், உய்வினைமைந்தனுதித்துப்பத்துதிங்களில்ஓங் கிப்பிறந்துடன்தாங்கிப்பால்தந்தனள்,காமப்பாலென்றறியாமலும் பாசக்கடலினிலழுந்தாமலும் பாசங்கொண், டோங்கிவாமப்பால் தந்துணரவொட்டாமலும் உதிரப்பால்தந்துவூட்டினனன்னையே.

(இ-ள்.) மாய்கைக்கடலில் ஸ்ரீபுருஷர்க ளிருவருஞ் சையோ கஞ்செய்தால் பெண்களதுகருப்பாசயத்தில் கர்ப்பந்தரித்துபத்து மாதங்களும் வளர்ந்து பிறந்தபின் எனக்கு முலைப்பால் கொடுத் தாள் ஆனல் அதைக்காமப்பாலென்று அறியாமலும் மாயக்கட லில் படியாமலும் வாமப்பால்கொடுக்கும் விதத்தை உணராமலும் உதிரப்பாலையூட்டினர் எ-று. (சகூ௩)

செங்கநதிபற்பதீர்த்தங்கொள்ளாமலும் திரோதாயிமாயை யின்பாசக்கடல்விட்டுச், சங்கநதிசந்திரபுட்கரணியாணம் சாகைநீ ருண்டுதவமுஞ்செய்யாமலும், பருதிமதியறியாமலுஞ் சோதியின் பாலமிர்தந்தனைப்பார்த்துணராமலும், கருதியுமன்னைக் காமப்பா லைத் தந்துடன்காட்டினள்முத்தமிட்டாட்டின ளுஞ்சலில் அமிர்த.

(இ-ள்.) செங்கநதியின் தீர்த்தத்தைக் கொள்ளாமலும்திரோ தாயியின் பாசக்கடலைவிட்டு சந்திரபுஷ்கரணியில் பானஞ்செய்து தவஞ்செய்யாமலும் சூரியசந்திரர்களை யறியாமலும் தேஜஸின் வந்த அமிர்தத்தை யறியாமலும் எனக்குதாயானவள் பாலைக்கொ டுத்து முத்தமிட்டாள் எ-று. (சகூச)

இடைகலையைக்கொண்டு பின்கலையிலூட்டி யேகாக்ஷரத்தைக் கொண்டினியறியாமலும் மடமயில்மாதவள்மாய்கைய பாலூட்டி யும் வைத்திருத்துஞ்சலில்சுற்றியுமாட்டினள், கெர்ப்பக்குழிதனில் நியானந்துவமாய்உற்பவிந்தமுடலாவிபொருளுடன்நற்பிலைபிர

மன் கடாக்ஷத்தினலருள் முற்பவஞ்செய்த பூசாபலனுண்டையே-அமிர்த.

(இ-ள்.) இடைகலையைப்பின்கலையில்சேர்த்து ஏகாட்சரத்தால் மாய்கைப்பாலையூட்டி ஊஞ்சலில்மாட்டி கருப்பாசயத்துள் ஞான தத்துவமாப் உற்பவித்து உடல் ஆவிபொருள் இவைகளைப் பிரம தேவனது கிருபையால் உணர முன்ஜென்மத்தில் செய்தபூசாபல னாகும் எ-று. (கசுரு)

அண்டரண்டபகிரண்டமாயிரத்தெட்டாக்கினைமேவுஞ்சதாசிவ சம்புவால், எண்டிசையுமீரேழுலோகங்களும் கண்டுமகிழ்ந்திடக் காரணசற்குரு, பூர்வக்கியானம்புகழ்பாரினிலுதித் தேறுமெய்ஞ் ஞானசித்தாதிகள்பொற்பதஞ்,சீர்பெருந்தசதிட்சைவிளங்கிடகூறு மகத்தியமாமுனியின்கிருபை அமிர்த.

(இ-ள்.) அண்டரண்டபகிரண்டங்களும் அடங்கி யிருக்கின்ற ஆக்கினையில்வாழ்கின்ற சதாசிவனென்னுஞ் சம்புவால் அஷ்டதி சைகளும் பதினன்குலோகங்களும் கண்டு சந்தோஷிக்கக் காரண ராகிய ஞானகுருவின் பூர்வஞானம் உதித்து மெய்ஞ்ஞானத்தை யடைந்து சித்தாதிகளுடைய திருவடிகளை தசதிட்சை விளங்க அகத்தியமாமுனி கிருபையால் எ-று. (சகசு)

விருத்தம்.

செங்கதிரோனுதித்துவளர்புவியிற்குள்ளேசெனித்தவுடல்பிற ந்ததுநாளொன்பதாச்சு, சங்கைபுடனிருந்துவந்தசூதச் சடங்க றுத்து அங்கசுத்திசுஸ்நாத்திற்செய்து,இங்கிதமாயருகிருந்தமாதர்க் கெல்லாம் இன்பமுடன்தேகமெல்லாம்நீர்களாடி, பங்கமாமெனை வளர்த்திக்கொடிபுதைத்துப் பலவிதமாயமுதுகொண்டுபடைத்திட் டாரே.

(இ-ள்.) சூரியனானவன் வெளிச்சத்தைக்கொடுக்கின்ற உலக த்தில் பிறந்துஒன்பதுநாளாச்சு ஆகையால் நானிருந்துவந்த அசுத் தத்தைநீக்கிச் சரீரத்தைச் சுத்திசெய்து சமீபத்திலிருந்த பெண்க ளெல்லாம்குளித்து பின் என்னைவளர்த்தி கொடியை வேறோரிடத் திற் புதைத்து பலவித அமுதத்தைப் படைத்தார்கள் எ-று.

மந்திரத்துக்கெட்டாதநாதவிந்தை வரவழைத்தவவனவளும் வேறுகாண்க, விந்துவிட்டேயனுபோகஞ்செய்ததந்தை விந்துஒரு புறந்தனில்வெவ்வேறுகாண்கதந்திரமாய்வயதுதந்தகலையுங்காண்க சார்விருக்குமறுத்துவச்சிதானுங்காண்க, சுந்தரமாமகத்தில் தேவ [illegible]

(இ-ள்.) மந்திரங்களுக்கெட்டாத நாதவிந்துக்களை வரவழைத்த அவனும் அவளும் விந்தைவிட்ட தந்தையின்விந்து ஒருபுறத்தின்றதினால் அதுவும் வயதைக்கொடுத்த கலைகளும், மருத்துவச்சியும் ஆகிய இவர்கள்வேறானதால் இவர்களைநீக்கி அகத்திலிருக்குந் தேவதைகளைநோக்கி தூபதீபநைவேத்தியங்கள் கொடுத்தார்கள்.

அகத்திலுள்ள சாஸ்திரங்கள்முடிந்தபின்பு அவரவர்களாறு பசியானபின்பு, மகத்தானபெரியோர்களருகேநின்று வரிசையுடனன்னையுமேயென்னைப்பார்த்து, ஜெகந்தனிலேவெகுகோடிகாலம் வாழ்ந்துஜென்மித்தோர்வயதுபெற்றுசெழித்துவாழ்வாய்,வகுத்து வைத்தநேர்மை யறியாமலாண்டே மாண்பரெல்லா மிப்படியே வாழ்த்தினாரே.

(இ-ள்.) சர்வசம்மதமான அந்தரங்கத்திலிருந்தசாஸ்திரங்கள் முடிந்தபின்னர் அவரவர்கள்பசியாற பெரியோர்களெல்லாம் என்னைப் பார்த்தார்கள் அப்போது என்னைப் பெற்றவளும் என்னைப் பார்த்து அநேககாலம்வாழ்ந்து ஒருவயதை பெற்றிருப்பதை யுணராமல் பெரியோர்களெல்லாம் என்னை வாழ்த்தினார்கள் எ-று.

சூதகமாயானிருந்தஅகத்தைவிட்டு சிறுவனைத்தானிருகரத்திலேதிமென்மேல்,சாதகமாய்கொடுங்கைதனிலணைத்துப்பின்புசயனமிகப்பார்த்துஅன்னையகத்திலுற்று, பேதமிலான் அன்னைபிதா அழகுசுற்றம் புகழ்பெறவும்வாழ்த்திஆலாத்திசுற்றஆதரவாயகத்திலெனைக்கிடத்திவைத்து அருள்பெறவுமன்னையுந்தானமுதீந்தாளே.

(இ-ள்.) நான் சூதகமாயிருந்த விடத்தைவிட்டு சிறுவனை இரண்டுகைகளாலுந்தாங்கி அணைத்து அன்னைக்குச்சயப்பத்திலிருந்து என்னுடைய அழகைவாழ்த்தி ஆலாத்திசுற்றி எனக்கு முலைப்பால் கொடுத்தாள் எ-று. (ருஅ)

சிரணிபுஞ்சிற்றிடைக்குத்தண்டைக்காலில் செழித்த துடையிடையதுக்கேயரைநாணிட்டு, நேராகவிருகரத்தில்காப்புநல்கி நெற்றிதனில்சிந்தூரப்பொட்டுஞ்சாற்றி, கூரானதிருவிழிக்குமையிட்டே பின்கொண்டைதனில்ரத்தினத்தால்கட்டிவிட்டு,ஆராரோவென்று தொட்டிலசையத்தானும் ஆட்டினாளிருகரத்தைநீட்டினாளே.

(இ-ள்.) அதின்பின்னர் குழந்தைகளுக்கணியவேண்டிய ஆபரணங்களை யெல்லாமணிந்து தொட்டிலிற்போட்டு வெகு அழகாக என்தாயானவள் தொட்டிலாட்டினாள் எ-று. (ருகூ)

நவரத்னஉஞ்சல்தனிலென்னையேவைத்துரதிமாதுமங்கையர்கள சூழ்ந்து, கவனமுடன்பலகலைகள்சிந்துபாடி கருதினேரெனைத் தள்ளிக் கவிகளோசை, கவனம்வருகாடலசைக தாட்டினர்கள் தாயானஅன்னையுமேயமிர்தமூட்ட,அவரவர்கள்பகுதிமுறையதாக ஆட்டினாரையவுஞ்சலாட்டினரே.

(இ-ள்.) நவரத்தின கஜிதமாகிய ஊஞ்சலில் என்னைவளர்த்தி பெண்களெல்லாம் முறையேசூழ்ந்து ஒருவர்மாற்றி ஒருவர்ஆட்ட என்னைப்பெற்றதாயானவள் இடையிலிருந்து அன்னமூட்டினாள்.

தொட்டிலாட்டின்சிறப்பு கரு.

ஆட்டினார்தொட்டிலிட்டு அன்னையுமென்னை
ஆராரோவென்றுஊஞ்ச லாட்டினார்களாலும்,

(இ-ள்.) என்னுடைய தாயானவள் என்னைத்தொட்டிலிலிட்டு ஆராரோ! ஆராரோ! என்கிற சத்தத்துடன் தொட்டிலாட்டினார்கள் எ-று.

ஆட்டினருஞ்சல்தனிலன்னை நானுமசையாமல் நித்திரைகள் செய்தேனண்டே, சூட்டியபொற்பணியொருபுறமிருக்க இருசெங் கையிற்தவளைதான்குலுங்க, கூட்டியசிங்காரதிருட்டிக்கதவடைக்க கோட்டைக்காரர் கொல்லர்கண்டெனைமறிக்க, பாட்டியவுஞ்சல சையநாட்டியகடமாதர் பரதசங்கீதமூதபாங்கிளாட-ஆட்டி.

(இ-ள்.) எனக்குத் தரித்திருக்கும் நகைகளெல்லா மசைய சகலபெண்களும் இசைபாட சர்வமங்களத்துடன் தொட்டிலையா ட்டினார்கள் எ-று. (ரூ௱.௲)

ஈராறும்வாங்கிசுழிமுனைமேனின்று - பின்புஇருநாலைக் கட்டி யொருமேலுமூட்டி, கூரானவாசிமுனைவழிநடக்கநல்ல கோகிலம் போலன்னையென்மேல்சிந்துகள்பாட, வீரானமாதவர்வந்து வீணை வாசிக்க-அன்னை-மேலணைத்துக்கொஞ்சிமுத்தமேவிதுதிக்கச்,சிரா னகொங்கைமடமாதுகள்பாட சித்திரசதுர்கூடமெல்லாம் பிரகாசி க்கவே-ஆட்டி.

(இ-ள்.) பன்னிரண்டு கலைகளைவாங்கி சுழிமுனையின் மேல் நின்று என்னுடைய தாயானவள் நல்ல இசைகளைவாசிக்க வேறு பெண்களெல்லாம் பாடகூடமெல்லாம் பிரகாசிக்க எ-று.

கண்டமத்திலொன்றுடனிரண்டுமாறவும்-வளர்-காலோடி நாலு மதின்மேல்துதிக்கவும்,கொண்டதிருச்சக்கரத்தி லொன்றுசுழிக்க என்மேல்-கோகிலச்சிந்துகள்பாடி அன்னைதுதிக்க, நின்றுநடனஞ்

செய்தல்ரஞ்சிதங்கள்போல் மாதர்-நேசமுடன்பக்ஷம்வைத்துப்பாசமுடனே, வண்டுமொழிக்கிள்ளையெனுமாதர்கூடியே மதுரவாக்கியமுடனேபதங்களோக்கிமதாக-ஆட்டு.

(இ-ள்.) கண்டஸ்தானத்தில் பன்னிரண்டு கால்களையும் மாறவும் திருச்சக்கரத்திலொன்று சுழிக்க என்மேல் வேண்டியசிந்துகளைப்பாடி அன்னையானவள்துதிக்க மற்றபெண்கள் உயர்ந்தவாக்கியங்களையுடைய பதங்களைப்பாடவும் எ-று. (௫௱௫)

சொற்பனஞ்சுழுத்தியெனுஞ்சாக்கிரத்தினுநல்ல - துரியந்துரியாதீதமுஞ்சேர்ந்துமேலாடக், கற்பனையால்நித்திரைவந் துற்பத்தியினல்பின்னுங் கருத்தினல்தெரிசனங்கள்கண்டுநிற்கையில், விற்பவமதாகிவளருற்பனத்தைதக்காணெந்தன்மெய்தனில் துய்யமதிமையமத்திலும் தற்பொருளின்கற்பனையாலெப்போது மாண்டையெந்தன் சாதனையால்வாசிவந்து சட்டமதாசசே-ஆட்டு.

(இ-ள்.) சொப்பனம் சுழுத்தி, சாக்கிரம், துரியம் துரியாதீதம் இவைகளை மேலேபாட வழக்கத்தினல் நித்திரைவந்து கருத்தினல் தரிசனங்களைக்கண்டு நிற்கும்போது தற்பொருளின் கிருபையினலும் பழக்கத்தினலும் வாசிவந்து சட்டமாச்சு எ-று. (௫௱௬)

குறைவிலாமதுமெப்போதுமுறைவின்முறைகள் கூன்கோதாட்டிமுத்தாட்டியன்னை தாலாட்டியே,சரசரவென்றவுஞ்சல்பதுமைகளாட நல்லசதுர்கூடமெல்லாநிறைந்துதாதிகள்பாட, அருவிநதிக்கரையிலளவாய் சென்றப்பொறிஐந்துபுலனைந்ததனை அழைத்துக்கொண்டுநல்ல, முறிகிக்கனலெழுந்தச்சுழிமுனைக்குள்மெத்தமுழுங்கையுடலசைத்துக்குலுங்காமலும்-ஆட்டு.

(இ-ள்.) சுற்றத்தார்களெல்லாம் எப்போதுங்கூடியிருந்துமுத்தங்கொடுத்துத்தாலாட்டி நான்குகூடங்களிலும் தாதிகளிருந்து பாட அருவிநதிக்கள்வரைக்கும் ஐம்பொறி ஐம்புலன்களையழைத்துக்கொண்டு சுழிமுனைக்குள் முழங்கையும் உடலும் அசைந்து குலுங்காமல் எ-று. (௫௱௭)

கள்ளஇந்திரியமதைதக்கருத்தில்வைத்துபின்பு கலையிலீரேழுமதைச்சுழியிலடக்கி, உள்ளத்திலும்பாழ்க்கதவைப் பூட்டியெனக்கு அன்னைஉறக்கம்வரஉஞ்சலினில்சிறக்கவேநின்று, வள்ளலெனுமன்னையுமாமதுரமூட்டி தாலாட்டிவைத்தணைத்துசற்றுமவள்புத்திகலையாமல்என்னளவெனைக்கைவிடா ஏந்தியேயன்னைபின்னு மேடுத்துமயமீதினில்வைத்துப்பிரியாது ஆட்ட.

(இ-ள்.) கலாக் தன்மையைப் பெற்றுள்ள இந்திரியங்களை மனத்திலடைத்து பன்னிரண்டு கலைகளையும் சுழிமுனையிலடக்கிப் பூட்டி எனக்குத்தூக்கம்வர மதுரவாசகத்தால் தாலாட்டி அன்னை யின்புத்தியானது சிறிதுங்கலையாமல் என்னையெடுத்து மடிமேல் உட்காரவைத்தாள் எ-று. (நாஅ)

சுத்தவெளிகோட்டையிரண்டுங்கதவைமூடி நல்லசித்திரவீதிய லைகையின்பரியோடவும் வைத்துமேசோதிவிசுத்திவாசி கலைகள் சுவாசமாறியபோதாகவிகளாறியேநின்று,சித்திரத்தெருவீயும்வாசி யோடவும் நல்லதெசவாய்வுபத்தும் பெருவிசையோடவுமூல, முத் திரைகம்பத்தடியில் நித்திரைசெய்ய சென்மமுன்னும்பின்னுமென் னைத்தள்ளியன்னைதயவாய்-ஆட்டி.

(இ-ள்.) சுத்தவெளியாகிய ஆகாசத்தின்கண் விளங்குங்கோட் டையின் இரண்டுகதவுகளையும்மூடி நன்றாய்ச் சித்திரிக்கப்பட்டிரு க்கின்ற வீதியில் பாரியோடவும் விசுத்திவாசலில் சுவாசங்கள் மாறியபோது அந்தத்தெருவிலும் வாசியானது ஓடவும் தசவாயு வுக்களும் மூலத்திலோடவும் நித்திரைசெய்ய அன்னையானவள் என்னைமுன்னும் பின்னுந்தள்ளி எ-று. (நாகூ)

இருபத்தோராயிரத்தறுநூறுபேரு மிழுத்துஞ்சலெனைத் தள் ளிக்கருத்துகந்துசுவாசம், வருத்தம்பாராமலுமே வைத்தணைத்து மேமகிமாமலர்கொங்கை வலக்கைவாயிலூட்டினள்,சுருக்காய்திரு த்தமதாகவும்பானமிர்த முண்டேன்வாசிசுழியில்கலைகொண்டிழுத் தேதொடர்ந்துமேவிஅந்தத், திருத்தமுடனும்வச்சிர உஞ்சலசைய மாதர்தெளிந்துகவிகள்பாடியெனைத்தள்ளவே-ஆட்டி.

(இ-ள்.) இருபத்தோராயிரத்து அறுநூறுசுவாசங்களையு மிழு த்து ஊஞ்சலானது என்னைத்தள்ளி சுவாசத்தின் வருத்தத்தைப் பாராமலே வைத்தணைத்து கொங்கையை வலதுகரத்தால்பிடித்து எனக்குஊட்டி வச்சிரதொட்டிலை மாதர்களெல்லாங்கூடி கவிகள் பாடி என்னைத்தள் எ-று. (நாய)

விருத்தம்.

இருந்தவுரந்தன்னையிருநாடிநீட்டி யியல்பானசுழிமுனைதான் கிடத்திவைக்க, கருவானகூர்மனவன்கதவடைக்க கனகசக்கிரதிரி கர்த்தன்சுமுத்தியோட, அருவமெனுங்குபேரனுந்தான் சுழியிலே ஆதாரமைம்பூதமூலஞ்சேர, மருகாமலென்னையன்னை தொட்டிலா ட்ட வள்ளிகதிக்கரைமேலுந் தூங்கினேனே.

(இ-ள்.) எப்பொழுதுமிருந்தபுரத்தைத் திரண்டு நாடு நந்தாயும் நீட்டிச் சுழிமுனையில் கிடத்திவைக்க அங்கேகூர்மனானவன் வந்து கதவைமூடவும் குபேரன் சுழிமுனையிலேறவும் ஆறுதாரங்களும் பஞ்சபூதங்களும் மூலாதாரத்திற்சேரவும் என்னைத் தாயானவள் தொட்டிலிலிட்டாட்டவும் நானும் வன்னிநதிக் கரையின்மேல் தூங்கினேன் எ-று. (ருகக)

தொட்டிலிட்டு அன்னையென்னை ஆட்டி நிற்கச்சுகந்தெளிந்துசுழுத்திவிட்டெழுந்தசோதி, முட்டிமுட்டி துடித்தகர்மப்பகையைப்பார்த்துமுறுக்கினஞ்செருக்கையிலே யன்னைதானும், கட்டிமுட்டி முட்டென்னையெடுத்தணைத்து கனக்கும்பஸ்தனவமிர்தம் வாயிலீந்தாள் எட்டியெட்டித்தவழ்ந்தன்னைமடியிலேறி எளிதாகவிளையாடியிருந்தேனன்றே.

(இ-ள்.) என்னுடைய தாயானவள் என்னை தொட்டிலிலிட்டு ஆட்டிநிற்க சுழுத்தியிலிருந்தெழுந்த சோதியானது முட்டிமுட்டி துடித்த கர்மப்பகையைப் பார்த்து செருக்கி முலைப்பாலைக் கொடுத்து வந்தாள் நான் அதையுண்டு எட்டியெட்டித்தவழ்ந்து தாயின் மடியின்மேலேறி விளையாடினேன் எ-று. (ருகஉ)

பாராட்டிப்பலவிதமாய்வளர்த்தாளன்னை பதியானபாகமெல்லாமோடியாடி,சீராட்டிவீதியெங்குந்தவழ்ந்துயானும் சிற்றடியாலத்தடியிட்டிருந்தேன்பின்பு,நீராட்டிமையுமிட்டுதிலதமிட்டிநேர்மையொருவர்னமதாய்வளர்த்தாளன்னை,ஆராட்டியெனைவளர்த்துபுவியிலேதான் அருமையுடன்பிறந்து வயதைந்துமாச்சே.

(இ-ள்.) என்னுடைய அன்னையானவள் என்னைப்பலவிதமாய் பாராட்டிவளர்த்தாள், நானும தெருவில் தத்திப்போய் விளையாடியிருந்தேன், பின்னர் என்னை குளிக்கச்செய்து மையிட்டுப் பொட்டிட்டுமிகவும் ஆசையாய் வளர்த்தாள், அங்ஙனம் வளர்த்து வருகையில் ஐந்துவயது உண்டானது எ-று. (ருகங)

அந்தமுள்ளதிங்களொருஐந்துமாச்சு அருமையதாயெனைவளர்த்தஅன்னைதனை, தந்தபுள்ளோர்திங்கள் கல்விநூல்கள்சமைக்தானகணக்கெழுதபுவியின்மீதில், விநயமுடன் பிழைக்குமென்று பள்ளிதன்னில் வேதியர்தன்வசத்திலே வைத்துமேனும்,எந்தனுள்ளமகிழ்ந்துவொருதிங்கட்குள்ளே யெண்ணறிவுஞ்சாஸ்திரமும்பெழுதினேனே.

(இ-ள்.) இங்ஙனம் ஐந்துவயதுவந்தவுடன் என்னைப்பெற்றோர்கள் நல்லாசிரியனைத் தெரிந்து பள்ளிக்கூடத்தில் விட்டார்கள்,

நாமேறு அங்கனமிட்ட ஒருவநக்ஷத்திற்குள் எண்ணும் சாஸ்திரமும் எழுதினேன் எ-று. (ருகச)

கற்றறிந்தேன்சாஸ்திரங்கள்கல்விநூல்கள் கருத்தறியவயதெனக்குஈரைந்தாச்சு, சித்தறிந்துவிளையாடகவனமாச்சுசெயலறிந்துமாதர்களைச்செபிக்கலாச்சு, வித்தறிந்துவிளையாடி வயதுபோச்சுபேன்மேலும்பொருளாசைமிகவுமாச்சு, பற்றில்லாவுறமுறையுமேனுண்டாச்சு பார்மீதில்பேராசை படைத்திட்டேனே.

(இ-ள்.) சாஸ்திரங்கள், நூல்கள் இவைகளைக்கற்றறிந்து சித்துணர்ந்து விளையாடக்கருத்துண்டாச்சு பெண்களை வெல்லலாச்சு, விளையாடி விளையாடி வயதும்போய் பத்துவயது உண்டாயிற்று அதின்மேல் பொருளாசை மிகவுமுண்டாய் உலகத்தில்பேராசைக்காரனானேன் எ-று. (ருகரு)

கருத்ததனில்முன்னிருந்த அறிவும்போச்சுகனத்தபொருளாசையெனக்கதிகமாச்சு, விரித்தபுவிபெண்டிர்மக்கள் மயக்கமாச்சுவேகமுடன்பொருளாசைமேன்மேலாச்சு,வருத்தமுடன்பலசூதும்பொய்கள்பேசி வாய்மைதெரியாமல்மிக வாழ்ந்தேன்யானும், உருத்தமுடன்தரித்தபடியுலகுக்குள்ளேஉகந்துவெகுபாக்கியங்கொண்டிருந்தேனுண்டே,

(இ-ள்.) என்னுடைய எண்ணத்தில் முன்னிருந்த அறிவுபோய்ப் பொருளாசையதிகப்பட்டு பெண்பிள்ளைகளின் மயக்கம்மேன்மேல்பெருக, பலசூதும் பொய்களும்பேசி, உண்மை தெரியாமல் நான்மிகவும்வாழ்ந்தேன்பின்னர் வெகுபாக்கியவானானேன் எ-று.

விதமானபுவிதனிலேயான்பிறந்து வெகுதனமு மாடுமககள் பெண்டீர்சுற்றம், நிதமாகவாழ்ந்து இனிபிருந்தநாளில் நிஷ்டைசிவபூசையினுநிபுணனானேன், சதமானமோக்ஷமுனக்களிப்பேனென்று சமத்தானகாரியத்தின்குருக்கள்வந்து, பதமானஅருள்பெற்றுவாழ்வீரென்று பதியில்வந்துதீட்சைதந்து பகர்ந்திட்டாரே.

(இ-ள்.) உலகத்தில் பிறந்து இப்படிவாழும் நாளில் நிஷ்டையிலும் பூசையிலும் நிபுணனானேன், அப்போது காரியகுருவானவர் வந்து உனக்குமோட்சங் கொடுப்பேனென்றுசொல்லி தீட்சைசெய்தார் எ-று. (ருகசா)

கொச்சகம்.

ஜெனனமுக்திசித்திபெறுந் தெய்வசித்திமோக்ஷவரை
இனமறிந்துவுலகுதனி லிடேறிவாழ்ந்தவர்க்கு

கனகரத்னமேலதிக காரியமாஞ்சற்குருவக்
தினமறிந்துதீட்சைவைத்து இயம்பினவாறெப்திலனே.

(இ-ள்.) ஜெனனத்தில் அடையவேண்டியமோட்சத்தையடைந்து உலகத்தில் ஈடேறுவதற்கு குருவின்தீட்சைவழியே தினமும் நடந்துகொண்டேன் எ-று. (ருகஅ)

அஷ்டஅயிஸ்பரியமதும் யானளித்துவான்புவியில்
கஷ்டமணுகாமனுமே காரியகுருக்கள்வந்து
இஷ்டமறைவேதசிவ இன்பமருள்பூசைவிதி
சிஷ்டையெனக்களித்து திக்ஷைவைத்துஓதினரே.

(இ-ள்.) காரியகுருவானவர் விரைந்துவந்து உனக்கு அஷ்டஐஸ்வரியங்களுமுண்டாகக் கடவதென்று சொல்லி தீட்சை செய்தார் எ-று. (ருகக)

கலித்துறை.

கைப்பொருள்வாங்கி யுபதேசஞ்சொல்லி கருதியேதான்
மெய்ப்பொருளாவி மேன்மேலெனக்கெய்து விளக்கமுறி
மைப்பொழிதேவ மந்திரக்கியான வாறுதன்னை
சைப்படிதீட்சை தவமிதுவென்று சாற்றினரே.

(இ-ள்.) என்னுடைய கைப்பொருளைப்பெற்று உபதேசித்து, உடல், பொருள், ஆவி, இந்தமூன்றையுந் தம்முடையதாகக் கொண்டு தேவமந்திரஞானத்தை தீட்சைசெய்தார் எ-று. (ருஉ0)

கனமானபூசை யெலிதூபதீப காரணமாய்
இனமாகச்சொல்லி யெடுத்துரைத்தாரிந்தப் பூமிதனில்
தனகனமேவி சிவபூசைஓம தற்பனமே
உனதனுஷ்டான உபதேசவாக்கிய மோதினரே.

(இ-ள்.) கனத்தபூசை, பலி, தூபம், தீபம் இவைகள் காரணமாக பூமியின்கண் சிவபூசை, ஓமம், தர்ப்பணம், அநுஷ்டானம் முதலியவைகளை உபதேசித்தார் எ-று. (ருஉக)

வெண்பா.

அவ்வும்உவ்வென்று ஐயுங்கிலிச்சவ்வும்
சிவ்வுமவ்வென்று செபயினர்-யவ்வென வா
நகரமகர நாடியருமொ ரமென வும்
பகரென்றுந்திக்ஷைபிதுபார்.

(இ-ள்.) அவ், உவ், ஐயும், கிலியும், சவ்வும், சிவ்வும், மவ்,யவ் நங், மங், ஓம் என்றுசொல்லி இதுவே தீட்சையென்றுஞ் சொன்ஞர்கள் எ-று. (ருஉஉ)

எட்டிரண்டும்பத்து வினியதொருதீக்கை
அஷ்டமாசித்திவிளையாடு-மிஷ்டமுடன்
ஐயஞ்சுமாற அவனிமுதல்வான
மெய்பிதுபார் ஜெகவசியமேல்.

(இ-ள்.) அகார உகாரங்களையும், தசதீட்சையை தீட்சாமார்க்கமாக உபதேசித்து அஷ்டமா சித்துக்களையும் இதனுல் ஆடக்கூடுமென்று சொன்னார், ஆகையால் அங்ஙனஞ் செய்தால் ஜெகவசியமுண்டாகும் எ-று. (ருஉ௩)

சிவபூசைசெய்தவிவரம்-தரு.

பூசைகள்செய்தேன்காண்-சிவக்கியான
பூசைகள்செய்தேன்காண்.

(இ-ள்.) நான் சிவஞானங் கொடுக்கத்தக்க சிவபூசை செய்தேன் எ-று.

வாசிக்குதிரைமேலேறிக்கேசரத்தின் வழியோடேசென்றுச் சுழியறியாமலும், வேசிக்குளாசைவிரகத்துடனேயான் வெறும்பூ பூசைமணியாட்டிவீணுக்கேயான், ஆசித்துசற்குருதெய்வமிதுவென்று அர்ச்சித்துஆத்துமந்தன்னையறியாமல், நேசித்துப்பூசைநிஷ்டையறியாமலும்நின்றேநிமித்தமாய் கண்டுருசெய்தேயான்-பூசை.

(இ-ள்.) மூச்செனகிற குதிரையின்மேலேறி கேசரமார்க்கமாகச்சென்று சுழிமுனையையறியாமல் வேசியர் விரகத்துட்சிக்கி வெறும்பூசைமணியையாட்டி வீணுக்குகுருவும், தெய்வமும் இதுவேயென்று அர்ச்சனைசெய்து நிஷ்டையையுணராமல் குருட்டுப் பூசைசெய்தேன் எ-று. (ருஉச)

கோலமறியாமல்காலையில்வில்வக்கொழுந்தை முறித்திநிகூகைகள்போலவும், சீலவுந்தேவாரமோதித்துதித்துடன்சங்கையறியாமல்பங்கம்பட்டேபினி, காலேதனிலெழுந்தாலேயஞ்சுற்றிக் கருத்தினில்வாசியைக்கண்டுதுதியாமல், சிலமலரையுயிரென் றறியாமல் சென்றுபறித்துயான்கொண்டுவந்தர்ச்சனை பூசை.

(இ-ள்.) பூசையின்கோலத்தை நன்றாயுணராமல்அதிகாலையில் வில்வக்கொழுந்தை முறித்து கூகைகளைபோலத்தேவாரபாராயணஞ்

ந்தால், நிரையடியோடுஉள்ளதாய்வைத்து நின்றமேலோடதுமூடி, துறையதாய்சீலைகவசமெண்ணேழு சூட்டியேபுடமுழமாமே.

(இ-ள்.) வற்றின மெழுகுபதத்தில்வழித்துப் பில்லைதட்டி ரவியிற்காய்ந்து மேலோடுமூடிக் கவசஞ்செய்து முழப்புடம் போட வேண்டும் எ-று. (அ௬௬)

அந்ததோர்புடமிட்டக்கினிமூட்டியதுதணலாறியபின்பு, இந்ததோரண்டமெடுத்துடன்பார்க்க இந்திரனொளிவதுக்கதிதம், சந்திரபுஷ்கரணிசாரையினொட்டஞ்சாரணைசதகோடிதேர்ந்த, மந்திரசுரூபமவுனமந்திரங்காண் மகத்துகள்மறைந்ததுமிதுவே.

(இ-ள்.) புடமாறினபின் பார்க்க ஒளியாயிருக்கும் இதையே மௌனிகள் மறைத்த மந்திரமாம் எ-று. (அ௭௰)

கொச்சகம்

சுன்னங்கடுங்காரமிது சுக்கிலசுரோணிதத்தால்
விண்ணமில்லாதண்டபற்பம் வெகுபதனமாய்க்கருதி
தன்னையறிந்தேமதியால் தானறிந்துகற்பமதில்
சொன்னேன்குருபஸ்பமதைத் தொடுந்தேன்பணவிடையே.

(இ-ள்.) இது கடுங்காரமான சுன்னமாம் இதிவே அண்டபற்பமாம், இதையறிந்து கற்பத்தில் உபயோகிக்க வேண்டிய அளவு பணவெடையாம் எ-று. (அ௭௧)

காரமதில்சாரம்விட்டு கற்பமிதையிலேகியமாய்
சீருடனேபஸ்பமிட்டு செய்விதமாயுண்டேன்காண்
மாறஅதிகாலையிலு மாலையிலுமிவ்விதமாய்
தேறவுங்கானுண்டுதச திங்கள்நிறைவேறினதே.

(இ-ள்) இதில் காரசாரங்கள் சேர்த்து லேகியமாய் செய்விதப்படி செய்துண்டேன், பத்துமாதங்களும் இவ்வாறே நிறைவேறினது எ-று. (அ௭௨)

கலித்துறை.

சூதாமாய்கை யடராமல்வாசியைத் தூக்கிவிட்டு
ஊதாமலூதிப் பிராணையமூல முள்ளடங்க
வேதாகமத்தின் விதியையறிந்து கற்பவேகமதாய்
ஆதாரங்காண விராஜாங்கயோக மறிந்திட்டனே.

(இ-ள்.) மாய்கையானது சேராமல் வாசியைத்தூக்கி ஊதாமலூதிப் பிராணையத்தில் உள்ளடங்க வேதாகமங்களின் விதியையுணர்ந்து கற்பவேகமாய் ராஜாங்கயோகத்தை அறிந்தேன் எ-று.

மூன்ருண்டுமாச்சுது மூலப்புளியிந்த முக்கியத்தால்
ஆண்டாண்டுமாண்டு மருள்நாலுமாண்டி லறியும்விதம்
காண்டாபுரமெரித் தானந்தமூலக் கதிர்மதியில்
தூண்டாமணிவிளக் கேற்றிவிட்டேன் திரு வள்ளுவனே.

(இ-ள்.) மூன்றுவருஷங்கள் ஆயின, இவ்வாறு அனுபோகித்துக் காண்டாபுரத்தை எரித்த ஆனந்தமயமான மூலாதாரமான கதிர்மதியில் திருவள்ளுவன் தூண்டாவிளக்கை ஏற்றிவிட்டான்.

திருவானசோதி கருவூருநாட்டில் தேன்பொழியும்
பொருளாம்வாலாம்பிகை மலர்ப்பொற்பதந்தனில் போற்றி
அருளாமதிமலர் சிவராஜயோக மறிவித்தனள் [செய்தேன்
குருவபயகத்தி னுபதேசத்தாலுங் குறைவில்லையே.

(இ-ள்.) சோதிமயமான கருவூர்நாட்டில் வாலாம்பிகையின் திருவடிகளை வணங்கினேன், அவளோ சிவராஜயோகத்தைஉணர்வித்தாள் எ-று. (அ௭௫)

தனமேவியகரு காரசாரத்தினில் தான்மருவி
தினமுமைம்பாச மவுனங்கொண்டேன்திரு வள்ளுவனும்
மனமேவியகுரு வாக்கியத்தால்மூல வாசிகொண்டு
புனலாவதுங்கனை சரமாறியேற்றிப் பொழிந்திட்டனே.

(இ-ள்.) செல்வந்தழைக்குங் காரசாரங்களிற் சேர்ந்து மவுனங்கொண்டேன் குருவாக்கியத்தினால் மூலவாசிகொண்டு கனைசரமாற்றி ஏற்றிப் பொதிந்திட்டேன் எ-று. (அ௭௬)

வெண்பா.

கல்லுப்பின்வாறு கருத்தறியாதுண்டுமனு
வல்வினைக்குள்ளாகிமனம் வாடினார் கல்லுப்பு
வெள்ளைக்கல்லுப்பு வெகுவிதமாயாய்ந்தாலும்
உள்ளமதிலுண்டென்று உன்.

(இ-ள்.) கல்லுப்பின் விதத்தை உணராமல் வலிவினைக்குட்பட்டு வாடினார் வெள்ளைக் கல்லுப்பை ஆராய்ந்து பார்த்தாலும் உள்ளம்மாத்திரம் உயர்ந்தவஸ்துவில் உண்டென்று நினை எ-று.

என்றுமிந்துப்பு எண்சாணுடலிருக்க
கண்டுமறியாதென்ன காரணமே-யென்றுமதி
வாரியமுரியதை வன்னியிட்டுக்கார்ரியாின்
வீரியமாபானுணரு மெய்.

(இ-ள்.) இந்துப்பு எண்சாண் உடம்பிலிருக்க அழியாததெ ன்ன காரணமோ அமுரியை வன்னியிட்டுக் காய்ச்சினபிறகு வீரிய மாகும் சரீரம் எ-று. (அஎஅ)

உப்பின்கசடதுபோய் ஊறலதுமாறினதால்
முப்புசுன்னமாமதற்கு மூன்றுபேர்-உப்பதனுல்
கற்பாந்தரங்கோடி காயமிதுவனுத்து
செற்பாயும் வாசியினுல் தேகம்.

(இ-ள்.) உப்பின் ஊறல்மாறினுல் முப்புசுன்னமாகும், உப்பி னுல் கற்பாந்தரகோடி காலம் காயமானது வலிவுபடும். சரீரமோ வாசியினுல் வளர்ந்ததாம் எ-று. (அஎகூ)

வாசிவசப்படுதல்-வண்ணச்சிந்து-தரு.

தனனுந்தனனுந்தனனத்தனன தந்ததனனதனதனதனனதனதன
தனனதனதனதனனதனதனதனதானதானதானதனதந்ததனனு.

ஜெகமேவியவாருலகுந்தனிலிலகும்பரி - யகவாரிதவானகிலம் புகழ்மதிசந்திரசுகவானுள-பூரணவம்பதிகதிர்சூழ்வட-மகமேரதில் வாழ்ந்திருவம்பல-சுடர்மாமணிகனம்பல-இடைபின்கலை சுழியின் முனைதுரியாதித தலமேவியநான்கலையொத்துருவலஞ்சுற்றினி-யிட பாரிசமர்ய்நடனம்புரி-அருள்சாதனைகருவூர்வளநா- டடன்பாடுள நிருபங்களில் - அதிவானகர்வந்துதிபெற்றெருரு மலர்பொற்பதம் விதிதன்செயலென்-தந்தைகூறதிதங்களை யுதித்ததவர் தனனுந்.

(இ-ள்.) உலகங்களினும் விளங்குகின்ற சூரியன் வலமாகின்ற மகமேருவில் நடனஞ்செய்கின்ற நாட்டின் என்தந்தை அதிசயங் களை உதித்தவள் எ-று. (அஎகூ)

மதுபாரமுரியுவரிந்து சரிரந்தனிலலிவிந்துகூர் களி வின்பதர சகெந்தியின்-தசநிங்களுமுண்டமுதேபசு-மயிர்தங்களும்விதபோச னமாங் விரும்புங்கலைமதிசாரணை - அகங்கொண்டேபகிரண்டமுந் திருவம்பரயுகமண்டல-நதிசூழ்கமலம்வரைசுற்றிதழ் - மணிபூரகமு னை வாசியுமே கரைகண்டுளனருள்தாவென - துரைகண்டுகையாய் தசவாய்வது-மொருமித்துடன்-அரியாசனமே-எவர்க்குமுயிரென க்கும்பொருள்-அறுநீர்சுவை-செயநீர்கதிர்வருமேமதி மனேவேக மாய்-தனனுந்.

(இ-ள்.) சந்திரனுல் உண்டாகும் இந்தசரீரத்திலுள்ளதேயாம் அதைப் பத்துமாதங்கள் உண்டபிறகு சாரணைகொண்டு பிராணு யமஞ்செய்து பத்துவாயுவும் ஒருமித்து மனேவேகமாய் எ-று.

இகம்பரமேவெளியிற்கனி மதுரத்துடனிடராகிய சஞ்சலத்துள்துடராமலங்கருவாகியபஞ்சுருபத்தினிலுறவக்கணே கதிர்மேவியபாலமிர்தம்பொழியமுதுண்டபின் கருணைலயஞ்சுழிமேல்சுடர்-கவியத்தசைகலைகொண்டந்தி காலையிலும்புளிநீருகை-அருநீர்சுட ருசிறுஞுளது-கெதியென்றுடன்பசியத்தனை யெரிகும்பியினில் குடியேறியமுனைவாசியும்-பிரியாததுநங்கினமென்றுடன்முதலட்சரந்துடியாகவு-மொருமித்துடன் முடிசுற்றினுடித்தறி-தனஞர்.

(இ-ள்.) இகபரவெளியில் நிகரான பஞ்சபூத சொருபத்தில் அமிர்தம்பொழிகின்றதையுண்டு காலையில் புளிநீரைஉண்டு ஒருமித்து முடியாகிய சுழிமுனையைச் சுற்றியறியவேண்டும் எ-று.

வழிகண்டினிபாராதிதப்பெருந்-துறையாகிய மதவாகியதோகுசிகண்டதின்முனை தாரையில்-கழியாமலும்-யான்விழிமாதனுக்கிரசம்பரி-கரைவேதகமாய்ஒருநாளிலும் - பிரியாமலுமபிராமியின்-மலர்ப்பொற்பதம்விதியாய்ப்பணிந்து-தொழுதேயருள் அறுநீர்புளியுமுறவாய்ரவிமூலந்தனி - லுருவேகமதாயரியுமரன் பிரமாதிகள்-இமையோர்களுமெவராலறி-புவனந்தனில்கருவாய்வெகுசெந்தனைவோரின்முடலிப்படி கருநெல்லியின்கனிபுண்டுவெண்ணதிமா மதியருள்கண்டனர்-தனஞர்.

(இ-ள்.) பெருந்துறையான கண்டத்தின்தாரைமுனையில்அனுக்கிரகம் பெற்று ஒருநாளில் வாலாம்பிகையின் பாதத்தைவணங்கி கருநெல்லிப்பழத்தையுண்டு மதியின் அருளைக்கண்டு எ-று.

அனைவோர்களுமேஅறியாரறிந்-தவராகிலு மனவுற்பனமாய்-மதுரந்தனையமுதென்றுள-தெவராகிலுமிந்தெனமிக்கரு - சுழியென்றதுதவறுமலுநூல்-வழிகண்டுமைமவுனந்தனை-கெவுஞதிகள்வெகுநாள்யுகளுசிவயோகஞ்செய்-தறியாமலும்சவமாகினர்கள் தவஞ்செய்யகமவர்பெற்றுடன்-உவர்கண்டறியாருதகங்களி மதபேதமாயிவர்ஞானிகளா-யிலகும்புவியுலகங்களில் பரதேசியதாய்சுகபோகிகள் குகைசாதனைவயிறுசிவன் கவனத்துடன்உடல்போய் சுடுகாடேகினர்-தனஞர்.

(இ-ள்.) எல்லாரும் உற்பனமாய் நூல்வழியைக்கண்டு மவுனத்தை கெவுஞதிகளாற் சித்திசெய்து ஆறுமாதங்களில் சித்திபெற்று பரதேசியாய் சாதனைசெய்து உடல்போய்ச் சுடுகாட்டைச் சேர்ந்தார்கள். (அஅச)

தசவாய்வதுவும்வசமாய்கலைசுவாசங்களையசையாமலுமேஅடியாகியமூலந்தனில்-விசுவாசியதும்விதமாய் வயிராக்கியத்துட னிச

வாக்கினைகொண்-டினசிங்கெனமவுனந்தனி லருள்பெற்றுடன்யோகத்திரு-அருள்பெற்றனுக்கிரகித்துடன்- கெதியாகியதோர்-இருளத்துடன்வரமுத்தியில்- திருவாய்மதுரம்பதமேவிய மோட்சத்துறைகறைகண்டெனுமே-மதியும்ரவிசிவரூபமும் குருமந்திரமாய் புகழ்யங்கென-சுழியின்முனைமுதலட்சரமிதுபின்னிடு கடையட்சர மறிவித்தனர்-தனனாந்.

(இ-ள்.) பத்துவாயுக்களை அசையாதபடி அடிமூலத்தில் இருளற்று குருமந்திர வழியினின்று சுழிமுனைமுதல் எழுத்தின்மூலமாகக் கடைஎழுத்தையும் உணர்வித்தனர். (அஅரு)

சுகசீவனமாய்ஒருபோதமு-தமிர்தங்களில்பெரியோர்களுமேஎரிகும்பிதன்வார்பாடொழிந் துலகங்களிலும் கருவாளிகள்-அவர்மேவிய-தலவாசமதாய்மருவிப்புனல்-மதுரங்களை மவுனம்பரி-துரியாதீதமிடைபின்கலை சுழியின்முனைகிரிசூழகமாய்- தச தீட்சையிலதிதத்தவஞ் ஜெகசூஸ்திரமாய்நடமந்திருமடைவாயினி லுயிராகியதோர்-பறவைப்பட்சியடைவைப்போலு மிவர்தன்னெறி பார்மதிதன்னிடரவியின்செயல்களைகொண்டுடன்-தசவாண்டினில்புலனைம்புலன்முனையாந்தனர்-தனனாந்.

(இ-ள்.) சுகமாய் ஒருநாள் அமிர்தமுண்டு துரியாதீதத்தில் பிராணயாமம் செய்து உயிராகிபட்சியை தன்வசப்படுத்தி பத்து வருஷங்களில் பலத்தை யடைந்தார்கள் எ-று. (அஅசு)

வாய்வோடனல்சேரசையாமலும்-வசமாவதுதேய்போம்பிறைதான் திறையாலுமலுமதிபூரண-பிறையாவதுமேமதிவன்னியில்-உருவாகியபின்னிறவாயுடல்-சேர்வம்பதிகெதியாகியபின்-சிவஞானிகளவர்பெற்றபேர்-துறவறமேநிசமென்றிரு-பிறவாரிதுமூன்றிலட்சரம்-மீக்காற்றுணர்பழுதென்றிலையார்பத்மப்பதங்கருணைப்பெறுமறவாதொருநாள்மவுனந்தனில் கவனம்விடா ரருள்பெற்றடைவாரமிர்தச்சிவயோகத்தினில்-திருவள்ளுவ னுரைதன்மொழி - தமிழ்வண்ணமுமருள்பெற்றெழும்-தனனாந்.

(இ-ள்.) வாயு, அனல் இவைகள் அசையாமல் தேய்பிறைபோல் சிவஞானக்கள்வர்கள் பெற்ற துறவறமே உண்மையானதென்று இறைவன்பதம் பணிந்து சிவயோகத்தில் அருள்பெற்றிருந்தேன் எ-று. (அஅஎ)

கொச்சகம்.

நற்பிறவியாயிருந்து நால்தோறுஞானமொழி
கற்பனையால்சண்டறிந்து காலமதுபோக்காமல்

உற்பகமாய்கற்பமதி னுட்கருவினுளுமறி
தற்பரசிகாமணியாய் தாரணியில்வாழ்வாரே.

(இ-ள்.) நல்லஜெனனத்தை யடைந்திருந்து தினமும் ஞான மொழியைக் கண்டுணர்ந்து காலத்தைவீணேபோக்காமல் உட்கருவினுளும் தற்பரசிகாமணியாய் உலகத்தில் வாழ்வார்கள் எ-று.

அண்டபற்பமுண்டுவர ஆக்கைதனிலுள்ளவினை
உண்டகற்பநாலாண்டி லூழ்வினைவந்தெய்திடினும்
கண்டனனுபோகமதாய் கன்மவினைசூழ்ந்திடினும்
சண்டனதுவாய்லபிக்குஞ் சார்வதுமறிந்திலரே.

(இ-ள்.) அண்டபற்பத்தைப் புசித்துக்கொண்டு வந்தால் சரீரத்திலுள்ள வினைகள் நாலாண்டில்போகும், கர்மவினை வந்தாலும் விலகும் எ-று. (அ௮௧)

கலித்துறை.

வித்தால்விளையு மெய்வாழ்க்கையென்று மிகமகிழ்ந்தேன்
சத்தாகினுஞ்சனி யாமனுங்கற்பஞ் சாதித்துயான்
எத்தாகவுண்டு இருந்தாண்டுநாலு மினிகடந்து
குற்றமதாக வூழ்வினைவந்து குடிகொண்டதே.

(இ-ள்.) இவ்வாழ்க்கை ரொம்பவும் உயர்ந்ததென்று மிகவும் சந்தோஷித்தேன் ஆனாலும் கற்பத்தைச் சாதித்து தந்திரமாகவுண்டு நாலாண்டுகடந்தும் ஊழ்வினையானதுகுடிகொண்டுவந்தது.

என்னுக்குளம்பிகை பாதாரவிந்த மினிபணிய
வின்னம்வாராம லூழ்வினையோடி வெளிப்படுங்காண்
அன்னைவாலாம்பிகை அவிழ்தத்தினல்பிணி யற்றுவிடச்
சொன்னார்வயித்திய சூட்சசூடாமணி சூழ்தில்லையே.

(இ-ள்.) அகத்தின்கண்ணுள்ள அம்பிகையின் பாதாரவிந்தத்தைப்பணிய ஊழ்வினையானது ஓடும் அவளுடைய ஔஷதத்தினல் நோய்களொழியச் சூட்சமும் சொன்னாள் எ-று. (அ௯௧)

வெண்பா.

இந்தஜெனன மிருவினைக்கீடாக
வந்துதித்தமார்க்க வல்வினைகாண்-இந்த
அவிழ்தத்தினலறுமே ஆக்கையதுக்குமொரு
தவமதுநாள்முன்செய்த சாந்தி.

(இ-ள்.) இருவினைவயத்தால் இச்சென்மம் வந்ததாகும் அது வாலாம்பிகை ஔஷதத்தால் விலகும் எ-று. (அ௯உ)

கற்பகத்தினுனுதித்த கர்மவினையதுவுஞ்
சொற்பதத்தினொலொழிய சொல்லுவேன் உற்பத்தி
மதிபிசகாதுண்டக்கால் வல்பிணிபுநோயகளும்
அதிவிதமாங்கற்பத்தா லறி.

(இ-ள்.) கற்பத்தினால் வந்தவினைகளும் சொற்பத்தில் ஒழிய வழிசொல்லுவேன் சந்திரபானத்தை தவறாதுண்டால் வலியநோய்களும் ஒழியும் எ-று. (அ௯௫)

விருத்தம்.

ஆதியாய்விளங்குஞான வெட்டியாயிரத்தைஞ்ஞூறும்
நீதியாம்நிகழ்த்தவாலை நிலர்மலத்தாளைப்போற்றி
சோதியானந்தரூபன் சுயகுருமுனியின்பாதம்
வேதியன்மொழியஞான மெய்க்குருவிளங்கத்தானே.

(இ-ள்.) ஞானவெட்டி ௲௫௱-ல் சொன்ன வாலாம்பிகையின் பாதத்தைவணங்கி அகத்தியமுனிவரை நமஸ்காரஞ்செய்து குரு அருள் விளங்க சொல்லுவேன் எ-று. (அ௯௬)

மானமும்புவியுமேருமும் வாருதியனுக்கிரகத்தால்
தேனெனுமொழியினாளே திங்களுமருக்கனாலும்
ஞானம்வந்தமைந்தபோது நாதவிந்தருளாலெய்தும்
கானெனுஞ்சூதவித்தைக் கைவசமாச்சுதாண்டே.

(இ-ள்.) ஆகாயம், உலகம், மேரு, வாருதி, சூரிய சந்திரர்கள் இவைகளின் அருளினால் சூதவித்தை கைவசமாச்சுது எ-று.

வேதியர்குலத்தில்யானும் விந்துதித்தளவையெல்லாம்
சாதியென்பரைக்குள்வந்த சங்கடமெல்லாஞ்சொன்னேன்
சோதியானந்தஞானச் சுழிமுனைநடனங்கண்டு
நாதவிந்துதித்தசூக்ஷ ரகசியமறிந்தேனாண்டே.

(இ-ள்.) நான் பிராமணர்குலத்தில் உதித்து சங்கடங்களெல்லாஞ் சொன்னேன் சுழிமுனை நடனங்கண்டு நாதவிந்துக்கள்உதிக்கும் சூட்சரகசியத்தை யறிந்தேன் எ-று. (அ௯௮)

அனாதியாய்வெளியாய்நின்ற அரூபத்தையறிந்தவாறும்
வினாடியான்பிரியாவின்பம் விந்துநின்றுணர்ந்தவாறும்
பனாமுடிமயிர்ப்பாலத்தில் பழம்பொருள்தெளிந்தவாறும்
கனவுபோல்கண்டகாக்ஷி கற்பத்தாலறிந்தேனாண்டே.

(இ-ள்.) அனாதியான அரூபத்தை உணர்ந்தவிதத்தையும் விந்திருந்த வரலாற்றையும் மயிர்ப்பாலத்தின் தன்மையையும் கற்பத்தால் உணர்ந்தேன் எ-று. (அ௯௯)

அன்னை தந்தைகருவிதனிலுதித்தவாறும் அகிலமதில் யான்பிறந்துவளர்ந்தவாறும், சின்னவயதளவில்கல்விகற்றவாறும் தெளிந்துலகத்தோர்களுடன்சேர்ந்தவாறும், நன்னயமாய்சற்குருவையடுத்தவாறும் நம்பிசிவபூசைதனில்நயந்தவாறும், இந்நூல்மொழியாயிரத்தைந்நூறுக்குள் நேர்மையெல்லாமொவ்வொன்றாய்நிகழ்த்துவேனே.

(இ-ள்.) பெற்றோர்கள் கருவில் பிறந்த விதமும் உலகத்தில் நான் பிறந்து வளர்ந்தவிதமும், கல்வி கற்றதும், கற்றவர்களுடன் சினேகித்ததும் குருவை அடுத்ததும், சிவபூசையில் விரும்பினதும் இந்தநூலில் சொல்லுவேன் எ-று. (அகூஅ)

அண்டபிண்டம்பிறந்தவரலாறுஞ்சொன்னேன் அகண்டசத்த தீவுகளுமேழுஞ்சொன்னேன், மண்டலஞ்சூழ்வாரிமதிரவியுஞ்சொன்னேன் வாரமுதல்கிரகஉச்சமாறல்சொன்னேன், கண்டநக்ஷத்திரமதுவுங்கருவூராறுகரு தொண்ணூற்றாறுஞ்சுட்ட கருத்துஞ்சொன்னேன், எண்டிசையுமஷ்டகுலவெற்புஞ்சொன்னேனெம்பிரான் வளமெல்லாமியம்பினேனே.

(இ-ள்.) அண்டபிண்டங்கள் சத்ததீவுகளும், மேருவும், கடல் சந்திரசூரியர்கள் வாரம், கிரகஉச்சம், நட்சத்திரம், தொண்ணூற்றாறு தத்துவங்கள் ஆகியஎல்லாவற்றையுஞ் சொன்னேன் எ-று.

நால்வகைக்குளெழுவகையுநவின்றவாறும் நாதவிந்தால்ஜெகம் படைத்தநாதன்வாறும், தூலவுடசூக்ஷமதால்தொகுத்தவரலாறும் தொல்லுலகில்சாதிகுலந்தோன்றுமவாறும், சிலமுடன்பரைக்குள் வந்துசெனித்தவாறும் சிவகுருகடாக்ஷமதால் தெளிந்தவாறும், பாலமதில்விழிபடைத்தஅண்ணலார்தம் பார்வையிலுல்யானறிந்து சொல்வேனுண்டே.

(இ-ள்.) நாலவகையோனி, எழுவகைத்தோற்றம். ஜெகமுண்டாயிடவும், ஸ்தூல, சூட்சசரீரங்கள சாதி குலங்கள் இவைகளின் வரலாற்றை நான் குருவருளால் உணர்ந்துசொல்லுகிறேன் எ-று.

செனித்திடுகற்பக்கூறுதீட்சைசொன்னேன் சிவசத்தியநுகூறுசெயலுஞ்சொன்னேன், வனிதையெனும்வழக்கூறுசெயநீர்சொன்னேன்வடிவானமுப்பூவின் மார்க்கஞ்சொன்னேன், புனிதமெனுந்திராவகமுங்கற்பஞ்சொன்னேன் பூபதியுஞ்செந்தூரப் போக்குஞ்சொன்னேன், வினிதமெனுங்காயசித்திவேதைசொன்னேன் விதரணையாபிநூலில் விளங்கினேனே.

(இ-ள்) கற்பம், சிவசத்தி செயநீர் முப்பூவின்மார்க்கம் திராவகம், கற்பம், பூபதிசெந்தூரம், காயசித்தி, வேதை இவைகளையெல்லாம் இன்னூலில் சொன்னேன் எ-று. (௯௱)

அண்டரெனுமுனிவர்களுமகிழ்ந்துபோற்றும் அணிஞானவெட்டியாயிரத்தைந்நூறும், எண்டிசையு வானமுதலிடங்கொள்ளாத இயல்பெல்லாம்பாடுகிறேனினிதான்காணும், விண்டபொருள்பிராணயவாசியோகம் வெளிகடந்துமுப்பாழுந்தாண்டிமேலால் கண்டிதமாயானருளப்பதினொன்பேரும் கருணைமகிழ்ந்தனுக்கிரகங் கருதினரே.

(இ-ள்.) ஞானவெட்டி ௲௫௱-ம் உலகர்கள் கண்டுகளிக்கபிராணயாம வாசியோகத்தை நிரப்பி அனுக்கிரகஞ்செய்தேன் எ-று.

சிரஞ்சீவிபதம்பெறவுந்தெளிந்தேன்காணும் செனகாதிமுனிவர்களின்செய்கையாலும், மறைத்துவைத்தபுதைப்பொருளைமறைவில்லாமல் வசனிக்கஅம்பிகைப்பெண் வாழ்த்தியென்னை, யிறப்பிறப்புமினிகடந்துயிருளுந்தாண்டி இகபரத்தைக்காண விடைகலைபின்மாறி, துரைப்பெண்ணுமமிர்தவடிவானசோதி சூக்ஷசுகாதீதமெனக்குரைத்தாளாண்டே.

(இ-ள்.) சிரஞ்சீவிபதத்தை யடையவும் செனகாதி முனிவர்களின் செய்கைகளால் புதைப்பொருளை மறைவில்லாமல் அம்பிகைப்பெண் வாழ்த்தி சூட்சசுகாதீதம் எனக்குச்சொன்னாள் எ-று.

மாயாமலிருப்பதுவுஞானவாழ்க்கை, மகத்துகளாய் செனிப்பதுவும்யோகவாழ்க்கை, தாயானஅம்பிகையின் கமலம்போற்றி தற்பரைக்குள்நின்றிலங்குஞ்சாரகாரம், காயாதிகற்பமுண்டு கருணைஞானக் கடல்வாரியமுரியுண்டு கருத்தும்பெற்றால், நாயினுங்கடைகெட்டுநமனுமாண்டான் நரகமென்னசொற்கமென்ன நாதவிந்தே.

(இ-ள்.) ஞானவாழ்க்கை மாயாமலிருப்பது, மகத்துக்களாய் செனிப்பது யோகவாழ்க்கை அம்பிகையின் கமலம்போற்றி தற்பரைக்குள் இன்றுவிளங்குங் காரசாரம் அமுரிஉண்டுநகரமென்ன வென்றால் நாதவிந்தாம் எ-று. (௯௱௩)

கொச்சகம்.

நாதவிந்துயானறிந்து நாடியுடலாவியொன்றாய்
காதல்கொண்டுஞானகற்பக் காயசித்தியால்தெளிந்தேன்
சூதமென்னசுக்கிலங்காண் சுரோணிதமிரண்டளவால்
ஆதவித்தையெய்தும்வகை யாறுதன்னைக்கண்டேனே,

(இ-ள்.) நாதவிந்துக்களை நான் உணர்ந்து காதல் கொண்டு காயசித்தியில் தெளிந்தேன் சூதமோ சுக்கிலமாம் சுரோணிதமும், வாதவித்தையடையும் வகையையும் நான்கண்டேன் எ-று.

வேதரசபானமுண்டு மேவியொருநாள்பிசகா
சாதனைமால்தேவியெனுந் தற்பரையையான்பணிந்தேன்
தாதுவிந்துநாதமுடல் தன்னையறிந்தேதெளித்தேன்
பேதமில்லாவாசிகொண்டு பின்புகலிதீர்ந்தேனே.

(இ-ள்.) வேதரசபானத்தை உண்டு, ஒருநாள்மால்தேவி என்கிற தற்பரையை நான்வணங்கினேன், விந்து, வாதம் இவைகளை உணர்ந்து வாசியைக்கொண்டு பின்புகலிதீர்ந்தேன் எ-று.

கலித்துறை.

சோதிப்பிரகாச மலர்சூடிஞானந் துலங்குரத்னம்
போதித்தகத்தியன் பொற்பதமேவி புகழ்பெறயான்
ஓதத்தலைகடல் மதுரசஞ்சீவி யுண்டபலன்
சாதித்ததுஞான பிராணாயவாசி தனையறிந்தே.

(இ-ள்.) பிரகாசமான மலரைச்சூடி ஞானம் விளங்குகின்ற அகத்தியனுடைய பதத்தையடைந்து புகழையடைய நான் சஞ்சீவியையுண்டு ஞானபிராணாயாம வாசியை உணர்ந்தேன் எ-று.

பூசித்துஞான பரிபூரணானந்த பொற்கமலம்
ரேசித்துப்பூரகங் கும்பத்தில்வாசி நிலைபெறவும்
நாசிக்குநேரிருவாசிப்பிரகாச நாட்டத்திலும்
தேசிகன்சேவடி பாதாரவிந்தந் தெரிசித்தேனே.

(இ-ள்.) ஞானபரி பூரணானந்த பொற்கமலத்தைப் பூசித்து பிராணாயாமஞ் செய்து சுழிமுனையில்தேசிகன் பாதாரவிந்தங்களை தெரிசித்தேன் எ-று. (கூ௱எ)

வெண்பா.

அஞ்சபஞ்சபூத மறிந்தாலனித்தியம்போம்
அஞ்சும்வசப்படுவ தாண்டதனில்-அஞ்சும்
கண்டறிவோர்ஞானக் கடாக்ஷமதில்நினைவு
விண்டறியலாமோ விதி.

(இ-ள்.) பஞ்சபூதங்களை உணர்ந்தால் அனித்தியம் போகும் அஞ்சும்வசப்படுவது மிகவும் விசேஷமாம் அவைகளை யறிவர்கள் ஞானிகளேயாவார்கள் எ-று. (கூ௱அ)

எண்சாணுதேக மெத்தாலென்னுண்டையே
பெண்சாயல்நீக்கிப் பேரின்பம்-எண்சாண்
தேகமழியாமல் சித்திபெறுஞானம்
யோகசித்திபூசைவிதி யுண்மை.

(இ-ள்.) எண்சாண் உடம்பை எடுத்தால் பெண்சாயலைநீக்கிப் பேரின்பத்தை யடையவும் தேகமழியாவரம் பெறவும் பூசிப்பது உண்மையாம் எ-று. (௬௱௬)

யோகசாதனை-தரு.

பூசித்தேன் பிராணயவாசியோகம்-ரேசித்துஆண்டே
பூரித்துக்கும்பங் கண்டேன்பாகம்.

(இ-ள்.) பிராணலயம் செய்து பூசித்தேன் எ-று.

வாசித்துவாசியையூதிலங்கென்றுந் தம்பித்துலாவி, தூசித்து கருவிகளைத் தொடர்ந்துசுட்டறுத்துயான். பூசித்

(இ-ள்.) வாசியை யூதிவவ் என்றுதம்பித்து கருவிகளைத்தொடர்ந்து சுட்டறுத்துநான் எ-று. (௬௱௰)

கும்பித்துப்பூரகம்நாடி தம்பித்துக்கும்பகந்தேடி, நம்பித்து மூன்றுண்டுசென்று அம்பிகாயோகத்தில்நின்று கெம்பிரமாகவுங் கண்டதாரையில்வாசியையூதி யெம்பிரான்கமலபதந் தும்பிமுகனைத் தொழுது. பூசித்.

(இ-ள்.) பிராணயாமம்செய்து மூன்றுவருஷங் கழித்து அம்பிகை யோகத்திலிருந்து கண்டதாரையில் வாசியை ஊதி தும்பிமுகனை வணங்கி எ-று. (௬௧௧)

நங்கென்றும்விஞடியூதிமங்கென்றுஞ்சாதித்துப்பேதி சிங்கென்றுமூலத்துக்கெற்றி வங்கென்றும்பரத்தைப்போற்றி, அங்கென்றும்வாசிமேலேக வங்கெங்கும்பிரகாசமாக, கங்குல்பகனன்றாகத் திங்களுங்கதிரோனுகப். பூசித்

(இ-ள்.) ஓம் என்றுஊதி, மங்என்றுரேசித்து, சிங்என்றுமூலத்துக்கேற்றி வங்என்று வழியைப்போற்றி அவ்என்று வாசிமேல் போக எங்கும் பிரகாசமாய் இரவும்பகலும் சந்திரர் சூரியர்களாகப் பூசனைசெய்து எ-று. (௬௧௨)

ஒவ்வெனுமூலத்திலோடி யொன்பதுவாசலுங்கட்டி அவ்வெனும்உவ்வெனுங்கூட்டி அப்புவையுப்புவிலூட்டி, நாசியில்வாசியோடாமல் வீசியுஞாலம்பாயாமல், தேசிகன்பொற்பதமேவி ஊசியின் முனைவாராமல். பூசித்

(இ-ள்.) ஓம் என்கிற மூலாதாரத்தில்போய் நவவாசல்களையுங் கட்டி அவ்வையும் உவ்வையுங்கூட்டி நாசியின்கண்வாசி பாயாதபடி தேசிகனாகிய குருவின் திருவடிகளில் பணிந்து எ-று.

ஆகாரமப்புவுமூலமதின் கீழோங்காரமூலம், பிதாவைத்தொழுதுமுத்தி பிராணாயதீபத்தையேற்றி, கங்கைமதிமலர்தன் கமலபாதாரவிந்தம், கெங்காஸ்நானங்கள்செய்து கெவனம் பாயவும் வாசி. பூசித்

(இ-ள்.) மூலத்தின்மேல்அப்பு ஓங்காரமூலமாம் அங்குதந்தையானபவனத்தொழுது பிராணாயாமத்தைசெய்து கங்கையானமதியாமிர்தத்தில் கங்காஸ்நானஞ்செய்து கெமனத்தில் யாவும் எ-று.

ஆசான்சற்குருநாதரருளா லாண்டையேகேளீர், பாசாபாசமறுத்துப் பரிபூரணச்சந்திரனை, தேசியெனுங்கெவுனம்வாசிக் குதிரைமீதில், நாசிப்புருவநடுவீசித்தும்பாய்ந்து. பூசித்

(இ-ள்.) சற்குருவின் அருளைக்கொண்டவர்களே! கேளுங்கள் ஆசாபாசத்தையறுத்து பரிபூரண சந்திரனைப்போல கெவனமாகிய வாசிகுதிரையிலேறி புருவகருவீதியில் ரேசித்துப்பாய்ந்து.

விநாடிகடிகைக்கொன்றுவிதமாச்சுழியில்நின்றுதினநாள்முப்பதும்வாசியினமிந்தப்படியேசி, கோசமெனுமக்ஷரங்குறித்து ஓராண்டமுரி, நாசமதாகுமுப்பாழ்நசித்து வெண்ணீறதாக. பூசித்

(இ-ள்.) கடிகைக்கு ஒருவிநாடியாக சுழிமுனையிலிருந்துநாள் முப்பதுநாழிகைகளும் கோசமென்கிற அட்சரங்களைக் குறித்து முப்பாழும் நசிக்கும்படி வெண்ணீறாக எ-று. (கூகசு)

பதினெண்பேர்களுஞ்சொன்ன பரிபாஷையுந்தோணாமல்விதியின்வசமதென்று வெறுத்துமெய்க்குருகாணார். பூசித்

(இ-ள்.) பதினெட்டுச் சித்தர்களுஞ்சொன்ன பரிபாஷைகளையுங் காணாமல் விதிவசமோ என்றுவெறுத்து உண்மைஞான குருவைக் காணமாட்டார்கள் எ-று. (கூகஎ)

விந்துநாதமேலுமேகங்கருவேசிலம், அந்தமாரியஞ் சூட்சமமுரிப்புளியும்வாசம் சிவமுஞ்சத்தியுஞ்சேர்ந்து செயநீர்திராவகமாச்சு நவபாஷாணங்கள்நீறும் நவலோகங்கள்மாற்றேறும்.

(இ-ள்.) விந்துநாதங்களின்மேல் அந்தமாகிய மாரிச்சூட்சமான அமுரியுப்பும், புளியுங்கலந்து சிவசத்திகள் சேர்ந்து திராவகமாச்சுது அதினால்நவபாஷாணங்களும் நீறும் நவலோகங்களும் மாற்றுயரும் எ-று. (கூகஅ)

தேவியெனுமம்பிகைசீர்பொற்கமலநாடி, ஆடியெனுஞ்சுவாச மண்டம்பாயவுந்தேடி, ஊதுந்துருத்திவாசி ஓசைமூலத்தில் பாய்ந் தால்வாதமூன்னுக்குவொய்துமதியால் ரவியுந்தோற்றும். பூசித்

(இ-ள்) உமாதேவி என்கிற அம்பிகையின் கீர்த்தி விளங்கு கின்ற திருவடிகளை விரும்பி சுவாசமானது மும்மண்டலங்களிற் பாயும் வண்ணந்தேடி ஓசையானது மூலாதாரத்திற் பாய்ந்தால் மதியினால் ரவியுங்காணப்படும் எ-று. (சுகசு)

இருவினைகளுஞ்சுட்டுயிறப்பும்பிறப்பொழிந்து, கருவிதொண் ணூற்றாறுங்கனலல்லவர்துசீராக, வாசியென்றபிராணயம்வாய்வை க்கும்பித்துமூலம், நாசிவாராமல்ராசயோகஞ் செய்தேன்காண்.

(இ-ள்.) நல்வினை, தீவினைகள் என்கிற இரண்டு வினைகளையுஞ் சுட்டு பிறவிநீங்கி தொண்ணூற்றாறு தத்துவங்களும் சீராகபிராண யாம வாயுவைக்கும்பித்து நாசிவழியறியாமல் ராஜயோகஞ் செய் தேன் எ-று. (சுஉ0)

பஞ்சாக்ஷரமுரிதுஞ் சானதுங்கொண்டாடு, அஞ்சாமலும் வயிராக்கியமெண்சாண்தேகத்தைச்சுட்டு, முக்கோணகேசரிவாலை முனையமிடையின்கலை, அக்கோணச்சுழிப்பிரகாசமாலையந் தனிலு நின்று. பூசித்

(இ-ள்.) பஞ்சாட்சரங்களைக் கொண்டு எண்சாண் தேகத்தை சுட்டு சுழிமுனைப்பிரகாசத்தில் உயர்ந்திருந்து எ-று. (சுஉக)

வஸ்துவென்றபானத்தைமருவிமாறவுந்தேகம், அஸ்திகள்தந் தங்கள்போலுமமிர்தசஞ்சீவியுண்டு, தன்னைத்தானுமறிந்து சடத் தைச்சுத்திகள்செய்து, அன்னையம்பிகைபாதம் அவ்வும்உவ்வால றிந்து. பூசித்

(இ-ள்) வஸ்துவான பானத்தைச்சேர்ந்து தேகமானது மாற வும் அமிர்தசஞ்சீவியை உண்டு தன்னைத்தான் அறிந்து சடசுத்தி செய்து அம்பிகையின் பாதங்களை அகர உகரங்களால் உணர்ந்து.

பூருவக்கியானகற்பத்தின்புகழை யாரறிவார்காண், பேறுபெ றவும்பெற்ற பிரபல்லியமீதானும், தீக்ஷையென்றுவீரஞ்சு தெசதீ க்ஷைகளுங்காட்டி, நீச்சனென்றபேர்போக்கி நிலைத்தேன்கருவூர் நாட்டில். பூசித்

(இ-ள்.) பூர்வக்கியானமுள்ளதை யாவர் அறிவார்கள்! பெற்ற பிரபல்லியத்தாலும் பத்து தீட்சைகளையுங் காட்டி நீசனென்கிற பேரைப்போக்கிக் கருவூர்நாட்டில் சாட்டில் நிலைத்திருந்தேன்.

அஷ்டாக்ஷரமாவது அமுரி புளியெனும்பேர், இஷ்டத்துடனு முண்டுஎட்டெட்டுவித்தைகளாட, வங்குசிங்கென்றெழுத்தை வா வென்றழுத்திவாசி,யெங்கும்பிரகாசமாக இருத்திக்கடிகைவரலாம்

(இ-ள்.) எட்டெழுத்தென்பது அமுரி, புளியென்னும் பேராம் அவைகளை இட்டமாகவுண்டு சுஅ-வித்தைகளாட வங்சிங் என்கிற எழுத்தை வாவென்றழுத்தி வாசிஊதி எங்கும்விளங்கி யிருக்க.

ஆனைமும்மதங்கொண்டாலடக்கமோஅடக்க,வானஞ்சுருங்கி விடாதோனைதானுஞ்சுருங்கும் பொங்குங்கடல்சூழ்வாரி பொ ழியப்பொழியபுனம், எங்கும்பிரகாசமாகுமெண்சாண் தேகமுந் தங்கம். பூசித்

(இ-ள்.) ஆனையானது மும்மதங்களைக் கொண்டால் அடக்க கலாகுமோ? அப்படி அடங்கினால் வானஞ்சுருங்காதோ? அமிர்த மானது பொழியப்பொழிய எண்சாண்உடம்பானது தங்கம்போ ன்றதாகும் எ-று. (கூஉசு)

அக்கரைமீனைப்பிடித்துச்சக்கரையாகவடித்துச், சொக்கநாத ரைத்துதித்துக்கவுந்தேனைமத்தித்து, அஞ்சுமூன்று மிரண்டுமறிய லாச்சுதுகற்பஞ், செஞ்சடாதரர்மலருசேவித்துசுழிமுனையை. பூ

(இ-ள்.) அக்கரையிலுள்ள மீனைப்பிடித்துக்கொண்டுவந்துசர்க்கரையாவடித்து சொக்கநாதரைத் துதிசெய்து அஞ்சுமூன்றுன எட்டையும் இரண்டையும் உரைவாச்சுது எ-று. (கூஉஎ)

விதியைவெல்லுமதியால்மதியைவெல்லுஞ்சுழியால்,பதியைய றியஞானவழி யிதாண்டையே, மதியுன்னுக்குள்ளிருக்கும் வாரி சவாரிமேலாய்,விதியும்வாசிக்கப்போமோ விந்துநாதத்தின்கூறுல்

(இ-ள்.) மதியினால்விதியைவெல்லும், மதியைச்சுழியால்வெல் லும் இதுவே உபய ஞானவழியாகும் மதியானது உனக்கு உள் ளாகவிருக்க விதியை வாசிக்கலாகுமா எ-று. (கூஉஅ)

மாய்கையற்றுமூலமலமுஞ்சலங்கழிய, பயமதுவுங் கிலேசம் பாழாமிந்திரியமாண்டே, இந்தமதியைக்கண்டுவந்தவிதியைப்போ க்கி, சொந்தமனையில்நின்று சுந்தரர்க்குமுரைத்தேன். பூசித்

(இ-ள்.) மாய்கையான தொழிந்து மூலமலமுஞ்சலமும் கழிய கிலேசமானது பாழாம் இந்தமதியைக் கண்டு உண்டான விதியை போக்கடித்து சொந்தமனையிலிருந்து சுந்தரர்க்குமுரைத்தேன்.

விருத்தம்.

பூதலத்தில்மகத்துகள்தான் பொறிபுலனும்வெளியில் விடாப் பூசித்தார்காண், வாகசித்திவரும்வரலால் மதிரவிமைப்பணிந்து மிகமகிழ்ந்ததாலும், வேதமெனுஞ்சாரமுண்டு விரும்பியுமாதருமே விந்ததனைப்போற்றி, பாதமொடுமூலமெனும் பச்சையுவரகற்றி மிகப் பாலித்தாரே.

(இ-ள்.) உலகத்தில் பெரியோர்கள் பலன்களையடக்கிப் பூசித்தார்கள் வந்தசித்தியை யடைந்தார்கள் மதிரவிமைப்பணிந்து மிகவும் சந்தோஷத்தாலும் வேதசாரத்தையுண்டு விந்தினைப் போற்றி பச்சையுவரினை அகற்றி எ-று. (௲௫௰)

கொச்சகம்

காரமெனும்பூநீரு காயமதிலும்மிருக்க
சாரமதைக்கொண்டு சவுக்காரமதைக்கட்டறியார்
பூரமென்றால்காரமிது பூநீறதுவும்புளிகாண்
வீரமென்றவிந்தமுரி வெளியில்வெடியுப்பறிந்தே.

(இ-ள்.) காரமென்கிறபூநீறானது இந்தச்சரீரத்திற்குள்ளிருக்க காரத்தைக்கொண்டு சவர்க்காரத்தைக் கூட்டறியார்கள் பூநீறென்பதே புளியாம் வீரமென்ற விந்தமுரியானது வெளியில் வந்தோம்.

பிருதிவிநகாரமதாம் பிராணனுமகாரமப்பு
இருதயத்திலுமிருந்த இந்திரியமாமமுரி
அறியப்போமோவெளிகா ணம்புவியிலெங்குமுண்டு
சுருதிமுடிவானசுடர் சூக்ஷமறிந்தேமுடிப்பார்.

(இ-ள்.) பிருதிவி காரமாம், பிராணனும் அகாரம் இவையறியப்போகுமோ உலகத்தில் இவை எவ்விடத்திலுமுண்டு இருதயத்திலும் இதை இந்திரியத்திலும் வேதமுடிவனை சூட்சா சூட்சத்தை உணர்ந்து எ-று. (௲௫௧)

கலித்துறை.

கலிகாலந்தன்னில் மாய்கைபெருங்குழி கடந்து மென்மேல்
நலியாதுதேகம் வலுவாகும்விந்து நாதமதாய்
சலியாதுகாய மழியாதுதேகஞ் சாவில்லைகாண்
மெலியாதுஉள்ளம் வாசியைவாவென்று விரும்பினனே.

(இ-ள்.) இக்கலியுகத்தில் மாயைக்குழியிலகப்பட்டு நலியாமல் விந்துபலப்பட்டு காயமழியாமல் தேகஞ்சாவில்லை உள்ளம் மெலியாமல் வாசியை வாவென்று இச்சைபட்டேன் எ-று. (௲௫௨)

அப்புகொண்டாண்டு ஐயஞ்சதிங்களானபின்பு
சுப்பிரமதாகுஞ் சயம்பாகுந்தேசஞ் சுத்திசெய்தால்
இப்புவிதாம்பிர மிருபத்தொருதிற மிருபலங்கொண்
டுப்பறக்காய்ச்சி யுருக்கியப்பூவினுடன்விடுமே.

(இ-ள்.) சலத்தைக்கொண்டாண்டு இருபத்தைந்து திங்களானபிறகு சுப்பிரமயமாகிய சயம்பாகும் தேகத்தைச் சுத்திசெய்தால் அப்பினுடன்விடும் எ-று. (கஙச)

வெண்பா.

இப்பரிட்சைகாண எளிதல்லதேகம்
அப்பதுநீர்சுத்தி யானதால்-இப்புவியில்
சுத்தசலமான சுயம்பதுசெம்பாகும்
உற்றவிதிசுத்தியறிந் தூட்டே.

(இ-ள்.) இந்தப் பரீட்சையைக் காண எளிதல்ல, அப்பினீர் சுத்தியானதால் இங்கு சுத்தசலமான சுயம்புசெம்பாம் ஆகையால் அற்றுப்போன சுத்தவிதியை யறிந்து ஊட்டுவாய் எ-று.

அம்புவியில்செம்புகளிம் பற்றுவிடும்மூறலறும்
நம்புவதாரப்புவியினால் யானறிந்து-அம்புவியில்
தன்தேகமூறல்விட தாம்பிரமுமூறலறும்
தென்பொதிகைநாயனருள் சீர்.

(இ-ள்.) உலகத்தில் செம்பானது களிம்பற்றுவிடும் அதனால் ஊறலற்றுவிடும் நம்புவதார் இதைதன் தேகவூறலறுமிடத்து தாம்பிரத்தின் ஊறலுமற்றுவிடும் இது அகத்தியனருளினதாம் எ-று.

ஆனந்தக்களிப்பு.

தனனத்தனன தந்தனனை-தான-தனனத்தனன தந்தன தந்தனனை.

மூலாதாரச்சுழிமுனையில்-வாலை-மும்மதவாரி முச்சுடரினின்றிலங்கும், ஆலகாலவிடமுண்ட-அரசன் பாதத்தைநம்பினேன் அம்பிகைபாதம், பாலன்கணபதிகந்தன் கமலபாதபங்கையத்தை யான் பணிந்துமேதொழுதேன், தூலவுடல்சூக்ஷதேகம்செடஞ் சுத்தியோராண்டினில்சுகாதீதமாண்டே.

(இ-ள்.) மூலாதாரமென்னுஞ் சுழிமுனையின்கண் வாலாம்பிகைபரமேஸ்வரன் இவர்களுடைய திருவடிகளை வணங்கி சரீரம்ஒரு வருஷத்தில் சித்தியாதற் பொருட்டு துதித்தேன் எ-று. (கஙஎ)

கட்டுப்படாதுசெம்பதுகாண்-மூல- காரத்தினால்கருசேர்ந்தலோகட்டும், வட்டுபோலிறுகியும்வலுவாஞ்-சோதி வஸ்துவென்ன

வாசிமயமதுஞ்சேர்ந்தால், எட்டிரண்டும்பத்துவயதாம்- அது-இங்கிதநாதச்சுரோணிதத்தாலும், பட்டுவிடுஞ்சரக்கதீதம்-நவ-பாஷாணமுதற்கொண்டு பரிசவேதியதாம். தனனா

(இ-ள்.) செம்பு மூலகாரத்தினல் சேர்ந்தல்லவோகட்டும்இது இயும் வலிவாகும், எட்டும் இரண்டும் அறியாமல் பத்துவயதாய் நாதசுக்கிலங்களால் நவபாஷாணமுதல் பரிசனவேதியாகும்ஏ-று.

நமசிவாயமென்றதஞ்சுவிந்து-நாதமூன்றெழுத்தையுங்கிலியும் ஓம்சவ்வு, அமிர்தங்கொண்டுவாசி ஆது-அடங்காது அம்உம்மென்று அக்ஷரம்ரெண்டு, சமரசமாகும்பத்தெழுத்துங் குரு-சாமிகடாட்சத்தால்சாதித்தேன்காணும், ஏமலபியகற்றுமிவ்வெழுத்து-எந்தன் ஆசான்சொல்லவுமினியான் கண்டேனண்டே. தனன

(இ-ள்.) பஞ்சாட்சரங்களும், ஐயும், கிலியும், ஒவ்வும்,சவ்வும் உச்சரித்து அமிர்தத்தைக் கொண்டு எமலபியை யகற்றி என்னுடைய ஆசான்சொன்னது இம்மந்திரமாம் ஏ-று. (௬௩-௬)

பத்தெழுத்தும்பரியேமம்-சித்தர்-பதினெண்பேர் பாதபொற்கமலமும்போற்றி, வித்தில்லாப்பூமியுமுண்டோ-விந்து நாதமில்லா விடில்வாசியுமுண்டோ, சித்தில்லாச்செந்துகளுண்டோ-சிவ னில்லாவிடில்தேவர்களுமுண்டோ, கர்த்தனிவராச்சுதாண்டே - கதிர் மதியுமிவர்க்கேவல் காணலாச்சுதுகாண். தனன

(இ ள்.) பதினெண்பேர் சித்தர்கள் பதங்களைப் போற்றி சிவனில்லாவிட்டால் தேவர்களில்லை ஆகையால்சந்திர, சூரியர்கள்அச்சிவனுக்கு ஏவலாளர்க ளாவார்கள் எ-று. (௬௪௰)

முப்பூவுமூன்றல்லோகாணும்-மூல-வாசிசேரவுநாலு முடிவல்லோதோணும், அப்பும்உப்பும்வெடியுப்பும் அசு வானதும் வாய்மறந்துசெப்பார், இப்பொருள் கண்டுணர்ந்தேன்காண்-எவரும்-இந்நூல்போலொருநூலு மியம்புவாரெவர்காண், செப்பார்கள் சிவ ஞானமூலர்-திரு-வள்ளுவனுய்ந்து தெளிந்தயிம்மூலர். தனன

(இ-ள்.) மூலவாசியைநான் சேரமுடிவல்லவா காணும், அப்பும், உப்பும், வெடிஉப்பும் ஆனவாயுவை யறிந்தவர்கள் சொல்லார்கள் நான் கண்டுணர்ந்தபடியே சொல்லுகிறேன் எ-று.

மதியைக்கொண்டுதேகஞ்சுத்தி-முன்னாள் வரும்வழிலைகளெல்லாமண்ணென்றுங்கொற்றி, நதியைவிட்டுசேடையாக்கி-வழிலை நாளுக்குநாள்வரும் நரகத்தைப்போக்கி,விதியிந்தமலக்கூடு முன்னாள் வினையிருந்தால்சலநீர்கொண்டுசாடுசதியனந்தகாமவிடு-ஆண்டுசாரத்தையுண்டு சாதித்துமேகேடு. தனன

(இ-ள்.) சந்திரபானத்தைக் கொண்டு சரீரஞ்சுத்தி யாச்சுது வழலைகளெல்லாம் மண்ணென்றுகொற்றி நதியைவிட்டுச் சேமை யாக்கி வழலைகளுக்கு நாள்வரும் நகரத்தைவிட்டுநீர்கொண்டுகாம நீட்டி லாண்டுவரைக்கும் சரீரத்தையுண்டு சாதித்தேன் எ-று.

அலைகடலாவதுசமுத்திரம்-அலை கடலையுண்டுகலக்கி யகற்றிடு முபத்திரம், மலசலப்பெருமையைப்போக்கும்-அந்த-வாருதிசலத் தினல்வழலையைவிலக்கும், பலபலகஸ்திகள்தோன்றும்-பாண்டம் பழமலம்போக்கினல்பரிட்சைபார்கண்டும், உலைவாயின் மெழுகது போலாம்-மனம்-ஒருமித்துஜடசுத்திநிலைகொள்ளாமேலாம்.

(இ-ள்.) அலைகளையுடைய கடலானது சமுத்திரமாகும் அக்க டல் நீராபிரண்டு கலக்கியொழிக்கின்ற உபத்திரவமாகிய மலசலப் பெருமையை போக்கும் அந்தநீரால் வழலையை விலக்கலாம் அதி னல் பலபல கஷ்டங்களுண்டாம் உலைவாயில் மெழுகது போலவும் ஒருமித்து சடசுத்தியானது நிலைக்க எ-று. (௬௪௩)

கர்மசாகரமலக்கூட்டை-தந்தை-கட்டினன்மாய்கைப்பெண்க ருவியால்வீட்டை, வர்மமில்லாக்கருநாடு திரு வள்ளுவன்செய்கை யால்வச்சிரவீடு, பிர்மாதிகற்பத்தையுண்டு அமிர்த - பேரின்பநதி சுத்தப்பிராணயங்கண்டு, நிர்மித்தேனகத்தியன்வரத்தால் - நெறி தவருதென ஞானவெட்டியின்கருத்தால். தனன

(இ-ள்.) கர்மக்கடலாகிய மலக்கூண்டைமாய்கையாகியபெண் கருவியினல் வர்மமில்லாக் கருநாட்டில் திருவள்ளுவன் செய்கை யால் பிரமாதிகற்பத்தையுண்டு பிராணயாமத்தைக் கண்டு நெறி தவறாமல் ஞானவெட்டியான் கருத்தால் எ-று. (௬௪௪)

விருத்தம்.

இந்திரனதியுண்டுரவிமலததைப்போக்கியிருநதகர்மக் கசடதனை எல்லாநீக்கி, தொந்தமெனும்தேகசித்தி சுயமாய்ச்செய்துசுகதுக்க மிருவினையைத்துலைத்துமேவி, அநதஓராண்டுசென்றெடுத்துக்காலை அமிர்தநதிசுத்தசலமறிந்துசாரம், தந்தைவிதிமுந்திமுன்னு வமை த்தகூறைத் தானவஞயகற்றியருள் சமைந்தவாறே.

(இ-ள்.) இந்திரநதி தீர்த்தத்தைப்புசித்து ரவியில்மலத்தைப் போக்கி காமக்குற்றங்களை யெல்லாம் ஒழித்து தேக சுத்தியைச் செய்து இருவினைகளை பிறந்தொலைத்து ஒருவருஷம் கழிந்து சுத்த சலத்தையுணர்ந்து முன்கர்மம் ஒழிந்த எ-று. (௬௪௫)

கொச்சகம்.

சுத்திமுறையானவிதஞ் சொன்னேன்பெருநூலிதனில்
அத்திமுதலெறும்புகடை அமைத்தவரலாறுகளை
சித்தியிந்தநூலதனில் சென்றுஒராண்டுபின்பு
வெத்திபெனுமாண்டதுபோல் வெண்மதியால்கண்டேனே.

(இ-ள்.) பெருநூலிற்சொன் சுத்திமுறையைச் சொன்னேன் யானைமுதல் எறும்புவரைக்கும் உள்ளபடைத்த வரலாற்றை இந் நூலில்கண்டேன் எ-று. (௬௪௫)

காலைமுதலுண்டமுரி கற்பங்கதிருச்சமும்போய்
மாலைரவிசாய்ந்துகனல் மாறினதால்காலையினில்
சூலதுகாணுவதென்ன சுரோணிதமலப்புளியில்
ஆலவிடமுட்டியவின் னருணனுதயத்தில்வைத்தே.

(இ-ள்.) காலையில் முதலில் அமுரிஉண்டு உச்சியிற் கற்பஞ்சா தித்தல் வேண்டும் சூலது என்னவென்றால் சுரோணித மலப்புளி யில் ஆலத்தைச்செலுத்தினபிறகே அருணோதயத்தில் எ-று.

கதிருதையமுன்புவருங் காலைதனிலிவ்விதஞ்செய்
மதியுணர்ந்துபின்புவரு மாலைப்புளியுண்பீராய்
விதிமெழுகுபோல்வருதல் வேளைபுன்னைக்காயளவு
அதிவிதமாய்நாளுக்குநா ளதனஞ்சுண்டைக்காயளவே.

(இ-ள்.) சூரியோதயம் முன்னேவருங்காலத்தில் இப்படிசெய் மதிவரும் காலத்தில் புளியுண்ணுவீர் வேளைக்கு புன்னைக்கா யள வாக நாளுக்கு அஞ்சுண்டை உண்ணால் வேண்டும் எ-று. (௬௪௭)

கலித்துறை.

மூவாண்டில்மூலப் புளிவிந்துஞ்சேர்ந்து முடிக்கும்விதம்
துவாதசாந்த வெளியறியாமல் சொக்கினர்காண்
சாவேதுஞான மெய்ஞ்ஞானவெட்டிச் சார்வறிந்தால்
தாவேதுசார மாயிரத்தைந் நூறின் சத்தியமே.

(இ-ள்.) மூன்றுவருஷத்தில் மூலப்புளியும், விந்துவும்,சேர்ந்து முடிக்கின்றவகையாவது துவாதசாந்தவெளியை யுணராமல் சொ க்கினவர்க ளாவார்கள் ஞானவெட்டியின் வழியையறிந்தால் சாவி ல்லை இதுசத்தியம் எ-று. (௬௪௮)

சத்திக்குள்விந்து சாரமுள்பாய்ந்து சத்தியும்விந்
துத்தமனுச்செனித் திடும்பிள்ளை யுமாதுபோய்

பத்தியசுன்னம் பசைந்தமண் தண்ணீர்பாய்ந்திடுநாள்
உத்தியசெம்பு உருக்கியன்னீரினி லூட்டிடுமே.

(இ-ள்.) சத்திக்குள்ளாக விந்துவானது சாரமுள்ளேபாய்ந்து சத்தியையும் விந்துத்தமனைப்பிறக்கும் தண்ணீர்பாய்கின்றநாளில் செம்பையுருக்கி அந்நீரிலூட்டுவாய் எ-று. (௬௫௰)

வெண்பா.

உருக்கியீரேழுவிசை யூனீரில்சாய்த்திடவும்
சுருக்கிமணியதுவாஞ் சொன்னோம் உருக்கிவிட
களிம்பதுவுமூறலிலாக் காரமெனுஞ்சாரமதால்
அழும்புவருகாதிடினு மாண்டே.

(இ-ள்) அவ்வாறு உருக்கி ஏழுவிசை சாய்க்கவும் அது ஒரு மணியாகும் சொன்னோம் களிம்பும் காரத்தாலறும் எ-று.

அயமுதலுநாக மதிதகருவங்கம்
சுயமதுகாண்வேணவங்கஞ் சுத்தி-அயமதுகேள்
வங்கமிருநாசம் வருதல்பதினைந்திறங்
குங்கிமணியாகுமதின் கூறு.

(இ-ள்.) அயம், நாகம், வங்கம், சுத்திசெய்து பதினைந்துதரம் உருக்கமணியாகும் எ-று. (௬௫உ)

மலைப்புளியும்வாரி வருமுத்தநாளில்
உலையதனில்விந்துஅய மூதினால் மலைப்புளிநீர்
காய்ச்சியநூறு காரமெனுஞ்சாரமதில்
தோச்சுவிடுவீரெனச் சொல்.

(இ-ள்.) பூநீற்றை நல்லநாளில் வாரிக்கொண்டுவந்து உலையில் வைத்து ஊதினால் காரமாயிற்கும் எ-று. (௬௫௩)

மூசையதிலிட்டு மூடிமண்சீலைகனம்
ஓசையிடுங்காண் துருத்தி யூதினால்-மூசையினில்
உருகிமணியாடு மூலரசத்தினாலும்
சுருகியயச்செம்பதுவாஞ் சொல்.

(இ-ள்.) அதை மூசையிலிட்டு மூடிமண்சீலைசெய்து துருத்தியினால் ஊதினால் உருகிமணியாகும் குங்குமப்பூவர்னம்வரும் ஊதினால் மாற்றேழாம் எ-று. (௬௫௪)

இருவங்கநாக மிரும்பதுவுஞ்செம்பு
மருவுபணவிடைக்கு வாங்கு-முருகவுமே
குகையிலிட்டுஊதக் குங்குமப்பூவர்னம்
மொழுக தூவாமூதிடுமாற் றேழு.

(இ-ள்.) வெள்வங்கம், கருவங்கம், நாகம், இரும்பு, செம்பு வகைக்குப் பனைவெடை சேர்க்கவேண்டும் எ-று. (கூருரு)

வேறு-விருத்தம்.

குருமுனிபால்மாற்றேழு வருதலதுகுணங்குறியாய் குறித்துப் பார்த்தேன், கருவிருவாயருளியதோராயிரத்துஐந் நூறின்கருவை யாய்ந்து, அருவுருவாய்குருவினுட அனுக்கிரகமெனக்களித்தஅருளினாலும், சுருபநிலைசூக்ஷமெல்லாஞ் சோதித்துப் பார்த்தவர்கள் சொர்க்கஞ்சேர்வாம்.

(இ-ள்.) குருமுனியினால் மாற்றேழு வருவதைக் குறித்துப் பார்த்தேன் ஆயிரத்தைந்நூற்றில் அருவாயும், உருவாயும், குருவனுக்கிரகத்தாலும், சொரூபநிலையின் சூட்சங்களையெல்லாம் சோதித்துப் பார்த்தார்கள் சொர்க்கம்புகுவார்கள் எ-று. (கூருசு)

வேறு-கவி.

விந்துநாதம்விதித்தஅவ்வாழினால், அந்தகாரமது வெளியாச்சுது, சுந்தரக்கருசொன்னார்பேதாபேதம், வந்துதாண்டேவழலைப் பிரகாசமே.

(இ-ள்.) விந்து நாதங்களை உண்டாக்கின விதத்தினால் அந்தகாரமானது வெளியாய்விட்டது. பேதாபேதங்களாகிய கருவைச் சொன்னார்கள் அதுவே வழலையின் விளக்கமாம் எ-று. (கூருஎ)

காரசாரங்கதிர் மதிவாழ்க்கையால். வாருதிவரமாவெளிப்படும் சாரங்கொண்டு சரமாறியேற்றினால், தேறலாந்தச தீட்சையிதாச்சுதே.

(இ-ள்.) காரசாரங்களாகிய கதிர்மதிகளின் வாழ்வினால், காற்றுவரும்விதம்; வெளிப்படும் காரத்தைக் கொண்டு சரத்தைமாறி ஏற்றினால் தசதீட்சையினால் தேறலாம் எ-று. (கூருஅ)

பூதலம்புகழ்பூரணசற்குரு, நாதவிந்துநடத்தையையோதினல் வாதஞானவழலைப்பெருமையை, மாதுவாலைவசனமிதாகுமே.

(இ-ள்.) உலகத்தார் புகழ்கின்ற பரிபூரணமான ஞானகுருவானவர் நாதவிந்துக்களின் செய்கையைச்சொன்னால் வழலையின் பெருமையைச் சொன்னதாகும் எ-று. (கூருகூ)

அந்தவானமளாவியமாமலை,யெந்தனுசானியம்பின ராதலால் வந்துகாக்ஷி மகிழ்ந்துஅசத்தியன், விந்துநாதம் விளங்கினாராண்டையே.

(இ-ள்.) இந்தஆகாசத்தை அளாவியமாமலையில் என்னுடைய ஆசானவர் சொன்னார் ஆதலால் அவருடைய காட்சியைச்சந் தோஷித்து அகஸ்தியனார் விந்துநாதத்தில் விளங்கினார் எ-று.

பூரசுன்னபூனீர்புளிநாதமாம், வீரம்விந்துவெள்ளைக்கல்லுப்ப தாம், காரசாரங்கதிர்மதிரெண்டினால், தேறுஞானச்சிவபண்டிதர் களே.

(இ-ள்.) பூரசுண்ணமாவது பூநீறும்புளியும், நாதமுமாம், வீர மாவதுவிந்துவும், வெள்ளையும்கல்லுப்புமாம் காரசாரம், சூரிய சந் திரர்கள் இவ்விரண்டினால் சிவஞானத் தேர்ச்சியாய்ப் பண்டிதர்க ளாவார்கள் எ-று. (கூகக)

அப்பும்உப்பும்அமுரிமூலப்புளி, உப்புமப்புமுன்னுக்கு ளறிந் தபின், கைப்பும்உப்புக் கவிசிமுறிந்திடில், முப்புசுன்ன முடிந்தது ஆண்டையே.

(இ-ள்.) அப்பு, உப்பு, அமுரி, மூலப்புளி, ஆகையால் இவை களை உணர்ந்து கைப்பும்உபபும் கசிவற்றுவிட்டால் முப்புச்சுண் ணம் முடிந்ததாகும் எ-று. (கூகஉ

சிவமுஞ்சத்திசுவத்திலிருப்பதாம், கவனம்வேணுங்கனகமுன் னுக்குள்தான், மவுனவாலைமதிகொண்டு வூட்டினால், கவனமேது சாரத்தினல்கட்டுமே.

(இ-ள்.) சிவமுஞ்சத்தியும் சிவத்தில் இருப்பதாகும் கவனம் வேண்டிய காலத்தில் கனகம் உன்னுக்குள்ளாகும், மௌனமாகிய வாலையை மதியமிர்தத்தைக் கொண்டு ஊட்டினால் கவனமணிசார த்தால்கட்டும் எ-று. (கூகந)

சாரமாண்டுசரமாறியேற்றினால், காரஞ்சத்தியுங் கைவசமாகி டில், தேறினன்திருவள்ளுவனிவ்விதம், ஏறலாகுமிருவினையில்லையே

(இ-ள்.) விந்துநீர் விளங்குகின்ற பானமும், அந்தநீர் அமுரி யுண்டு ஆண்டுவருவார்கள் இந்தவழியில்சூரியனானவன் தினந்தின மும் வந்தவாழ்விற் பொருந்தி எதையுஞ்சாதித்தேன் எ-று.

மாயாசத்திமலப்புளிவந்தவா றுயுநூல்களனேகம்விதித்தனர் ஓயும்நாய்போலுழன்றலை வார்கள்தம், மாய்வதில்லை மகத்துகளா ண்டையே.

(இ ள்.) மாயாசத்தியான மலப்புளிவந்தவிதத்தை ஆயுள்வே தத்தில் அனேகமாகச் சொன்னார்கள். திரியும் நாயைப்போல் உழ ன்று அலைவார்கள்சிலர்உண்மையை உணர்ந்தவர்கள் மாய்வதில்லை

மானமுமபிமானிகள்வாறுகாண், சோனைபாயுஞ்சுகாதீத சுக்கிலம், வீணுரைத்துவிடுகிறீர்பானநீர், தேனையுண்டு தெளிந்தனராராண்டையே.

(இ-ள்.) மானமாவது, அவமான முள்ளவர்களுக்கே யாம், சோனைமழைபோல் பாய்கின்ற சுகாதீதசுக்கிலத்தை வீணாக எடுத்துப்பேசுகிறீர் அறிவாளர்கள் பேரின்பத் தேனையுண்டு தெளிந்தார்கள் எ-று. (௬௬௭)

உண்டநீருஉன்னுக்குள்ளேபாய்ந்திடில், சண்டனில்லைசாக்காடெய்வதில்லைகாண், அண்டார்கோனத்தீசர் தெரிசனங் கண்டபோது கலிவராதாண்டையே.

(இ-ள்.) உண்டநீரானது உனக்குள் பாயுமானால் எமனுமில்லை மரணமும்வராது அகத்தீசனுடைய தெரிசனத்தைக் கண்டபோதே கலிவராதாகும் எ-று. (௬௬௮)

கார்மதிகதிர் சோதிவிளங்கிய, சீர்புகழ்திருவள்ளுவனோனன் பார்விளங்கிய பாடல்மூவைந்நூறு, பேர்வளம் பெரியோரறிவார்களே.

(இ-ள்.) மதிம்பிரகாசம் போன்ற ஒளிவிளங்கின திருவள்ளுவன் சொன்னான் இந்த ஆயிரத்தைந்நூறு இதைப் பெரியோர்களாயுள்ளவர்கள் உணர்வார்கள் எ-று. (௬௬௯)

ஞானவெட்டிநன்னூல்பதினைந்துநூறு, தேனெனுமொழிசெப்பியவாறினால், வானஞ்சூழ்கடல்வாரிப்பொழியவும், மோனஞானவிதியைக்கேளாண்டையே.

(இ-ள்.) ஞானவெட்டியின் ஆயிரத்தைந்நூறு பாடல்களைக் கொண்ட இந்தநூலானது பெரியோர் இன்பமாய்சொன்னதினால் அதின்மௌனஞான விதியைக்கேட்பாய் எ-று. (௬௭௰)

வேதஞானவிளங்குமகத்துகள், பாதபங்கயப் பன்மலர்சூடயான், வாதபண்டித மாமுனிவாறினால், சூதவாலைச் சுழிமுனை காணுமே.

(இ-ள்,) வேதஞானத்தில் விளங்குகின்ற மகான்களின் திருவடிகளை வணங்கச் சுழிமுனையானது தோன்றும் எ-று. (௬௭௧)

பஞ்சரத்தினம்பன்மலர்சூடியான், நெஞ்சறிந்து நிகழ்த்தவெள்ளேட்டினில், செஞ்சடாதரதெய்வசிகாமணி. கஞ்சமலர்க்கண்டபோசொல்வாரரோ.

(இ-ள்.) பஞ்சரத்தினமான பலவகைப்பட்ட மலர்களைத் தரித்து மனமறிந்துசொல்ல வல்லவர் ஈஸ்வரதரிசனை செய்தவர்களாவார்கள் எ-று. (கூஎஉ)

பதினெண்பேர்கள் பரிபாஷையாய்ந்தயான், விதியறிந்து விளங்கும்ரகசியம், மதிரவிமலர் வாரிச்சொரிபடம் கெதியறிந்து கிருபைக்கடல்மூழ்கினோர்.

(இ-ள்.) பதினெண் சித்தர்களின் பரிபாஷைகளை யுணர்ந்து விதியையுணரும் ரகசியத்தை கிருபா சமுத்திரத்தில் மூழ்கினவர்கள் உணர்வார்கள் எ-று. (கூஎ௩)

தத்துவந்தொண்ணூற்றாறுஞ்சுடாவிடில், கற்றுஞானக் கருவறியார்கள்காண், பெற்றும்பேறுபிறப்பொழியாமலும், சித்துமாய்கையில் தேகமழிவதே.

(இ-ள்.) தொண்ணூற்றாறு தத்துவங்களையுஞ் சுடாவிட்டால் ஞானக்கருவை உணரார்கள் பேறுபெற்றும் பெருமலும் பிறப்பொழியாமலும், சித்தின்மாயையினால் தேகம் அழிவதேயாம்.

சுத்தஞானசுகாதீதமென்பது, வித்துபானம் விளைவினுதிப்பதாம், வத்தர்சுத்தர்பண் போர்பதினெட்டுபேர், கர்த்தனுங்கருவாய் செனித்தார்களே.

(இ-ள்.) சுத்தமாகிய ஞானசுகாதீதம் என்பது வித்துபானத்தில் உதிப்பதாகும். பத்தர்கள், சித்தர்கள் பதினெட்டுப்பேர்கள் கருவாகப் பிறந்தவர்களாவார்கள் எ-று. (கூஎ௫)

கொச்சகம்.

கருணையானந்தசிவ காமியருள்பாதமலர்
திருவடியும்போற்றிசெய்து செங்கமலமேவிவளர்
குருமுனியால்தீட்சைபத்துங் கோணமல்கூர்ந்துமிக
அருள்புரிந்தகாயசித்தி யனுக்கிரகம்பெற்றேனே.

(இ-ள்.) கருணானந்த சிவகாமியின் திருவடிகளை வணங்கிகுருமுனியால் தீட்சைகள் செய்துகொண்டு காயசித்தி அனுக்கிரகம் பெற்றுக்கொண்டேன் எ-று. (கூஎ௬)

கண்டுகளிகூர்ந்துகுரு காரணத்தால்சித்திபெற
அண்டக்கல்லுப்பதனை யானறிந்தேனுதியுப்பை
விண்டுவிடும்ஞானவெட்டி மெய்ப்பொருளையானுரைக்க
எண்டிசையினல்லோர்க ளிப்பொருளைக்காண்கிலரே.

(இ-ள்.) கண்டு சந்தோஷித்து குருவின் காரணத்தால் சித்தி யடைந்த அண்டக்கல்லான உப்பைநான் அறிந்தேன் ஞானவெட்டியான் உண்மைபொருளை நான்சொல்ல எண்டிசையி லுள்ளவர்கள் இந்தை உணரார்கள் எ-று. (௬௭௭)

வெண்பா.

ஆனைக்கல்லா ரறிவ ரம்புவியி லும்மனிதர்
சோனகரால்வந்தவித சொர்னஉப்பை-யானைக்கல்
பானமென்றநீரமுரி பாண்டமதி லும்படியால்
தானதைகொண்டேட டலைத் தாக்கு.

(இ-ள்.) உலகத்தின்கண் யானைக்கல்லை யாவரறிவார்கள்? சோனகரால் வந்தசொர்னஉப்பை அதில் ஒருபாண்டத்திலிட்டு அமுரி நால்படி யூற்றுவாய் எ-று.

கொச்சகம்.

இவ்விதம்பிராணமதுவேயிடித்து இப்படிநான்
அவ்விதநால்நீர்படிக்கு ஆனதுக்கல்லோர்படி நான்
கவ்வியபூனீரதுகேள் கானகத்திலும்விளையும்
எவ்விதமென்றேயறிய இன்னீரில்தாக்கிடுமே.

(இ-ள்.) இந்த அளவிலேயே ஒருபடியுப்பிட்டு பிறகுகாட்டில் விளையும் பூநீறையும் அதில்போடுவாய் எ-று. (௬௭௯)

கலித்துறை.

அருள்மேவிக்கல்லு ஆனைக்கல்லுப்பு ஆதியுப்பு
திருமேவியவன்னி செங்கனலூட்டித் திருத்தமதாய்
உருவேறச்சுத்தி யுடன்கண்டகாச்சி யுற்பவமாய்
பருவப்பதங்கொண்டு பானநீர்விட்டு பகர்ந்தலம்பே.

(இ-ள்.) ஆனைக்கல்உப்பு ஆதியுப்பாம் வன்னியானசொல்கனலையூட்டி திருத்தமாய் சுண்டக்காய்ச்சிப் பருவத்தைக் கண்டு பானநீரைவிட்டு அலம்புவாய் எ-று. (௬அ0)

அனலுக்குநீருக்கு மசையாதுகல்லுப் பதையெடுத்து
முனைமேவியகுளி கல்லத்திலிட்டு முகுளிதமாய்
வினையேகுமண்ட கவண்கருவிட்டு வெகுண்டொருநாள்
இணையாட்டிமைப்பதமெழுபோல் வருஞ்செய்கையியம்புவனே.

(இ-ள்.) கல்லுப்பானது, அனலுக்கும், நீருக்கும் அசையாததாம் அதைஎடுத்துக் கல்வத்திலிட்டு அண்டவெண்கருவை இட்டு வெகுண்டு ஒருநாள்மெழுகுபோல்வரும் செய்கையைசொல்வேன்

அலைமோதியமேரு வுறையாகச்சேர்ந்து அருணன்பட
மலைமேவியப்பு நிலவிந்துவீசி வாருதியால்
சலையாமீரெட்டு சலநீருங்கட்டிக் கல்லுப்பதாய்
விலைமேவிசோனகர் பெரியோர்கள்வாங்கும் விற்பனையே.

(இ-ள்.) அலையால் மோதப்பட்ட மேருவில சேர்ந்து அருணனை சூரியன்தாக்க மலையிலிருந்து இந்துவான சந்திரகிரணம் வீசி கடலில் பதனறுகலைகளின் சலமும் நீருங்கூட்டிக் கல்லுப்பாய்விற்பனையாம் எ-று. (கூஅஉ)

இந்திரனுப்பு இதுமெழுகாட்டி யிரவிதனில்
சந்திரனுப்பைச் சதுர்பில்லைதுட்டிடை தானகொண்
டந்திரனுப்பு அதுசரக்காக அருணனதில்
பந்தனஞ்செய்து பரிவாகவட்டிப் பகர்ந்திடுமே.

(இ-ள்.) இந்திரனுப்பு இதுமெழுகையாட்டிச் சூரியனில் சந்திரன்உப்பைச் சதுர்பில்லை துட்டெடைகொண்டு அந்திர உப்பைச் சரக்காக அருணனில் மர்த்தனஞ்செய்து பரிவாக அரைத்துச்சேர்ப்பாய் எ-று. (கூஅ௩)

கதிர்முகநாடி மேல்வட்டமூடி கருணைபெற
மதிசிலையேழு மண்செய்துவாலை வன்னிமுகம்
அதிவிதமாக முயன்றெடுத்துஊதி அதையெடுத்து
நதிமேவுஞ்சந்திர பனிசுத்தநீரில் நாடிடுமே.

(இ-ள்.) சூரியவட்டத்தை விரும்பி, மேல்வட்டத்தை மூடிக் கருணைபெற சிலைமண் ஏழுசெய்து, வாலையிலிட்டு அடுப்பிலிட்டு ஊதி சுத்தநீரில் நாடும்எ-று. (கூஅ௪)

வெண்பா.

பனிவிசுமாகி தனிபங்குனியிலும் பிறங்கும்
தனியாகச்சுத்த சலந்தான்பிடித்து-பனியதுநீர்
வெண்ணிறமாய்நின்றதொரு மேதினியிங்காலநிலும்
நான்பெறவுஞ்சுத்தசல நாட்டு.

(இ-ள்.) மாசியிலும், பங்குனியிலும் சுத்தசலத்தைப் ஒருபீங்கானில்வை எ-று. (கூஅ௫)

இந்திரன்தன்விந்தி யிட்டிடுங்கற்சுண்ணமது
வெந்தசுன்னக்கல்விரைந்து வேகுமே-இந்திரநீர்
பட்டுவிடுமேகரைந்து பாலறையுப்பாமூன்றதனுல்
இட்டிடுமெஞ்சுன்னத்தி லெய்தும்.

(இ-ள்.) இந்திரனுடைய இந்திர கற்சுண்ணத்தை இட்டால் கற்சுண்ணமானது இரைந்துவேகும் இவ்வாறு அஞ்சுதினமான பின் நீறும் எ-று. (௲அ௬)

நீரதுமேலும்படியும் நேர்மைநிலவுப்பதுவாய்
பாரதின்மேல்கத்திகொண்டு பாய்ச்சினால்-நீரதின்மேல்
கண்டதனைக்கீறிவிட கல்லுப்புமேல்படியும்
மண்டலத்தின்பாறையுப்பா மறி.

(இ-ள்.) மேலும், கீழும் உள்ளநிலஉப்பாய் பாய்ச்சினால், கல்லுப்பின்மேல் படியும், ஒருமண்டலத்தில் பாறையுப்பாகும் எ-று.

விருத்தம்.

மண்டலந்தான்கழிந்தபின்எடுத்துப்பீங்கான் வாருதியென்ற திற் சுன்னகல்லுப்பாகும், கண்டஉப்புஇவ்வளவும் பாரையுப்பாம் கல்லுப்புஇதையறியார்கண்கெட்டுநீதி, சென்றுட்டமாய் சிலபேர் நாய்போல்சுற்றிச் செகமெலாமலைந்தலைந்துத்தியங்கினார்கள், குண்டலியின்கமலமலர்தொழுதுபோற்றி குறுமுனியினருள் தெளிந்து கூறுவேனே.

(இ-ள்.) இவ்வாறு ஒருமண்டலஞ் சென்றபிறகு பீங்கானில் வைக்கச் சுண்ணமாகும் இவ்வளவும் பாறைஉப்பாம், இதையுணர்ந்தவர்கள் கண்கெட்டு நாய்போல்சுற்றி உலகமெல்லாம் அலைந்து அலைந்து தியங்கினார்கள், குண்டலியின் கமலமலரை வணங்கித்துதி செய்து குறுமுனியின் அருளால்தெளிந்து கூறுவேன் எ-று.

அந்தபரிபூரணமாய் விளங்குஞ்சோதி அகண்டபரிபூரணத்தி னருளைப்போற்றி, சுந்தரமாயெனையீன்றமாதுவாலைக் சுகாதீதமென்னுளுமடிதொழுதுபொற்றி, யிந்தவிதிவிட்டகுறையெய்துமாகில் விந்துவிட்டோனவர்பதத்தில்மிகவும்போற்றி சிந்தையெனும்மனம் புத்திசித்தமூன்றும் சிறந்ததிதஆங்காரநாலும்போச்சே.

(இ-ள்.) அப்படி பரிபூரணமாய் விளங்குகின்றசோதியாய் விளங்கும் அருளைப்போற்றி அம்பிகையின் பாதத்தை வணங்கி விட்டகுறைவந்தால் விந்துவிட்டவர்பாதம் நமஸ்காரஞ் செய்து சதுர்வித கரணங்களும் வீணாகப்போச்சுது எ-று. (௲அ௬)

தத்துவமென்றுதித்த தொண்ணூற்றுறுஞ்சுட்டு தசவாய்வுமொருமித்துத்தானென்றாகி, பெற்றபிறவிக்கடலைத் தாண்டியேற பெரியோர்கள்வெகுகாலம்பிராணயத்தால்,குற்றமொன்றும்வாராமல்குறுக்கல்சுன்னம் கொண்டுஅநுமானமெனு மபூரிதன்னில்,

வித்தெனவும்விளங்கும்பாரை வெள்ளைக்கல்லுப்பதுவும் விதித்து தாண்டே.

(இ-ள்.) தொண்ணூற்றாறு தத்துவங்களையுங் கெடுத்து பத்து வாயுக்களும் ஒன்றாய்ச்சேர, பிறவிக்கடலைத்தாண்டிக் கரையேறவும், பிராணாயாமத்தால் குற்றம் ஒன்றும்வாராமல் குருக்கள்மார் சொன்ன சுண்ணத்தைக்கொண்டு வெள்ளைக்கல்லுப்பு உதித்தது.

பூருவத்திலுதித்தகடல்கல்லுப்பாகும் பூனீரினுப்பதுவுமமுரியுப்பும், வாறறிந்துமுப்பொருளுமூன்றுப்பாகும் வகைவகைக்குப் பலமதுவாய்வகுத்துப்பின்பு, சருகாமல்பறங்கிவைப்பு பலந்தான் சூடன் தனையெடுத்துகுளிக்கல்லில்சமையத்தானும், கருதாமல்வெண்கருவாலிரண்டுசாமம் கணக்காகமையதுபோல் கருதிடீரே.

(இ-ள்.) பூர்வத்தில் உண்டானது கடற்கல்லுப்பாகும்பூநீறும் அமுரிஉப்பும் ஆனமூன்று உப்புகளும் வகைக்குப்பலமாகவும்,பறங்கிவைப்புப்பலமாகும் சூடன் என்னுங் கர்ப்பூரம் ஒருபலமாம், கல்வத்திலிட்டு வெண்கருவால் இரண்டுசாமம் வரைக்கும்அரைக்க வேண்டும் எ-று.		(௬௬௧)

கட்டளைக்கலிப்பா.

கருதியும்வழித்தேயெடுபில்லைகாண் கதிரவன்தனில்காய்ந்தெ வட்டியில், சுருதிமேல்மூடியொன்றுபுடமதில் துரிதமாய்கனலாறியெடுத்திடும், குருமுனியருள்திருவள்ளுவனுரை கூறிடும்பெரியோர்கள்மகத்துகள், தொழுதுவாலைப்பதம்பணிந்தர்ச்சனை தொழுததால்பணிந்தாண்டேயுணருவார்.

(இ-ள்.) பிறகு வழித்தெடுத்துப் பில்லைதட்டி உலர்த்திப் புடமிட்டு ஆறியபின் எடுத்து வாலையடிவணங்கி அர்ச்சனை செய்து வணங்கி எ-று.		(௬௬௨)

வேறு.

பூநீறுவதும்பூதலந்தன்னிலும் வானிலும்மாசிபங்குனி மூன்றினில், காணிரோகதிர்சந்திரன்விந்தினால் சோனைபாய்ந்து சுகாதீத நீறதாம், பாணியோடிபருதிமுகம்பட தானினிவெண்மை தாரணி தன்னிலும், கோனினிபூமிராதமெழும்பிடும் வேனினிவிந்து நாதமீதாண்டையே.

(இ-ள்.) பூநீறுவது உலகத்தின்கண் மாசி, பங்குனி மாதங்களில் சந்திர, சூரியர்களின் விந்தினால் விளைவதாகும் எ-று.

பூமிநாதம்பூநீறெனும்பேரதாம் வாமியோகிகள் வந்துஅன்னு ளினில், நேமமாகநெறியதுவாகவும் பூமிசுற்றிப் புனலடியாமலும், தாமேவேலிதனித்துச்சோடித்துடன் ஆமேசாணொரு அந்தமண் வெட்டியும். நாமேசொன்னோம் நாளுக்குநாள்மூன்றதும் சோமன் விந்துநீர் சொல்லியெரித்திடே.

(இ-ள்.) பூமிநாதமே பூநீறென்னும் பேருடையதாம், யோகி கள் தீர்த்தமாடி யெடுத்து அமுரிதெளித்து எரிப்பார் எ-று.

மூன்றுநாளை முனைதெரியாமலும் மூன்றுமுச்சாண்பூ நீர்விட் டெரித்திடும், வேன்றுங்கம்பி யிதுநீவர்னமும் தோன்றுநாலு தினத்திலெரித்திடும், ஆண்டுபத்துமடுத்துகற்பங்கொளும் தூண்டி டும்புளிசுன்னம்பூநீறதும், மீன்றிடும்மிதுபூநீர்க்கெதிரிலா ஏன்றிடு ங்கரவித்தையிதாண்டையே.

(இ-ள்.) இவ்விதஞ் சொல்லப்பட்ட ச - நாளும் முச்சாண் பூநீறு விளைந்திடும் எ-று. (கககூ)

விருத்தம்.

சாணுயரமண்களைந்துஎரிந்துமேலும் தனித்துஅன்னுள் மறு நாள்கொண்டருணன்தன்னில், காணுமொருபடி யொருசாண்வெ ட்டிமேலும்கண்டு மறுநாளதிதன்காலைதன்னில், வேணுமந்தப்படி மூன்று நாளுஞ்செய்து விளங்கவுமேநாலாநா ளிதனைப்பார்க்க, மூன்றுநாள்சென்றதின்பின் கம்பியோடும் முன்னுளில்மெரியவிட் டுப் பின்னுளாண்டே.

(இ-ள்.) ஒருசாண்ஆழம் மண்ணை எடுத்து மறுநாள்சூரியனில் ஒருபடிகாணும் இவ்விதம் மூன்றுநாள்செய்து நாலாவது நாள் இதைப்பார்க்க கம்பிஓடும் அதைமிதித்து மறுநாளில் எ-று.

பின்முன்னுள்கடைநாலுமெரியல்வேகம் பேதித்திருநால்கொ ண்டு உதைத்துமேலாய், உன்னிதமாம்மெரியவிடப் பூதான்பூர்க் கும் ஓரங்குலப்பிரமாணமுயரமென்னில், இன்னமினி நாலாநாள் கிளிஞ்சலாலும் எடுத்துவெகுபதனமாய் குப்பிக்கேற்றி, சொன்ன குருநாலுமெழுபதமாயாட்டி சூக்ஷமதாயைம்பதெருப் புடத்தில் நீற்றே.

(இ-ள்.) இந்தநாட்களில் வேகமாய் மிதிக்கப்பூபூக்கும், அது ஒருஅங்குலம் பிரமாணமாயிருக்கும அதைக்கிளிஞ்சலில் எடுத்து குப்பியில் பதனம்பண்ணி மொழகுபதமாயாட்டி ருய - எருபுடத் தில் நீறுக்கும் எ-று. (கஙல)

நீற்றிடவுஞ்சுன்னமதாங்கொடியவேகம் நிறமென்னசந்திரனுக்கொளிபோதாது, வீற்றிடவுங்கல்லுப்புச்சுன்னந்தன்னை விளங்கவெகுபெரியோர்கள்விரித்துச்சொன்னார், நாற்றிசையில்நவகோடி முனிகள்சித்தர் நடனசூஸ்திரஞானவெட்டிமேலாம், மாற்றியே பிறந்திடவும்வாசியோகம் மாறுகலைபதினாலும் வகுத்தாராண்டே.

(இ-ள்.) அவ்வாறுசெய்தால் கொடிய வேகமுள்ள சுண்ணமாகும் நிறமோ சந்திரன் ஒளிபோலவும், கல்லுப்புச் சுண்ணத்தைப் பெரியோர்கள் விரித்துச்சொன்னார்கள். அதையே ஞானவெட்டியிலும் சொன்னதாம் எ-று. (௬௬௮)

இப்படியாய்நவகோடிகோடாகோடியிலகுபதினெண்பேர்கள் மகிழத்தானும், கற்பகமேதிருவருளேகருணைஞான கமலவிதழாயிரத்தெண்மலரின்மேலும்,உற்பவமேமுன்னோர்கள்மோட்சம்பெற்ற மூலசுழிமுனைநடுவில்நடனஞ்செய்யும், தற்பொருளேசடாதாரத்திலகுஞ்சோதி சாம்பவனென்றேஜெகமும் புகழ்ந்தாராண்டே.

(இ-ள்.) இவ்வாறே பதினெண்சித்தர் முதலியோர் மகிழ்ச்சியடைய முன்னோர்கள் மோட்சம்பெற்ற மூலச்சுழிமுனை நடுவிலுள்ள சடாதாரத்தில் சாம்பவனென்று உலகமுழுமைக்கும் புகழ்ந்தார்கள் எ-று. (௬௬௯)

திரிமூர்த்திவம்மிசத்தில்தோன்றுஞான திருவள்ளுவனையனுஞ்ஜெகமும்போற்ற, கருவூருவிளங்குநகர்கமலபீடம் கருணையானந்தவர்க்கத்தமிழால்ஞானம், தருமேசிவக்கியானவெட்டி ப்தவினாலும்தரணிதனிலறிவுள்ளோர்சாகாக்கல்வி,வருமமிசைபெரியோர்கள்தீக்ஷையாலும் வள்ளுவனுரைத்தமொழிவாறு ஆண்டே.

(இ-ள்.) மும்மூர்த்திகளுடைய வமிசத்தாலுண்டான திருவள்ளுவனென்னும பெயரைப்படைத்து கருவூரில் தமிழ்ஞானத்தில் பெரியோர்கள் உரைத்தபடி திருவள்ளுவனார் சொன்னார் எ-று.

ஜெகமாய்கையண்ட பிண்டமமைத்தவாறும் ஜெகதலமீரேழுபதினாலுங்கூடி, அகமாய்கைஆண்பெண்ணையுதித்தவாறும் அவனியிலெண்பத்துநான்குயிராய்நின்ற,பகவனருளாலுதித்துப்பாரில் செந்துபலபலவாயுயிரதுவாய் படைத்தவாறும், சுகவசியமோகமாயெங்குந்தானாய் சுகாதீதமெனவிளங்குஞ்சூக்ஷந்தானே.

(இ-ள்.) உலகமாயையில் அண்டபிண்டங்கள் உண்டாக்கினவிதத்தையும் ஆண்பெண்உண்டானவிதத்தையும், உலகத்தில்செந்துப் பலபலவேதமாய்ப் பிறந்தவிதத்தையுஞ்சொல்லுகிறேன் எ-று.

முப்பொருளாய்நின் றிலங்குமதியேவிந்துமுறையானநிலவுப்பு கடல்நீருப், இப்பொருளாய்சமைத்தவிதசுன்னம்வாங்கி யிசைந்து குளிகல்லதனில்நன்றாயாட்டி,கைப்பொருளென்றிதையறிந்துவீரம் பூரம் கருவினிலும்புருகுகுருவண்டுநாபி, செப்பதிதவகைவகைக்கு ஒருகளஞ்சுகூட்டி சிதையசயபழத்தினிட ரசத்தால்மாய்ந்தே.

(இ-ள்.) மூன்றுபொருள்களாய் விளங்குகின்ற விந்துமுறை யான நிலவுப்பு, கடலுப்பு, இவைகளின் சுண்ணத்தைவாங்கி குழிக் கல்லில்போட்டு, வீரம், பூரம், புனுகு, குருதண்டு, நாபிஇவைகள் வகைக்கு ஒன்றேகால்வராகனெடைகூட்டிபழரசத்தால்அரைத்து.

வேறு கவி.

மாயமாயமயனமதாகிடும், வாய்வும்வன்னி வருணனுங்கூடி னால், தேயதேயமெங் பொன்னிறமாயிடும், பாயபாயபகிரண்டம ளாவியே.

(இ-ள்.) மாயமாகிய மயனத்தில் வாயு, வன்னி வருணன் இவைகள் சேர்ந்தால் செம்பொன்நிறமாம் எ-று. (கூ. ௩)

நின்றுநாடிநிகழ்த்தமயனமாய், அன்றுநாளுமன்னுள்முழுதா ட்டினுல், கண்டிசாடிகணக்கொருவிதயாய், பண்டொங்கனிபார்க்க ப்பழமதே.

(இ-ள்.) ஒருநாள் முழுமைக்கும் அரைத்தால் மயனமாம் அதைக்கண்டு ஒருகணக்கால் பார்க்கப்பதாம் எ-று. (கூ.௪)

கடலுப்பாவதுகடல்நுரைகட்டினுல், கல்லுப்பாவதுங் காணு மகத்துகள், செடலவுப்புசிவகங்கைகூடினுல், அவனிமீதினிலஷ்ட சித்தாடுமே.

(இ-ள்.) கடலுப்பென்பது கடல்நுரையாகும், கல்லுப்பாவது மகத்துக்கள் காணுவார்கள், செடவுப்பாவது சிவகங்கைகூடினுல் பூமியில் அட்டசித்திகளும் ஆடும் எ-று. (கOOரு)

மாதுவாலைவாலாம்பிகைதன்பதம், ஏதுநாதமுமேகத்தின்வா றுகாண், ஊதுந்தாரையுயிர்காணமுரியால், வாதமுன்னெதிர் வந் தெதிர்நிற்குமே.

(இ-ள்.) பெண்ணென வாலாம்பிகையின் பாதத்தை யேற்றி அமுரியினுல் ஊதினுல் வாதம் எதிர்வந்துநிற்கும் எ-று.

வேறு-கவி.

வெண்மதிநிலவுப்பையறிந்திடும் வேகமென்னவிது வீரசுன்ன மாம்நண்பெறுமெழுகேவழித்தங்ஙனே நாடியில்லைரவியினில்காய்ந்

ததால், அண்ணல்தன்பதமர்ச்சித்து வட்டியில் அடியிருக்கமே லோடுதன்மூடியும், மண்ணாதீதமண்சீலேமண்ணேமுமேவன்னியாங் கதிர்வாலேயில்வைத்திடே.

(இ-ள்.) வெண்மையான நிலவுப்பை உணர்ந்தால் வீரஞ் சுண்ணமாகும், ஆகையால் அந்தமெழுகை வழித்துப்பில்லே செய்துலர்த்தி இறைவன் திருவடிகளே வணங்கி ஓட்டிலிட்டு மேலோடு மண்சீலேசெய்து வாலுகத்தில் வைத்து எ-று. (கஸ0௬)

வைத்துச்சாவல்புடம் போட்டெடுத்துடன் வானில்குப்பிருவந்தியத்துற்குள்தான், சித்துவாதச்செகவசியம்மதாஞ்சினச் சரக்கறுபத்துடனுலதும், பற்றுமில்லாப்பளிங்கதுபோல்திறம் பாரும் பாரும்பரிக்ஷைதன்வேதைகாண், கற்றுமுப்பொருள் காட்டினர் நூல்வகைகாணுதொன்றுங் கருதினேனு ன்டையே.

(இ-ள்.) சாவல்புடம்போட்டு எடுக்க எல்லாச் சரக்குகளும் கட்டுதற்குரித்தான பளிங்குபோலாகும், பரீட்சைவேதையாகும்.

ஆண்டுநூறுமடித்தென்னபாக்கியம் ஆயிரத்தைந்நூறில்வாறுகாண், கண்டுநூல்கள் கல்லுப்பறியாமலும் காணுங்காணு கருத்தழியார்கள்காண், மண்டலம்வலிவேவோடுதிரிந்ததால்வண்டர்காணும் வகையறிந்தாரில்லே, ஒன்றுமொன்றுஉரு வறிந்தாலல்லோ ஓகோ ஓகோபாருமுனதருளாண்டையே.

(இ-ள்.) என்னபாக்கியம் இருந்தென்ன? கல்லுப்பைஅறியாமலும வேறொன்றை உணர்ந்தாரில்லை, இவையெல்லாம் உன்னுடைய அருளேயாகும் எ-று. (கஸ0௭)

வான்புவிகடல்மண்ணும்விண்ணும்மது எனதுக்கிதுக்கேவல் செய்ரிம்மதாம், நானருள்ஞானவெட்டிக்கெதிரொருநாடி யாடிய நான்மறைநூல்களும், பானுமாலிபரையென்றறிந்திடார் ஞானமோதுவர்கியானசுகாநிதம்.மானுபாவரெனுஞ்சிவமுத்தர்கள்ஆனதால் நற்பொருளறிந்தோதினர்.

(இ-ள்.) நான்குவேதங்களும், ஞானவெட்டிக் கிணையாகா இதை சிவமுத்தர்களே அறிவார்கள் எ-று. (கஸகஸ)

முப்புமுப்புவென்றோதியநூல்கள்தான் அப்புமப்புவென்றுரறிவார்களோ, செப்பினர்பதினெண்பேர் மகத்துகள்தப்புமோசுத்தசாகரநீரெலாம், அப்புவினருளான அவ்வாறினுல்கைப்பையே களிம்பற்றுக்கசடறும், இப்புவிஜெகவீணைசகொண்டிவர் கைப்பையாண்டிக்கருத்தறியார்களே.

(இ-ள்.) பூப்பு என்றுசொல்லுகின்ற நூல்களையரவர் அறிவார்களோ? பதினென்சித்தர்கள் அறிவார்கள்மற்றவர்கள் இதன் கருத்தை அறியமாட்டார்கள் எ-று. (௧௫௧௧)

வாரிவாரிமகராசமாவதால் நீறிடும்நவலோகமும் ரத்தினம், தேறுந்தேறும்வெள் வங்கமொருபலம் சேரதாய்முப்புசுன்னங்களஞ்சிடை, சாரிசாரிசாரித்துநீறதால்ஆரபாரமதின்கீழ்மேல்பூசியின் நீறிநீறியுநேற்றிலமாகிடும் ஆறியுங்கதிர் வாலைரவியதே.

(இ-ள்.) நவலோகமும், நவரத்தினமும் முன் சொன்னதால் நீறும், வெள்வங்கம் ஒருபலம், முப்புசுண்ணம் கழஞ்செடை பூசி ரவிபுலர்த்தி எ-று. (௧௫௧௨)

அந்தரத்தருள் தாமரைமூலிதான் அங்ஙனேஅரைத்தங்கியும் பூட்டிமேல், இந்திரக்கவசங்களுநஞ்சீலைமண் ணேழுஞ்செய்து இரவியில்வைத்தெடுத், தந்திரப்புடங்குக்குடமாமதில் அந்தவங்கமதிறவெண்மைதான், சந்திரனொளிபோலும்பிரகாசமாய் விந்தையாமிது வெள்வங்கம்நீறுமே.

(இ-ள்.) ஆகாசதாமரை மூலிகையை அரைத்து அங்கிபூட்டி சீலைமண் ஏழுசெய்துகுக்குடபுடம்போட வெள்வங்கம்நீறும்எ-று.

நீற்றினால்நவலோகமுநீற்றிடும் நேர்மைநேர்மைநிகரிதுக்கொக்குமோ, சாற்றினார்குருவெள்வங்கச்சுன்னமாம்தாம்பிரபஞ்சாஸ்திரவேதைகாண், சூத்திரமிதுசொன்னாரகத்தியன் தொட்டதெல்லாந்தொடுகுறியாமிது, பார்த்துபார்த்துப்பலபேர்மயங்கினார்பாடுபட்டால்பலனுண்டுஆண்டையே.

(இ-ள்.) இதனால் நவலோகத்தையும் நீற்றிவிடலாம், இதற்கு வேறெதுவும் ஒப்பாகாது. தாம்பிரபற்பமே சாஸ்திர வேதையாகும் இவைகளுக்கெல்லாம் பாடுபட்டால்தான் பலன்உண்டு எ-று.

இந்தசுன்னமெடுத்துக்களஞ்சிடை யெந்தெந்தசரக்கெல்லாமிசைந்திட, நொந்தங்கோடிதொடுத்துமிழ்நீரதால் அந்தந்தசரக்காவதுமோர்பலம், அந்தமாய்குழைந்தந்தசரக்கின்மேல் இந்தப்பாகமிதுகவசஞ்செயில், கந்தப்பூமலரம்பிகைபொற்பதம் சிந்தைவைத்துத் தெரிசித்துப்போற்றிடே.

(இ-ள்.) இந்தச்சுண்ணத்தில் கழஞ்சுஎடுத்து எந்தெந்தச்சரக்குகளும் சுண்ணமாக உமிழ்நீரினால் அரைத்துதடவி ஈஸ்வரியைசிந்தித்து எ-று. (௧௫௧௫)

பூரணச்சந்திரன்போலொளிவீசிய தாரணைத்தசதீட்சைதவறிடல், காரணக்குருகண்டுமகிழ்ந்திடும் வீரியதுதாதுவும விந்துங்கட்

டிடும் காரியமாஞ்செந்தூரத்திற்காயமும் தேரிடுமொருதிங்களுணா ர்ந்ததால் மாறமாறமதியமிர்தம்மது சேரச்சேரச்செந்தூர மொழி வதே.

(இ-ள்.) பூரணச் சந்திரனைப்போல ஒளிவீசினதாரணை தசதீட் சையின்விதி தவறிஞல் எல்லாம்தவறிவிடும் எ-று. (கoகசு)

வேறு விருத்தம்.

முத்துடன்பவளம்பச்சையும்வயிரமுமூவயிடூரியங்கெம்பு. முற் பகப்புஷ்பராகமு மிவைகள்முதிர்ந்திடாமரகதத்தோடு, சத்தெனு மஷ்டரத்தினமிதுகாண் தனிவகையொவ்வொன்றுபலந்தான், தர ணியில்வேதை சத்துகளிலகுஞ்சந்திரனுப்புவாலதிதம், விந்தெனுங் குளிக்கல்தனிலு மொவ்வொன்ருய் விளங்கிடுமுப்புவின் சுன்னம், இதுபணவிடைகொண்டருள்பெறஅமுரி விந்துநீர்தனிலிருசாமம், கற்றவர்கமலபொற்பதமடியேன் கருத்தில்வைத்தர்ச்சனை செய்து, காரணகுருவின்கடாக்ஷமும்புரிய கனகவேதையுமருள்கூர்வாம்.

(இ-ள்.) நவரத்தினங்களும் வகைக்கு ஒருபலம் சந்திரனுப் பால் குளிக்கல்லில் அரைத்து முப்புசுண்ணம்பணவெடைசேர்த்து பெரியோர்களை வணங்கி புடஞ்செய்தால் குருவேதையாம் எ-று.

கனகவேதைபுமா மெழுகதின்பதத்தில் கண்டிடைவழித்து பில்லையதாய், கருணைகூர்நதிலகுங் கதிர்முகம்படவும் தாய்ந்ததை வட்டியில்தாக்கி, வினவிதைத்தனைமேல்மூடிச்செய்கை விசிதமாய் சீலமண்ணேழு, விக்கிரமாய்ரவிதன் சுவாலையில்வைத்து மிகுபுட மைம்பதுஎருவில், தனமிதுவெனுயேபுடமெனுமாறித் தனையெடுத் தனுக்கிரகம்புரிய, சத்துமுத்ததனில்தந்திரனொளிவாய் சங்கற்ப மில்லாமல், இனமதாயிலகுமிதுபுவரசமா மெடுத்துடனுருக்கினுலு ருகும், எவர்செயலிதுநாணமைப்பிருந்ததனு செய்திடுமினியுரைப் பதுவே.

(இ-ள்.) கனகவேதையாம் இதை மெழுகுபதத்தில்வழித்துப் பில்லையாக்கி உலர்த்தி அகலிலிட்டு மேல்மூடிச் சீலசெய்து சுவாலை யில்வைத்து ஐம்பது எருவில் புடமிடபற்பமாம் மறுபடி எடுத்து உருக்கினுலும் உருகும் எ-று. (கoகஅ)

செழுங்கனலொளி வாமழுகுதன்விசிதஞ் செழித்திடும்பவள மோர்பலமாய், தெளிந்தநற்கலுவ மதனிலிவ்வகையை திருத்தமா யூட்டிமென்குருவில்அழுந்தமுன்னிடைகொண்டமுரிவிட்டாட்டிய ருசி நராமமவ்விதமாய்அரைநவழித்திலனுமெழுகுபோல்வருதலரு

முகம் படவருளி, தெளிந்ததோர்வட்டியதினைதையூட்டி சிரமுடி மேலதாய்மேவி, செய்கைமண்ணேழுசீலையுந்திரமாய் செப்பிடில் சந்ததுமிசைவாய், விடமெனுமருணன் கனலில்தாக்கிவிளங்கிடவொ ருவுமன்பதனில், மேலதாய்புடம்போட்டியல்புசத்திறங்கும்வெண் ணிறமதியொளியிதுவே.

(இ-ள்.) பவழம் ஒருபலம் கல்வத்திலிட்டு குருமருந்து பண வெடைபோட்டு அமுரியாலரைத்து இருசாமமானபின்பு வழித்து உருட்டு உலர்த்தி அகலிலிட்டு ஏழுசீலைமண்செய்து ௱௰-எருவில் புடமிட சந்திரன் ஒளியைப்போன்ற சுண்ணமாம் எ-று.

ஜெகமெலாநிறைந்தவடிவழகுடைய திருமலர்க்கமல பொற்ப தத்தில், சீஷனென்றடியேன்சாம்புவனெனும்பேர் தெக்ஷணாமூர்த் தியின்செயலாய், புகழ்விளங்கதிதம் ராஜரத்தினமாம் பூமலர்பச் சையோர்பலமாய், புரையில்லாக்கலுவ மதனிலிட்டுபமாய் பொற் குருபணவிடைருட்டி, அமலர்வீசுமதியொளிவிளங்குமமுரிவிட்டா ட்டிருசாமம், அதிதமாமெழுகுபதமெனும்வருதலதனையேவழித்து பில்லையதாய், உகையதாய்க்கதிர்தன் முகம்படஅனலி லுணர்ந்தெ டுத்துடன்வட்டியதனில், உபமதாயடக்கி மேல்மூடிச்சீலையுறுத்த மண்ணேழு செய்விதமே.

(இ-ள்.) உலகமெல்லாம் நிறைந்த அழகுடைய நான்சீடனெ ன்று சொல்லி, பச்சையில் ஒருபலம் கல்வத்திட்டுகுருபணவெடை சேர்த்து, அமுரிவிட்டு ஆட்டி உலர்த்திபுடம்போட சுண்ணமாம்.

வேறு-விருத்தம்.

அதிவிதிக்கதிர்தன்னொளிவதும்வீசு அருணனில்முகம்படஅரு ளி, அனுக்கிரகம்புரியஐந்துபத்தெருவிலக்கினியனலதுமூட்டி,துதி யகத்தீசர்மலரடிபணிந்துதொழுதுடன்தோத்திரஞ்செய்து, தொடு த்தனலாற்றிபசைந்தசத்தளவின்சுகாதிதமெனுஞ்சொல்லளிதோ உதித்தசத்தொளி தானுவரசமிதுபேருலகினில் நிலவதுக்கதிதம் யோகியாய்ஜெனித்துயோனிதன்வழியி லுற்பவித்தமைத்தவனொரு வன் விதிதன்விந்ததனால்தந்தையுந்தாயும் விரும்பி சையோகத்தி லமிசைவிளங்குவார் பெரியோரவரிருப்பிடமே வீடுவந்துரைப்பது மேலோ.

(இ-ள்.) மேற்படி மருந்துமுடிந்தது யோகியாய்ப் பிறந்தவர் கள் ஏற்படுத்தின விந்தினால் தந்தைதாய்விரும்பியசையோகத்தின் மேல்விளங்குபவர்கள் பெரியோர்களே அவர்க ளிருப்பிடத்தை உரைப்பதுமேலோ எ-று. (கஙஉச)

சுகாதிதஞ்சொலவும்ராஜரத்தினமாஞ் சுடரொளியிலகிய வயி ரம், சுழிமுனையிலொருமதியெனுமதின்பேர் துகையுளதிதுவடிவுள தாய் செகாதிதமனைத்து மடிபணிந்தொழுது திருவுளமுயன்றனரு ளால், தேவராயுதிப்பதரிதரிதுலகில் சித்தராய்ஜெனிப்பது மரிது, தகாதுலகதிதமனிதராய்ப்பிறந்து தரித்திரஅமிசையிலழுந்தி, தந் தைதாய்செய்கைபூசாபலயோகஞ்சற்குருபயனிவைதவத்தில்,யுகா யுகமளவுமனித்தியந்ததினந்தின மொழிவழுலகினில் வாழ்க்கை, உடலுயிர் வளர்த்தி நாதவிந்துளதா யொருவனே யுலகெலாம் படைத்தே.

(இ-ள்.) சுகாதிதஞ்சொல்லவும் ராஜரத்தினமான சுடர் இலங் குகின்றவயிரம் வடிவுள்ளதாய் தேவராகவும், சித்தராகவும் பிறப் பதரிது மனிதராய்ப்பிறந்து தரித்திர அமிசையில் அழுந்தி தந்தை யாய் பூஜாபலயோகத்தினால் பிரதிதினமும் நாதவிந்து உள்ளதாய் ஒருவன் உலகமெல்லாம் படைத்தது எ-று. (௧0௨௨)

விருத்தம்.

வயிரமொருபணவிடைகாண்கலுவத்திட்டு மகத்தானகுருவில் பணவிடைதானூட்டி, சபிலமெனுமுதகமாஞ்செயநீருகும் தனைவி ளங்கமதியமிர்தசலத்தாலாட்டி, அபிலவிதுஅறிவாரோ ஆண்டே கேளீர் அதுமெழுகுபோல்மயனமது காணெய்தல், குயில்மொழி மாதம்பிகைப்பெண் குறித்துச்சொன்ன கூறதனலிருசாமங் கூர்வ தாமே.

(இ-ள்.) ஒருபணவெடை வஜ்ஜிரத்தைக் கல்வத்திலிட்டு குரு வில் பணவெடைசேர்த்து வைக்க ஜெயநீராகும் அதை மதியமிர்த சலத்தாலரைத்து மெழுகுபோலானால் இருசாமம்பொறுத்து எ-று.

கூறினதோர் மெழுகெடுத்துசதிரபயில்லை குறிப்பாகசெய்து ரவிமுகத்திலூட்டி, வீரியமாயிரவிசுடவட்டிக்கேற்றிமேலொருதன் வட்டியதுமிகவுமூடி, தெரியசந்துவாய்புதைந்துசீலையேழு செய்து கதிர்முகம்படவுஞ்செலுத்திமேவி நெறியுடையவைம்தெருப் புடக் திற்சந்து நிகரில்லாவச்சிரத்தி னேர்மையாண்டே.

(இ-ள்.) சொன்னமெழுகைப் பில்லைசெய்து உலர்த்தி அகலி லிட்டு மேலோடுமூடி எழுசீலைசெய்து உலர்த்தி ருடு-எருவிற் புடம் போட்டால் ஒப்பற்ற சத்தாகும் எ-று. (௧0௨௪)

நிகரில்லாசத்துவிஞ்ஞளிவோகோடி நிலைவதித் துய்யநிறமதி யோகோடி, சுகவதிதவஜிகரவைடூரியச்சத்துதொட்டகுறையிருந்த

தனால் சொல்வேன்காணும், திகம்பரவைடூரியத்தில் பலமொன்றி ட்டு சிவகுருவின்பணவிடைதா னேக்கத்தாக்கி, அகமானஅமுரி விட்டிருசாமத்தில் ஆடையிலுமெழுகுபதமாச்சுதாண்டே.

(இ-ள்.) அச்சத்தின் ஒளிவுகோடியாகும் நல்லவெண்மை நிற மாம் இதுவே வைடூரியச்சத்து தொட்டகுறைபிருந்தால் சொல் லுகிறேன், இதவைடூயத்தை பலம் ஒன்றாயெடுத்து குருவில் ஒரு பணவெடை கூடப்போட்டு இருசாமம் அமுரியிலரைத்து மெ ழுகுபதமாச்சுது எ-று. (க௩உரு)

கண்டுமெழுகெடுத்துசதுர் சிராய்வாலைக்கதிர்முகவன் சுவாலை படிக்கடிசதாவல், நன்றுதனிவட்டியிலிமடக்கிவட்டி நடுமூடிசக் கதுமண்சீலையேழு, அன்றிரவிமுகம்படவும் ரவிபில்வாலை யைம்ப தெருப்புடந்தனிலுமடக்கிவன்னி, வென்றுபுடமாற்றியெடுத்துடை த்துப்பார்க்க மிகவும்வைடூரியத்தில் சத்ததாண்டே.

(இ-ள்.) அதைக்கண்டு மெழுகை எடுத்து, சீலைசெய்து உலர் த்தி அகலிலிட்டு மேலோடுமூடிச்சீலைசெய்துஉலர்த்தி ருடி-எருவில் புடம்போட்டு எடுத்துப்பார்க்க வைடூயச்சத்தாகும் எ-று.

தரணிதனிலிதையறிய பெரியோர்சொல்ல சாற்றினேனிதை யெடுத்துப்பதனம்பண்ணி, குறைவதுவந்தெய்தாமல் குருவைப் போற்றிக் கும்பமுனிதிருவடியைப்பணிந்துயானும், மறைவுகளில் லாமலிந்நூல்ஞானவெட்டி வசனித்தேனுயிரத் தைந்நூறுக்குள், துறைகோடிமுறைகோடி தொந்தங்கோடி தொட்டதெல்லாம்பலி தமெனுஞ் சொன்னாராண்டே.

(இ-ள்.) இதை பெரியோர்களுடைய சொற்படி இவ்வுலகத் திற் சொன்னேன் இதில் யாதொருகுறைவும் வராதபடி குருவைத் துதிசெய்து கும்பமுனி திருவடிகளைப்போற்றி தொட்டதெல்லாம் பலிக்க ௩௲-ஆன ஞானவெட்டிசொன்னேன் எ-று. (க௩உ௬)

பூரணச்சந்திரன்மதியைவிதிக்கப்போமோபுஷ்பராகத்தினுட சத்துநேர்மை, காரணத்தைமனதினுன்னிக் கவலைநீக்கிக் காசினி யோர்செய்தொழிலில்கருதார்மேலோர், வாரணமுனிவரெனுந்தெ ட்சணுயன் வரத்தாலுந்திருவள்ளுவன்வசனகாவியம், சூரனெனு மதிவீரஞானசிங்கம் துரைசாமிபிரமசிருஷ்டி சூக்ஷமாண்டே.

(இ-ள்.) பூரணசந்திரன் மதியைவிதிக்கப்போமோ புட்பராக த்தின் குணத்தை மனத்தில் எண்ணிக்கவலையை நீக்கி உலகத்தவர் கள் செய்கின்றதொழிலிலும் தெட்சணுயன் வரத்தால் திருவள்ளு

வன் வசனகாவியமாகச்சொன்ன பிரமசிருஷ்டி, இதுவே சூட்ச மாகும் எ-று. (கOஉஅ)

சூக்ஷாதிசூக்ஷமெனும்புஷ்பராகம்தூக்குமொருபலமாகச்கலுவத்திட்டு, பட்சமெனக்களித்தகுருபாதம்போற்றிபரிகுருவில்பணாவிடைகொண்டமுரியாலும், தட்சணைமுமிருசாம மிடைவிடாமல் சாதித்துஆட்டிவழித்துண்டையாக்கிபிட்சணைமுஞ்சதுரடைபோல் பதமாய்வாலெ யிரவிமுகம்படவுலரவெடுத்தாலாண்டே.

(இ-ள்) புஷ்பராகம் ஒருபலம் கல்வத்திலிட்டு குருவடியைத் துதித்து குருவில் பணவெடைசேர்த்து அமுரியினால் இரண்டுசாமம் அரைத்து உண்டையாய் உருட்டி உலர்த்தி எ-று. (கOஉக)

வலுவானவட்டிதனிலடக்கிமேலும் வட்டியதுமேல்மூடி மண்ணுஞ்சீலெ, விலுவாகசந்துமண்மேலுமூடி வெகுவாலெரவியதனில் விளங்கமேவி, செலவாகாதெருவதுமேளஞ்சுபத்து செவந்தவன்னி மூட்டிகனலாறிச்சென்று,பெலமானசத்ததுதான்பெரியோராலும் புவியிலமைத்தெவர்களும் புதுமையாண்ட.

(இ-ள்.) பலத்த அகலிலிட்டு மேலோடுமூடி மண்சீலெசெய்து உலர்த்தி ஐம்பதுஎருவில் புடமிட்டு எடுத்துப்பார்க்க புதுமையாம்

சத்துகளின்சித்துஅறுபத்துநாலும்தமிழ்முத்துக்கொப்பான வெள்ளேடில்லெ, கற்றவர்கள்பழிப்பவரோகவிக்கொவ்வாதாலதாரணத்தையறியார்காண்மற்றபேரும், முத்தர்நவசித்தர்மற்றுள்ளோரெல்லாம்முனிவனெனப்புகழ்ந்தேத்துமுதல்வரான,வித்துவானயுதித்தாற்கிடைத்ததேது விந்துக்குதோனவர்செயல்வாழ் விதித்ததாண்டே.

(இ-ள்.) அறுபத்துநான்கு சித்துகளுமாடலாம் இதன்மகிமையை சொல்வதற்கு எடிடங்கொடுக்காது வித்துவானைச் சொல்லுவார்கள் எ-று. (கOஙக)

கொச்சகம்.

ராஜரத்தினரதிதான் ரத்தினத்தில்கோமேதகமாம்
பேசவரிதோபெரிதோ பேருலகிலாரறிவார்
தேகமதிலுமனந்தஞ் சென்னிதனிலும்பலங்கொண்
டாசைவைத்துப்பாடுபட்டா லாண்டேயரைப்பதுவே.

(இ-ள்.) ரத்தினங்களில் கோமேதகம் மிக்க உயர்ந்ததாகும் அதின்பெருமையையார் அறிவார்கள்? தேசங்களில் அனந்தம் பேர் ஆசைவைத்துப் பாடுபட்டால் நன்மையை யடைவார்கள்.

பாரிலிருந்தேயுற்ற பண்டிதரேயுங்கள்புத்தி
தாரிகளிலேமயங்கி தாபந்திரியப்படவோ
நாரியர்தன்கைபிலகப் பட்டபுலிபூனையைப்போல்
ஊரிலிருக்குநரி யுபாயமதாய்வாழ்ந்திடுமே.

(இ-ள்.) உலகத்திற்சிறந்த பண்டிதர்களே! உங்கள்புத்திகெடுதற்கோ புலிபிடித்தாகப்பட்ட பூனைப்போல ஊரில் இருக்கும் நரி உபாயமாய்வாழும் எ-று. (கஎகரு)

விருத்தம்.

கலைபரவுமம்பிகையேவாலைதேவிகருணையெனக் கருள்புரிந்த காக்ஷியாலும், வறுத்தன்னி கருவதில்மருவுமுப்பு வகையதனிலொருபலங்கொண்டமுரியூட்டி, கிலத்துவிடுமயன மெழுகதுபாகத்தில்கிகழாமல்சதுரடையாய்நீகழ்த்திவாலை, கலையதுவுமுருகிபனிரெண்டுமேரடில் காந்தியொளிபடவும்ரவிகடிசதாண்டே.

(இ-ள்.) அம்பிகை எனக்குக் கிருபை செய்ததனாலும், உப்பு வகையில் ஒருபங்கில் அமுரிசேர்த்து மெழுகுபாகத்தில்பனிரண்டு சாமம் அரைக்கவேண்டும் எ-று. (கஎகச)

கலித்துறை.

கெடியானவட்டி தனிலூட்டிமேவி மேல்மூடியதும்
அடியானசீலை வலுவேழுசெய்து அருணன்முகம்
படவும்படமெரு அஞ்சபத்தோர்புடமாறிப் பின்
தொடவுமதீத கோமேதகச்சத்து சோதிப்பதே.

(இ-ள்.) அதை அகலில்வைத்துமேல்மூடி ஏழுமண்சீலைசெய்து உலர்த்தி ஐம்பதுஎருவில் புடந்தீர்ந்தபின் கோமேதகச்சத்தாகும்.

மரகதவாலை பரிபூரணத்தின் மலரடியில்
வரமேயளித்த குருமுனிபாத மடிதொழுது
திரமேமரகதம் பலமொன்றுபார்வை திதந்தருவீர்
சரமேவியபதங் கலுவத்தினிலிட்டுத் தாபியுமே.

(இ-ள்.) வாலையின் திருவடிகளிலும், குருமுனிபாதங்களிலும் தொழுது மரகதத்தில் ஒருபலங்கல்வத்திலிட்டு எ-று. (கஎகசு)

சற்குருவிந்து நாதமுங்கூடி சருவினதால்
வற்கமும்பொருளின் பனிவிடைகூட்டி மதியமிர்தம்
முற்கமதாக யிருசாமமாட்டி முன்பதமாய்
உற்கந்தவிர்ந்து சதுரடைசெய்து உலர்த்திடுமே.

(இ-ள்.) விந்துநாதமுஞ் சேர்ந்து சருவினதினால் முப்பொருளினும் பணவெடை யளவுசேர்த்து மதியமிர்தத்தால் இரண்டுசாமமரைத்து உலர்த்தவேண்டும் எ-று. (கஙஎ)

கதிர்கோடிவாலை ரவிசூடுபட்டு கடிசதுவாம்
பதிமேவிவட்டி மேல்மூடிசெய்து பாகமதாய்
மதியேழுசிலை மண்பூசிபின்பு வைத்துபதம
மிதமேவுவைம்ப தெருச்சூடியேவன்னி விரவுமே.

(இ-ள்.) சூரியனுடைய உஷ்ணந்தாக்கி உலர்ந்தபின் அகலிலிட்டு மேல்மூடிச் சிலைசெய்து ஐம்பதெருவில் புடம்போட வேண்டும் எ-று. (கஙஅ)

வெண்பா.

மரகதமாஞ்சற்று வானிலெழுமில்லை
திரமிதுகாண்பதனமிது செப்பிலும்-மரகதத்தில்
ஊரினிலுண்டாய்ந்து உத்தசெய்திபாடுபட
சாரிவரலாங்கடல்சூழ் தான்.

(இ-ள்.) மரகதத்தில் உயர்ந்தது ஊரிலுண்டாம் அதையுணர்ந்து எடுக்கவேண்டும் எ-று. (கஙக)

மாதிலின்திருவாயிலகு மாதவத்தோர்கண்டறிந்த
ஆலிலைமேல்பள்ளிகொள்ளு மாயன்-மாலின்திரு
அவ்வெழுத்தும்பேசு மறிவாலறிவறியும்
உவ்வெழுத்தால்வாய்மூடு வோம்.

(இ-ள்.) மகத்தாகிய தவமுடையவர்கள் கண்டுணர்ந்த விஷ்ணுவின் அக்ஷரங்களால் வாய்மூடுவோம் எ-று. (கசய)

நீலமாணிக்கமது நின்பலமொன்றுயிடை
வாலைகுருபிடைபணமாய் வாங்கி-நீலமணி
புரையில்லாக்கனுவமது பூட்டிவிருந்துச்சூட்டி
உரையமெழுகாமமுணர்.

(இ-ள்.) நீலவர்ணமுள்ள மாணிக்கம் ஒருபலத்தில் குருபணவெடைசேர்த்து விந்துநீரினாலாட்டி மெழுகாக்கவேண்டும் எ-று.

மயனமெழுகு மதியமிர்தநீரூட்டி
வயதுகுறைபாதிடைக்கு வன்னி-மயனமெழு
சதிரிடைபோலிலகும தனிகதிரோன்தன்முகத்தில்
பயபதுகாண்வாயாறுபார்.

(இ-ள்.) மெழுகை மதியமிர்தநீர் ஊட்டி வயதுகுறையாதபடி சேர்த்து உலர்த்தவேண்டும் எ-று. (கO௪உ)

மண்வயிரவட்டி வைத்துமேல்வட்டியதும்
நண்பதிதண்சிலை நாட்டி-மண்வயிர
ரவியில்முகம்படவு நன்னயமாயைம்பதெரு
திரவியமாவன்னியதுஞ் சேர்.

(இ-ள்.) அகலிலிட்டு மேல்மூடிச் சிலைமண்செய்து உலர்த்தி ஐம்பது எருவிற்புடம் போடவேண்டும் எ-று. (கO௪௩)

மாறிகனலாற்றி மாறிசத்துநீலமணி
கூறுமாணிக்கமதுக் கொவ்வாது மாறுகனல்
வித்துநவசத்து மிகவுமொருசுருபம்
வைத்துகுருபணவிடைகா ணுண்டே.

(இ-ள்.) ஆறினபின் ஆற்றிவைக்கவும், நீலமானது மாணிக்கத்துக்கு ஒப்பாகாது வித்தின் நவசத்தானதை வைத்து குருவில் பணவெடை சேர்த்து எ-று. (கO௪௪)

அமுரியுடன்றேங்கு அதுபத்துக்கொன்றுயிடை
கமுரியுடனூட்டிக் கருங்குகையில்-அமுரியுடன்
கதவானசத்ததற்குக் கருதிமயம்ரேசித்து
பதனங்குகைமுக்கால் பார்.

(இ-ள்.) அமுரியினலரைத்து குகையிலிட்டு சத்தில் ரேசித்து குகைக்கு முக்காலாயிருக்க வேண்டும் எ-று. (கO௪௫)

வேறு-கவி.

ஓடுகுகைசிலைவயல்காடுகளின்தேரமும, நீடுமிருவஞ்சுகரகால்களதின்வாறும், தேடுநிலமண்வலைகல்தோறுமெடுமுடி, கூடுகுகை சந்துபிசைந் தாடும்ரவிசூடே.

(இ ள்.) அந்தக்குகைக்கு சிலைமண்செய்து வெயிலில் உலர்த்த வேண்டும் எ-று. (கO௪௬)

கொல்லனுலையில்லமடக்கமிக வூதுவெல்லலாமிதற்குவித மூன்றுவிசையேற்று, வல்லமையிதற்குவடிவானநவரத்னம்,சொல்லவெளிதோவதனின் சூக்ஷமறிவாரோ.

(இ-ள்.) அதைக் கொல்லனுடைய உலையில் மடக்கி மிகவும் ஊதி மூன்றுவிசையும் இவ்வாறுசெய்து எடுத்துக்கொள்ள வேண்டும் எ-று. (கO௪௭)

வெண்பா.

சூக்ஷமிதுக்கின்னஞ் சுகாநீதமாய்போசனங்கொள்
வாசமலர்வீசும்வச்சிர தேகம்-சூக்ஷமிது
பச்சைமாணிக்கம் பருமணிபோலுண் டையதாய்
வைச்சபொருளாண்டே வயசு.

(இ-ள்.) இதற்குச் சுகாதீதமாய்ப் போஜனங்கொள் இதனால் வஜ்ஜிரதேகமாம் பச்சைமாணிக்கம் பருமணியைப் போல் உண்டையாம் எ-று. (க0௪அ)

பச்சையிரத்தினம் பட்டவெளிப்பிரகாசம்
சத்துளமரசமிதுகா ணுண்டே-சத்ததுவும்
ஆற்றதுகாண்களிம்பு அறுபத்துநாலுமது
சேர்ந்ததுகாணமுரியினால் சீர்.

(இ-ள்.) இந்தப் பச்சை ரத்தினமானது பிரகாச முடையதாகும் இதுவே உபரசமாம் இதனால்சத்தில் களிம்பில்லையாகும் இந்த அறுபத்துநான்கு சரக்குகளும் அமுரியினால் செத்ததாம் எ-று.

வேறு-கவி.

சத்துநவரத்னமிது எத்ததுமுடைத்து, வித்துருநகன்னமது வீரமணிகூட்டி, பெத்ததுமதிப்பிறைபின் விந்துநீரிலாட்டி, ஒத்தொருவிநாடியினி லெத்துகுகையாண்டே.

(இ-ள்.) நவரத்தினங்களின்சத்து என்னமுடைத்தானதாகும் இதற்கு வீரமணிகூட்டி விந்துநீரினால்ஆட்டி ஒருவினாடிசென்றபின் குகையில்வை எ-று. (க0௫௱)

ஊதியெவிகாரமிடவூதவுருகுங்காண், வீதமொருகிண்ணிகுகையேழுமேழுகூட்டி, வாதிகருமுடிகருமண்ணதுவினாலும், தாதுவடிகட்டிவருஞ் சத்துமிதுவாண்டே.

(இ-ள்.) அப்படி ஊதி வெங்காரமிட்டால்உருகும் அதைவடிகட்டினால் சத்து வெளிப்படும் எ-று. (க0௫க)

கிண்ணமதிதில்சூதமொருசேருவதிலூட்டி, வண்ணதிருமேனிரசம்வாங்கியதில்சேர்த்து, கொண்ணைசரக்காமதுவினாலுங் கடையச்சேர்வெண்ணிறமநாகிரச வெண்ணெயதுவாமே.

(இ-ள்.) ஒருகிண்ணத்தில் ஒருசேர் இரசம்விட்டு மேனிரசம் அதில்சேர்த்து கொண்ணையினாலும் கடைய வெண்ணிறமானரச வெண்ணெயாகும் எ-று. (க0௫உ)

வெண்ணெயில்வெங்காரமிட விராகனிடையூட்டி, கண்ணின்மணிபோலவுங்கருங்குகையிலிட்டு, கிண்ணியதுவேகம்படரத்னமிது தங்கம், மண்ணினுடகாவலரை வாள்பகர்வாளாண்டே.

(இ-ள்.) அந்தவெண்ணெயில் வெங்காரம் வராகனெடைகுகையில் வைக்கவேண்டும் எ-று. (கoருங)

மூசையிலடக்கியுமிமேலுங்கரிதாக்கி, ஓசையிடவூதியிடு உண்மைபிதுகண்டாய், வாசமலரம்பிகை வாலாம்பிகையைப் போற்றி வாதரசசூதமணி வாலையருளாண்டே.

(இ-ள்.) ஊதில்மணியாம் அம்பிகையைவணங்கி அவளுடைய அருளினால் எ-று. (கoருச)

இம்மணியும்பாலிலிட எண்விதநீர்வாங்கும், அம்பலர்கடாக்ஷமதுளாயிரத்தெண்மாற்று, சம்புதிருவள்ளுசதா சாம்பவனுமாகில் அம்புவியில்வாதிக ளறிந்துவருகாணேன்.

(இ-ள்.) இந்தமணியைப் பாலிலிட்டால்எண்விதநீரையும்வாங்கும் ஆயிரத்தெட்டுமாற்று ஆகும் இதை உலகத்தில் வாதிகள் அறிவார்கள் எ-று. (கoருரு)

காரியெனும்வங்கங்கருவங்கமதுசேர்தான்,வாரியயச்சட்டியிடுவட்டியதுமூடி, நாரியர்சுரோணிதமதாகுமுருவீரின்,சீரியரசத்தையிடு சேருக்கொருபலமே.

(இ-ள்,) இதில் கருவங்கம் ஒருசேர் அயச்சட்டியில் இட்டு மூடி சேருக்கொருபலம ரசம்விடவேண்டும் எ-று. (கoருசா)

வேறு.

வங்கசலநீருருவியூதிவிடவுருகும் வாங்கும்ரசசூதமணி வாலைரசமாகும், ஓங்குமுனைகுப்பியினுறுத்திரசவாதி ஒகோபுவனங்கள் மயலோகவயமாண்டே, யெங்குமதிதீபவொளிசூழுமுனைமீதில் ஐங்கரன்பதக்கமல செங்கதிர்விலாச, மங்களமிவைதொழிலுரைத்த பரிவேதை தங்கரசவங்கமிது சாக்ஷியறிதாண்டே.

(இ-ள்.) வங்கத்தை உருக்கஉருகும் இதுவேவாலை ரசமாகும், குப்பியில் வைத்து எ-று. (கoருஎ)

வெண்மதிவெண்வங்கரச மேவுமயத்தாடிவித்து ஒருசேருருக வெண்சாரணைமூலி. உண்ணும்ரசமோர்பலமதாகவிடுவீர்காண் ஓடுருகஆடிசலமோடியதுபாயும், கண்ணும்ரசவாலையது சூதமணிபேமோடன்னுவிடுஞ்சுத்தசலவெள்வங்கநீருனும், கொன்னுவிடுமே

சூளிகைகோடி பரிவேதை குப்பியிலடக்கிரசங் கொண்டிடவுஞ் செய்யே.

(இ-ள்.) வெள்வங்கத்தை ஒருசேர்உருக்கி வெள்ளைச்சாறணை ரசத்தை ஒவ்வொருபலமாகவிட்டு ஓடிப்பாய்ந்தால் சூதமணியாகும் அதினால் கோடிவேதை யாடலாம் எ-று. (௧0௫அ)

இந்தரசமாமதுவுமேமரசமாகும், அந்தரசதேய்வுஇடையயம திருபத்தும், இந்தகுகைதன்னிலதுநீரதுரோலாகில்,அந்தமதிவங்கமோ வராகனிடையூட்டே.

(இ-ள்) இந்தரசமணியானது ஏமரசமாம் வங்கத்தை நீர்எடுத்து ஒருவராகனெடை சேர்ப்பாய் எ-று. (௧0௫௯)

ஊட்டியுமியூதிபெடுபத்தரையுமாகும் ஓடுமிரசிதமெனுமொண்றரையுமாகும், காட்டியவெள்வங்கரச முப்பதொருவஞ்சும் காட்டையில் வராகனிடைகனகமதுவாண்டே, எட்டினில்விதிப்பதனுபோகியருளாலும் எட்டியிதுபத்தரையுமேருமயமாகும், நீட்டிடுங்காரியசலசூதரசவேதை நாட்டினிலுமுண்டுரச நன்பரிசப்புகையே.

(இ-ள்.) அப்படிசேர்த்து உமிநெருப்பில் ஊதி எடுத்தால் பத்தரைமாற்றும் இதில் மற்றலோகங்கள் சேர்க்குமளவு வெள்ளிஒன்றரையும் வெள்வங்கம் முப்பதும் ரசம்ஐந்தும், கனகம் ஒன்றும் வராகனெடை கணக்காகக்கூட்டவேண்டும் இவை சாஸ்திரங்களில் சொல்லியமுறைகளேயாகும் அன்றிக்காரியம் சூதம் சம்பந்தப்பட்ட வேதைகளும் உலகத்தில் உண்டு எ-று. (௧0௬0)

புகைக்குஉமிசூதரசவங்கமிதுகோகுபொன்மயம் வராகனிடைபோடுங்கரு..., துலைநகருப்பதினையிரமணங்குஇடைதேய்வு சூக்ஷமிதுசூதமிதுசூதமிநுசொன்னேன், நகைக்கரசவாதமிதுக்கேவலதுசெய்யும்ராஜர்களுநாடுமகிழ்நாமிவர்க்கவைத்த,வகைக்குநவலோகபரிதங்கமயமாகும் புகைக்குநிகருண்டோசெய பூபதிகாணுண்டே

(இ-ள்.) இது சூதரசவங்கமாகும், பொன்மயமுமாகும் இதுவேவெகு சூக்ஷமாம இதுவேஉயர்ந்த ரசவாதமாகும் இதுவே பூபதியாம் ஆகையால் இதற்கு ஒப்பானதொன்றுமில்லை எ-று.

வேறு.

கிண்ணமதிலன்னமொடுஆவினமிர்தங்கள், அன்னமருசுவையுமொடுஅதிதவகையெல்லாம்இன்னவகையுள்ளசடமென்றனதிறமாகும் வர்னபரிதங்கவொளி சொன்னேன்தொழிலண்டே...

(இ-ள்.) கிண்ணமதில் அன்னமும் ஆவின்பாலும் அறுசுவைகளும் சேர்ந்து புசித்த சரீரமானது தங்கஒளியாகும் எ-று.

அமுரியிதிலுண்ணசடமாக்கையழியாது, அமிர்தவொளிமதியுங்கதிர்வழலையதினாலும், அமிர்தரசபானமுறுகாயம்பெலமாகும், அமுரிரவிமதிதரச வேதையொடுவாமே.

(இ-ள்.) அமுரியில் தின்ன சரீரம் அழியாது, மதி, வழலைமுதலியவைகளும் அமிர்தரசபானத்தினால் உறுதியாம் எ-று.

கற்பமதிலுண்ணசடசொற்பமதுவல்ல, விற்பகவினோதரசபானமதினாலும், உற்பகநரம்புதசநாடிவலுவாகும், இப்பொருளறிந்தவர்கள் கற்பனைசெய்வாரே.

(இ-ள்.) கற்பமுண்ட சரீரம் அற்பமல்ல, வினோதரச பானத்தினாலும் தசநாடிகளும்வலிவாம் இதையுணர்ந்தவர்கள் கற்பசாதனை செய்வார்கள் எ-று. (௧௦௬௪)

அக்கினிமிகுந்துவளர்ந்தமதுகோடி, திக்கினில்சித்தாதிகளுஞ் செய்கையுணர்வாரோ, கைக்கனியிதற்குமணி மந்திரமறிந்தால், அக்கரையுந்தாண்டியனுக்கிரகம்பெறுவாரே.

(இ-ள்.) அக்கினிமிகுந்து வளர்ந்தவைகள்கோடி சர்வதிக்குகளிலுமுள்ள சித்தர்களெல்லாம் செய்கையை உணரமாட்டார்கள் இதின்மணிமந்திரத்தை யுள்ளபடி யுணர்ந்தால் அந்தக் கரையைக் கடந்து அனுக்கிரகத்தை யடைவார்கள் எ-று. (௧௦௬௫)

முப்புவுமறிந்துவுரை தப்புமோகைபாகம், இப்படியுடற்குறியுஞ்செப்பிடுஞ்சாஸ்திரம், சொற்படியுரைத்ததிரு வள்ளுவனுணர்ந்த இப்புவியிலும்மறிவரெந்தனுரையாண்டே.

(இ-ள்.) முப்புவினை உணர்ந்தும் கைபாகம் தப்பாகாது இப்படியெல்லாம் சரீரக்குறிப்புகளை யெல்லாஞ் சாஸ்திரஞ் சொல்லாநிற்கும் என்னுரையை இவ்வுலகத்தார்களெல்லாம் உணர்வார்கள்.

வேறு-கவி.

ஆடலாங்கடலுப்புவினால்ரசம்காடெலாமுடல்காந்தமலரினால் ஓடெலாம்ரசவாதிகள்தேடினும், வீடெலாம்வெளி வேதைக்குருவதே.

(இ-ள்.) கடலுப்பினால் ரசவேதை செய்தாடலாம் காடெல்லாம் உண்டாயிருக்கின்ற மலரினால் ஓட்டுகளெல்லாம்வறிகள்தேடினும் வீடுகளிலெல்லாம் வேதைக்குரு இருக்கின்றன எ-று.

உப்பென்றுருவானஉப்பேதுகாண், செப்பினார்தெட்சணுய னருளினால், கைப்புமாறிக்கடல்நுரைகட்டியும், வைப்புகாண்கடல் வாரிக்கல்லுப்பதே.

(இ-ள்.) உப்பென்றுசொன்னால் தெட்சணுயன் சொன்னதே உப்பாகும் அதனால் கைப்பானது மாறிக்கடனுரையின் கட்டியே சமுத்திரக்கல்லுப்பாம் எ-று. (௩௦௬௮)

காந்தமாமலர்காட்டினிலுப்புகாண், ஆய்ந்துபார்க்க அடிமூல சுன்னமாம், மாய்ந்துமாய்ந்துவரும்புளிமாறினால், தோய்ந்துஅப்ப வுந்தோய்ந்ததுசொக்குமே.

(இ-ள்.) காந்தமாமலர் என்பது காட்டிலுள்ள உப்பாகும் அதை ஆராய்ந்து பார்த்தால் அடிமூலம்சுன்னமாம் புளிப்புமாறி னால் அதுவும்கெட்டுவரும் அப்புவில் தோய்ந்துசொக்கும் எ-று.

அமுரியுப்புமப்புவுங்கடசலம், அமுரியுப்புமடிமூலம்புக்கினால் அமுரியுப்புமம் மண்ணதில்பூர்க்குமாம் அமுரிமூல மதிகசுன்னங் களே.

(இ-ள்.) அமுரிஉப்பும், அப்புவும் கடல்சலமாம் அவைகளின் அடிமூலத்திற் புகுந்தால் அமுரியுப்பும் மண்ணிற் பூக்கும் பிறகு சுண்ணமாம் எ-று. (௩௦௭௰)

காந்தமாமலர்கதிரெனுஞ்சூரியன், ஆய்ந்துபாருமதுபுளிமண் ணுதான், சேர்ந்துதான்கடலுப்புவுங்கூடினால், ஈந்துதானுமிது நிக ரில்லையே.

(இ-ள்.) காந்தமலர் என்பது சூரியனும் ஆராய்ந்துபார்த்தால் அதுபுளியானாலும் மண்ணினாலும் சேர்ந்தால் அத்துடன் கடல் உப்புகூடினால் இதற்கு வேறேரொப்பில்லை எ-று. (௩௦௭௧)

காடுகாடுகாடென்றுலறிவரோ, காடுதான்கருகண்ட மகத்து கள் வீடுவீடுவீடென்றுன்னுக்குள்ளோ நாடுநாடெலாம்நாடித்திரி வதே.

(இ-ள்.) காடு, காடு, என்றுசொன்னால் யாவரும் உணரமாட் டார்கள் காட்டின்மர்மத்தைக் கண்ட மகத்துக்கள் வீடு, வீடென் றால் உனக்குள்ளேயாம் அதைவெளியில் திரிந்துபார்ப்பதில் பய னில்லை எ-று. (௩௦௭௨)

வறுமையேன்வரும்வாதிகளுங்களுக், கருமையில்லைகாண்கல் லுப்பறிந்ததால், உருமையாயருவானக் கல்லுப்புதான், சிறுமை யேன்வருஞ் சித்தர்சொன்னார்களே.

(இ-ள்) வாதிகாள் உங்களுக்கு வறுமை என்வரும்? கல்லுப் புணர்ந்தால் கருவில்லை கல்லுப்பினால் சிறுமைவராது எ-று.

வேறு-கவி.

இடையின்மேவுகலைசுழிபிலங்குமதியிரவிசூழுமணிமுடியினில், விடபரங்கிரியிலமிர்தஞான சுகவெளிகடந்துஒளிமேவியான், சடைமுடிமகுடமலர்பொழிந்தருளில்தற்பரத்தினடிதொழுதுயான், நிட்டராஜயோகவரிலகுண்டலியி னிருவிதாளடியைபணிகுவாம்.

(இ-ள்.) இடைகலை, பிங்கலை, சுழிமுனை இவைகள்சூழும் உச்சியில் விளங்குகின்ற ஞானசுகாயத்தைக் கடந்து சடைமுடியின் கண் அருள்பொழிந்து தொழுது நிட்டராஜயோக நிலையில் முன்னோனடியை வணங்குவாம் எ-று (௩௱௪)

மகிதலங்கருவூரிலகுநாடியல்புகழ் வாரிசூழ்மதுர வேணியில், அநிலமேவுகதிசந்திரபுஷ்கரணிஅமிர்தமாமதிதன்ரவிபதம், பகிரதிகள்திருநடன பொற்கமலபாதபங்கயமுநாடியான், கெவுனசூக்ஷசடாதரமேவிவளர்கெதியில் நின்றுதொழுதேத்துவாம

(இ-ள்.) உலகின்கண் கருவூரில் சமுத்திரஞ்சூழ்ந்ததடமதுரமான வேணியின்கண் சந்திரபுஷ்கரணியாய்கின்ற ரவிபாதத்தை விரும்பி சடாதார கெதியிலிருந்து தொழுது துதிப்போம் எ-று. (௩௱௫)

மருவுஞானவொளிமதிவிளங்குமணி மலர்முடிக்கமலமீதினில் கருவூர்நாடுதிருநடனகாயபுரிகருணைஞானதமிழ்பொழியவும், திருவருளமிர்த ஞானவெட்டிதெளிந்தோதியானு மிவைகூறுவாம, இருள்விளங்குமனுக்கிரகசோதியருளொன்னாலின்மொழியையோதுவாம்.

(இ-ள்.) ஞானதேஜஸையுடைய மணிமலர்போன்ற முடித்தாமரையின்மேல் கருவூர்நாடாகிய காயாபுரியில் கருணைஞானதமிழ் பொழியவும், இருளானது விளங்குகின்ற கிரகசோதியை நான் சொல்லுகிறேன் எ-று. (௩௱௬)

பொதிகைமேவுமகத்தியராலெனது போதஞானதமிழ்வாக்கியம், மதிவிளங்கும்ரவிசுடர்பதம்ரவி மலர்பொழிந்துதொழுதோதினேன், விதியிருந்துமதிபாலுணர்ந்துவிழி சுழியறிந்துதமிழ் பொழியவும்,பதியஞானபரிபூரணத்தினடி பாதபொற்கமலம்பணிகுவாம்.

(இ-ள்.) அகத்தியரால் போத ஞானத்தமிழ் வாக்கியமாக சுடர்பாதத்தை வணங்கி மலர்பொழிந்து தொழுது சொன்னேன் ஆனால் பரிபூரணத்தின் பாதப்போதைப் பணிகுவாம் எ-று.

சண்டமாருதக்குழம்பையானருள சனகனுதிபல முனிவரும் அண்டர்கோனருள் பதினெண்போகல் மகிமாயிரத் தைந்துநூற தும், தெண்டிரையுங்கடல்மேருதோறுஞ்சிவஞான சித்தர்கள்புகழ் ந்திட, கண்டிரோஜெகதிமானுகாணுடலில் காயசித்தி குழம்பாண் டையே.

(இ-ள்.) சண்டமாருதக்குழம்பை நான்சொல்ல சனகன் முத லிய பலமுனிவர்களும் பதினெண்பேர் சித்தர்களும் சிவஞானசித் தர்களும்புகழ இதுகாயசித்தி குழம்பாகும் எ-று. (கoஎஅ)

தன்னைத்தானறியசண்டமாருதமுஞ் சாம்புவனருளுஞ்சார்புவி, மன்னர்மண்டலிகராஜபூபதிகள் மகிதலத்தினிலும்வாழ்பவா, உன் னுங்கற்பமதுக்கொன்றுகோடிபலஊழ்வினைக்குமிதுஅவிழ்தமாம் வென்றிடும்வினையை வேதையாமிதனில வெருபேய்ப்பிணி நோய் விடுவதே.

(இ-ள்.) தன்னைத்தான் அறிய சண்டமாருதமுஞ் சாம்புவன் அருளும் சார்பும் ராஜராஜர்கள் மகிழ அநேகஊழ்வினைகளுக்கெல் லாம் ஔஷதமாம இதனல் வெருபேய்ப்பிணி விடுவனவாகும்.

மூலசத்தியிதில்மும்மலங்களறு முன்னோர்சொல்லுங்கரிசாலை தான், வாலையாகும்ரசவாதமும்வருதல் வானோர்சொல்வதும் வல் லாரையேன், காலைமாலையதுங் காரசாரமுணர் காயசித்தியாங்கற்ப மாம்சோலைமலர் விலாசவாசமெனுசூக்ஷசூக்ஷ சடாதாரமே.

(இ-ள்.) இதனல் மும்மலங்களும் நீங்கும் முன்னோர்களாற் சொல்லப்பட்ட கரிசாலையே வாலையாகும், ரசவாதம் வருவதும், தேவர்கள் சொல்வதும் வல்லாரையாகும் காலைமாலைகளில் கார சாரமுணர்ந்தால் காயசித்தியாகின்ற கற்பமாகும் இதுவே சூக்ஷ சூக்ஷமாம் எ-று (கoஅ௰)

சண்டமாருதக்குழம்பு-தரு.

சண்டமாருதக்குழம்பிதுகாணுமென்றுண்டே-பிர
சண்டதேகமொழிந்தேவச்சிரதேகமாநன்றே.

(இ-ள்.) இது சண்டமாருதக்குழம்பாகும் இதுஇத்தேகத்தை வஜ்ஜிரதேகமாக்கும் எ-று.

அண்டரண்டம்வானத்தளாவியமாமலைசூழும்-வெளி-அற்புத சந்திரபுஷ்கரணிதீர்த்தம்வாழும்-கதிர், மண்டலமண்டரண்டங்களு லாவியவாசி-மதி-மண்டலஞ்சூடியமாமலர்ஞானுபதேசி-சுழி தின் றிலகுந்தென்பொதிகைவளர்தெக்ஷணையன் செகம்நிலகும்புகழ்

ச்சித்துபூசிக்குநேயன்-அருள், கண்டுபொற்கமலபாதபங்கயத்தை நாடி-பிரசண்டமாருதக்குழம்பையருளுவேன்தேடி. சண்

(இ-ள்.) அகஸ்தியர் முதலிய பெரியோர்களுடைய திருவடித் தாமரைகளை விரும்பி பிரசண்டமாருதக் குழம்பை யான்பாடுவேன் எ-று. (௧௦அ௧)

பரமண்டமெண்டரண்டங்களும் பேதித்துப்போடும் ராமபாணத்துக்குப்பின்னிளைத்துப்போகாமலூஞ்சாடும்-சர, மண்டலங்கட்டிய றுத்திடலாந்திவ்வியஅஸ்திரம்-சார-காரத்திலுலறுத்து நால் வருமெம்மாத்திரம்-சுர, பாணத்திலுல்மேகந் நிவுதிபாந்திரமேகும் சேத்துமங்தொண்ணூற்றாறுமொருபக்ஷத்தில்நீறியும்வேகும் கரை, காணப்பிரசண்டத்தைச் சொல்லவென்றால் வெள்ளேடில்லை - கர்ம நோய்கள்துலைந்து வச்சிரதேகமாங்கல்லே. சண்ட

(இ-ள்.) அண்டரண்டங்களைப் பேதிக்கும், ராமபாணத்துக்கு பின்னிடையாது வெகு திவ்வியாஸ்திரமாம் அதினால் அறுபத்து நான்கு சரக்குகளும் எவ்வளவு? மேகம் ஓடிப்போம், ௯௬ - சேத்மம் கறு நாளினும். போகும், தேகம் வஜ்ஜிரமாகும் எ-று.

வெறண்டுங்காண்விளைஊழிபறந்திடுந்தங்கம்-மேகம் -இருபத்தொன்றுந்துசிபோல்பறந்திடுஞ்சிங்கம்-வருங், கண்டசூலைக்ஷயகாச்மரோசிகங்குன்மம் - குத்தல் - மண்டையிடிமதுமேகமகோதரந் துன்பம் வாய்வு, அண்டவாதமரையாப்புகர்ணிகமும் வயிறுநோய் நெஞ்சுதொண்டைவலி தொடைவாழைபவுத்திரஞ்சுரநோய்புகை, கொண்டுபுண்புரைகளண்டப்புற்றும் யோனிப்புற்றும்-குடல்-வாதங்கூனிவாதஞ்சந்துவாதங்கன்னப்புற்றும். சண்ட

(இ-ள்.) ஊழ்வினைபறக்கும், மேகம் உக-ம், சூலை, க்ஷயம், காசம், அரோசகம், குன்மம், குத்தல், மண்டைஇடி, மதுமேகம், மகோதரம், வாயு, அண்டவாதம், அரையாப்பு, வயிற்றுநோய், நெஞ்சுவலி, தொண்டைவலி, தொடைவாழை, பவுத்திரம், சுரம், புண்புரைகள், அண்டப்புற்று, யோனிப்புற்று, குடல்வாதம், கூனிவாதம், சந்துவாதம், கன்னப்புற்று இவைகளெல்லாம் சொஸ்தமாகும் எ-று. (௧௦அ௫)

சூதங்கெந்தியரிதாரமனோசிலைபூரம்-கெவுரி-சூஸ்திரநாபியிருவிகிறுவிஷம்லிங்கம்பத்தும்,சோதிபீரைஞ்சுவராகனிடைகொண்டு சிலைகயிறு - தொங்கலிட்டுப்பாண்டந் தோளாந்திரமெனும்வாலை-அமுரிவிதநாலுக்கொன்று மூலப்புளிபெனுங்காரஞ் சீனம், வெங்

காரம் பூநீர்வெடியுப்புதேனுப்புச்சாரம்-பான-வேலைதஉப்பு அப்பு விந்துப்புடன்மேனியுருவி வளையில், மேவுமீரஞ்சுவிசிதமறிந்தருள போற்றே. சண்ட

(இ-ள்.) ரசம், கந்தகம், அரிதாரம், மனோசிலை, பூரம், கௌரி சூத்திரநாபி, இருவி, நிர்விஷம், லிங்கப்புற்று, பலகரை இவைகள் வகைக்குபத்து வராகனெடை கொண்டு சிலையில்முடிந்து பாண்டத்தில் தோளாந்திரமாய்விட்டுஅமுரிவிட்டு மூலப்புளியென்கிறவெங்காரம், படிகாரம், சீனவெங்காரம், பூநீறு வெடியுப்பு, தேனுப்பு, சாரம், இந்துப்பு, மேனிபுப்பு நாயுருவிஉப்பு, வளையலுப்பு இந்தப் பத்தும் எ-று. (க
0அ)

லவணமீரஞ்சுமிடைசரக்கவ்விடைதூக்கி-சாரங் கவனத்துடன காரநீர்தெளிந்தேசன்னீர் தாக்கி-இன,மவுனத்துடன்காரசாரத்தில் நீறதில்மூட்டி-உப்பு-லவணத்தையும்பொடிசெய்து நாவிந்திலூட்டி பாகங்கெவுனந்திலும்பாண்டங்கேசரமாகவுஞ்சாற்றி வாலைபுவனை யெனும்பதம்போற்றித்தோளாந்திரமேற்றிக் - கனல், கவனமதாக நீர்தொக்கிடவன்னியைத்தாழ்த்தி-சோதி - கமலப்பிரகாச ஒளிவு வரும்பதமாற்றி. ப்

(இ-ள்.) ஒவ்வொன்று பத்துவராகனெடை எடுத்துப் பொடித்து அப்பாண்டத்தில் அமுரியில்போட்டு அடுப்பேற்றி எரித்துஞ் சலம்வரளுஞ் சமயத்தில் அடுப்புத்தீயைக் குறைத்து எ-று. ம்

பார்த்துவரும்பதம்பாச்சிப்பீங்கானதில்காரம்-பின்னுங்-காரம் த்துக்கதிரவன்வேகம்படஓருவாரம் - இதை, சேர்த்துவைத்திடுஞ்க சர்க்கரையைப்போல்வரும்பாகம் மருந் தேத்துந் தோளாந்திரமெ - டுத்துமேவிடும்வேகம்-ரசம், வேற்றுமையில்லாமிகவுமேன்மேல்சுற்றிப்பாரும் - மெழு - கேத்துஞ்சரக்கதிதங்களைத்துமேதேறும். அருள்,சாற்றிமதிமலர்சற்குருமாமுனிபாதம்-வகைநீற்றுஞ் சரக்கு நிகரிதுக்குத்தொந்தபேதம்-புகழ். சண்ட

(இ-ள்.) அந்தச்சமயத்தில் அக்குழம்பைப்பீங்கானில்வைத்து ஒருவாரம் வரைக்கும் சூரியனில்வைத்தால் அது சர்க்கரையைப் போல்வரும் அந்தச்சமயத்தில் தோளாந்திரத்தை எடுத்து இதற்குச் சேர்க்கவேண்டிய சரக்குகள் எ-று. (௩0அகா)

வாதமடக்கியுந்திப்பிலிசுக்குடனேமம் - வளர்-சீரகம்ரெண்டு அரத்தைப்பறங்கிக்குரோசானி-கடுகு, வீரம்வராகனிடை பொன் னிறமதாய்மேவும்-கனல்-நீதமநாய்பநயாக்கராக்கிதைவெதுப்பும்

பின்பு, பேதம்வராமல்பொடி பிலக்கநாட்டியிடித்து-ஆண்டே-சே தம்வராதெந்தன்செய்பதங்கள்வரமுடித்து-மேலும், நாதவிந்துகரு வூர்வள்நாட்டினிலிலகும்-வேதஞானமொருநன்னூலாயிரத் தைந் நூறுமாய்ந்தோ-ரிது. சண்ட

(இ-ள்.) ஆமணக்கு, திப்பிலி, சுக்கு, ஓமம், கருஞ்சீரகம், நற் சீரகம், சிற்றரத்தை பறங்கிச்சக்கை, குரோசாணிஓமம் கடுகு,ஒவ் வொன்றும் ஒவ்வொரு வராகனெடை நிறுத்துப் பொன்வறலாய் செய்து சூரணஞ்செய்து எ-று. (௩௰௮௭)

அதுமதுரங்கோஷ்டங் கடுகரோகணிகடுக்காய்-சிங்கி-அக்கர காரமாவாரையுங்காக்கணஞ்சிவதை-பிதுர், துதிபீரஞ்சுமெடுத்துப் பொன்வறுப்பாய்தொடுத்துப்-பொடி-விதித்துவடித்துகஸ்தூரிகுங் குமமங்காயம் பச்சை, மதித்திடுங்குரோசனைவகையிதுமஞ்சு மகிழ் வதிகமொன்றுவராகனிடை வகைக்கொன்றனங் கதித்திடுமுன் போல்பொடியதுஞ்செய்துபாகம் பதங்-கச்சூருந்திராட்சிபனைவட் டுந்தேங்காயின்கரியும்-இவை. சண்ட

(இ-ள்.) அதிமதுரம், கோஷ்டம், கடுகுரோகணி, கடுக்காய், கடுக்காய்ப்பூ அக்கராகாரம், ஆவாரைசமூலம், காக்கட்டாம்வேர் சிவதை, பீதரோகணி இப்பத்தும் எடுத்துபொன்வறலாய்வறுத்து சூரணஞ்செய்து கஸ்தூரி, குங்குமப்பூ, பச்சைக்கர்ப்பூரம், கோ ரோசனம், இவ்வைந்தும் ஒவ்வொருவராக னெடைபொடிசெய்து சூர்ச்சூர், திராட்சை, தேங்காய்கறியும் சரியாய்ச்சேர்த்து எ-று.

பொருந்துமம்பிகைபொற்கமலபதம்பணிந்து-வாலம் மருந் ததைச்சுத்திவசப்படுத்தி அவ்வகையில் பதம், இருந்தமருந்து மிவ் விடையைம்பதுவராகன்-நெடுந்துருந்தமாகத் தொடுத்து சற்குரு வைத்தொழுது சுகம், விருந்தமுன்மருந்தருந்திடு நூறுமாச்சுபற் பம் விராகனிடையசெம்புவெண்ணிறமாகவும் பாச்சு குரு புருவத் தினடுசுழிமுனைமலர்சொரிந்து-புகல், புனிதமாமெனுங்குளிக்கல்ல தனில் பரிந்துசெய்கை. சண்ட

(இ-ள்.) அம்பிகையின் பாதத்தை வணங்கி சுத்திசெய்தவா லம் ஐம்பதுவராகனெடை சேர்த்து குருவைவணங்கி இவைகளெ ல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு எ-று. (௩௰௮௯)

கோமட்டிமாதளம்பழத்ததின்ரசம்விடுத்து-இணைகுறுக்கிடா மலுமூன்றுநாளாட்டிமயனம்-மெரி, யாமணக்கின்வித்திலதயிலமா மதுமிறக்கி-அருள்-அத்தயிலம்விடும்பதமாயாட்டிடுமுன்போல்-இ லைவழுமணக்குங்கருநொச்சிவெள்ளறுகுதுளசிபுனல்களாடு பொற்

கையான்வல்லாரைகரிசாலைபிரமி-சங்கும்-ஏமரசமெறிந் தெலுமிச்சம்பழரசந்தான்-இதைப்பிணைவிடாமல்வகைக்கு மூன்றுதினமருவி,

(இ-ள்.) புளிப்புமாதுளம் பழரசம்விட்டு ௩-நாள் அரைத்து, ஆமணக்கின் தயிலத்திலும் ௩ நாள் அரைத்து, கருநொச்சி, வெள்ளறுகு, துளசி, புனல் தண்டு பொற்கையான், வல்லாரை, கரிசலாங்கண்ணி, பிரம, சங்கு, எலுமிச்சம் பழச்சாறு இவைகளால் ஒவ்வொன்றுக்கு மும்மூன்றுநாள் அரைத்து எ-று. (௧௦௯௰)

வகைக்கொன்றவித மூன்றுநாளிராதுமூலி-செய்கை-வகையதாயுணர்முப்பத்தைந்துநாளாட்டியும்வழித்து-இவை, துகைகணைக் கறிந்தொருமனதொன்றுசுகமாய்-பின்னுந்-துன்பம்வராமலு மின்பசையோகவைராக்கியம்-மயல், நகைநகைத்துமினுக்கிக்குலுக்கள் வாசம்-மேலும் - நாடிநாடிடாமலும்ராசயோகந்தனில் நேசம்குரு உமைபிதற்கு வாலாம்பிகைபாதமென்றுடே-தொழு,துள்ளங் களிந்துடன்வள்ளலெனும்பதம்போற்றி. சண்ட

(இ-ள்.) இப்படி ௩௫-நாளரைத்து குருமுதலானோர் திருவடிகளை உண்மையாய் உள்ளபடிவணங்கித் தோத்திரஞ்செய்து எ-று.

சண்டமாருதக்குழம்பை வழித்துச்சிமிளில்-ஏனஞ் சார்வாய் வெகுபந்தனங்களடைவாய்நெற்பாண்டம்-மறை, மண்டலம்வைத்துவாலாம்பிகைபொற்பதம்பணிந்து-வரும்வல்வினையூழிமகாசுரஞ் சன்னிகள்மாந்தம் பாலை-தண்டிடுமுக்கல்பிரளியுமள்ளுட னிசிவும் மிக, கக்கல்கறுத்தகிரகதோஷமுங்கவுசி-வலி-நின்றிடுமூர்ச்சையும் விக்கலுமேப்பமுமிரைச்சல்-உஷ்ணம்-வெதுப்புமதுப்புங் காக்கவலியதுங்கொறுக்கை. சண்ட

(இ-ள்.) மேற்படியாக அரைத்தசண்டமாருதக்குழம்பைவழித்து பதனம்பண்ணி நெற்சமாதிவைத்து அரைமண்டலம் சென்றபின் வாலாம்பிகையைப் பணிந்து வல்வினையால்வரும், சுரம், சந்நிமாந்தம், முக்கல், பிரளி, அள்ளு, இசிவு,கக்கல் கிரகதோஷம்,கவிசை, வலி, மூர்ச்சை, விக்கல்ஏப்பம், இரைச்சல்உஷ்ணம்,வெதுப்பு காக்கைவலி, கொறுக்கைவலி எ-று. (௧௦௯௨)

குமரகண்டவலியக்கினிமந்தமுங்கொலைநோய்-குடிகெடுக்கும் வாய்விறல்மூடிக்குக்கடிப்புப்பிடிப்பும்-இவை-திமிருடன் தசவாயுமெழுப்பிடுங்குழம்பு-கிண்டி,திப்பிலிசுக்குடன்மிளகுந்தேனைவிட்டரைத்து-அதில்சமரசமெனுங்கூட்டிக்கழஞ்சிப் பிரமாணம் உண்டைதனையதுக்குள்குழம்பிட்டுத்தாக்கிடுநோய்க்குரவி-அவிழ்தமிது

வெனுங் காலையில்நோயதக்கருது-மிக்க, அவிழ்தமூட்டி-முன்னம் வேம்புடன்பத்திரி. சண்ட

(இ-ள்.) குமரகண்டவலி, அக்கினிமாந்தியம், கொலைநோய், வாதபபிடிப்பு, திமிர்தசவாயு, இவைகளுக்கு சுக்கு, திப்பிலி, மிளகைத் தேன்விட்டரைத்து கெச்சைக்கா யளவெடுத்து அதற்குள் குழம்பைவைத்து காலையில் கொடுத்து, வேப்பிலைகருக்கிக் காஷாயஞ்செய்து மாலையில் கொடுக்கவும் எ-று. (௧௰௯)

அகாரஉகாரஒங்காரமூன்றெழுத்தினாலு மகமாகும்பிணிநோயகன்றுவிடும்படி-அதமாய்,சிகாரவகாரநகாரமவ்வெழுத்தும்-செபிதெளிந்துடநூற்றியெட்டுஓதிடுமுபமாய், விகாரமதாகியநோய்கள் பறந்திடுஞ்சுகமாய்-விதி-மேவிஅவிழ்தம்விளங்கிடுமெஞ்சுநாளகமாய்காலை சுகாதிதசுகமொருவேளை சணைக்காய்சொன்னேம்தொழிலாளியாலல் மணிமந்திரமெனுமவிழ்தம். சண்ட

(இ-ள்.) அகர, உகர, ஓங்காரம்என்னும் மூன்றட்சரங்களினாலும் நோய்கள் நீங்கிவிடும்படி சிகார, வகாரங்களைச் செபித்துக் கொடுக்க சர்வநோய்களும் சுகமாய்ப்பறந்தோடும், இம்மருந்தை ரு-நாள் காலை, மாத்திரம் ஒருகணக்காகச் சாபபிடவேண்டும்தொழிலாளியினால் மணி, மந்திர, ஔஷதம் கைகூடும் எ-று.

பிரசண்டமாருதபேதாபேதம் பிறித்தாண்டே - சொல்லும்-பெரியோர்வரப்பிரசாதகத்தாலிதுகண்டே-பிணி-குறைவாராதுகாண்பத்தியமுமிச்சாபத்தியம்-குலைகுலைந்துநோய்கள்போங் குணவல்லியமிந்தகுழம்பு-பின்புதிரையில்லாமலுஞ்சுக்குடன்திப்பிலி மிளகும்வென்னீர், திறுசதைக்கொண்டுசூரசமாமதில் தேனுங்கிண்டி-பரவசமிதுஅவிழ்தமுங்கொண்டுபாச்சி பரி பூரணமாகவுங் காலையிலஞ்சுநாள்முன்போலருள், சண்ட

(இ-ள்.) பிரசண்டமாருதமானதின் பேதாபேதத்தைப் பெரியோர்களின் வரபிரசாதத்தினால் சொன்னேன் இந்த மருந்தைத் தின்று இச்சாபத்தியங்காக்கவேண்டியது அப்படியிருந்தால் நோய்கள்நீங்கும் இதை சுக்கு, மிளகு, திப்பிலி இவைகளைச்சூரசஞ்செய்து தேன்விட்டு அதிற்கொடுக்க ரு - நாளில் காலையில் சாப்பிடவேண்டும் எ-று. (௧௱௰)

-வாலப்பருவம்வருமளவில்வந்தகுன்மம்-மதி-மயங்கியுங் கடல்புக்கிடும்பாரிதுபரிகைக்ஷ-பின்னும்,யாலைப்பருவமது நாலும்பத்துடன்சென்றால்-வஸ்து-பானத்திலுங்குழம்பெடுத்துக் கிண்டியிட்டுபிடி இன்பச், சோலைமறப்புடைகொகவித்தேனதில் பாச்சி இந்த-

சூலைபதினெட்டுக்குன்மமெட்டும்பறந்தோடும்சொல்லும், வேலைவி
ழிமடமாதுசூத்கத்திறேயைக்குமிதுவிடுமேகப் பாகமேதினியோர்க
ளுக்காமே. சண்ட

(இ-ள்.) அதனுல் குன்மம் நிவர்த்தியாகும், இந்தக்குழம்பை
சாருய அநுபானத்திற் கொடுத்தாலும் கொசுத்தேனிற் கொடுத்
தாலும் சூலைகுணமாம் சூதகநோய்க்கு எ-று. (௧௦௬௬)

கொச்சகம்.

வேல்பொழியுமாதுவின்ப ரசவாலையருள்
பாலுமெனக்கூட்டிமதி பானமிர்தமேயொழிய
ஞாலமெனுஞானவெட்டி நன்னூல்விதியாய்விளங்கும்
ஓலமிடுமம்பிகையை யுள்ளுணர்ந்துகண்டேனே.

(இ-ள்.) இன்பரசவாலாம்பிகையின் அருள்கொண்டு பாலில்
அனுமானித்துக் கொடுக்கவேண்டியது. இவைகளெல்லாம் ஞான
வெட்டியான் என்னும் நல்லநூலில் சொன்னபடி யுணர்ந்து நான்
கண்டுகொண்டேன் எ-று. (௧௦௬௭)

தேனருவிபாய்ந்துசலந் தேங்குமடையோங்கிவளர்
வான்பொழியுநாதவிந்து மார்க்கமிந்தவாறதனுல்
நான்மகிழ்ந்துநோய்தனக்கு நாட்டிலுள்ளோர்க்குமிது
ஞானபண்டிதர்க்குவிள்ளும் ஞாயமிலைநக்காண்கிலரே.

(இ-ள்.) தேனருவியானது பாய்ந்து சலந்தேங்கி அதினுல்
மடையானது பிறந்துவளர்ந்து பொழிகின்ற நாதவிந்துக்களின்
மார்க்கம் இந்நூலிற் சொன்னபடியால் நான்மகிழ்ந்து நாட்டிலு
ள்ளயாவர்க்கும் ஞானபண்டிதாகளுக்கும் சொல்லும் ஞாயம் இது
வாகும் இதை எல்லோரும் உணரமாட்டார்கள் எ-று. (௧௦௬௮)

கலித்துறை.

பதினறுகலைமதிரவிசூழும் பாடலையான்
விதிவாறின்மூல விவேகத்தினுலறி விட்டகுறை
அதிவீரஞான திருவள்ளுவன்மொழி யவனிதனில்
நிதிமேவியதன மளித்தாலுமிந்நூல் நிகழ்விலரே.

(இ-ள்.) பதினறுகலைகளையுடைய சந்திர, சூரியர்கள் சூழும்
பாடலை நான் நல்லவிவேகத்தினுலும் விட்டகுறையினுலும் திருவ
ள்ளுவன்சொல்ல, சொன்னதாகும் கோடிதனங் கொடுத்தாலும்
இந்நூலானது யாவருக்கும் பலன்படாது எ-று. (௧௦௬௯)

கற்றதுஞானக் கருத்தறிந்தோர்கள்கமலபதம்
பெற்றதுஞசித்திப் பேரின்பக்கல்வி பிறவாமுத்தி
வைத்தாரும்வெற்றி மருவியவர்பதம் வணங்கவும்யான்
சித்தாதி சித்தர் பதினெண்மர்தந்த திரவியமே.

(இ-ள்.) ஞானக்கருத்தை உணர்ந்தவர்களின் திருவடித்தாமரைகளைப் பெற்றதும் பிறவாதமுத்தியை வைத்தாலும் அவர்களுடைய பாதங்களை வணங்கும் நான் சித்தர்களின் திருவடிகளை வணங்கின திரவியமாம் எ-று. (ககபஉ)

வெண்பா.

கண்டீரோபண்டிதரே காலைதனில்கிண்டியது
சண்டமாருதக்குழம்பைச் சாற்றிலே-பண்டிதையில்
சிரகமாங்கஷாயத்தில் தேனும்பஞ்சதாரைவிட்டு
நீரதுவுநாள்மூன்று நேர்.

(இ-ள.) பண்டிதர்களே! நீங்கள் உணர்ந்தீர்களோ? காலையில் சண்டமாருதக்குழம்பை சிரககஷாய அநுபானத்தில் தேனும், சர்க்கரையுங்கூட்டி ந-நாள் கொடுக்கவேண்டும் எ-று.

நீர்ச்சுருக்குநீர்க்கடுப்பு நீரடைப்புநீர்சுரப்பு
பாரதிதமேகமதும் பட்டுப்போம்-நீரதலை
நிம்பப்பழத்தினுட னீரதுவிட்டேட்டியபின்
கப்பிதந்திமேகம்போங் காண்.

(இ-ள்.) நீர்ச்சுருக்கு, நீர்க்கடுப்பு, நீரடைப்பு, நீர்சுரப்பு, மேகம் இவைகள்குணமாம், எலுமிச்சம் பழச்சாற்றில் கொடுத்தால் தந்திமேகம் குணமாகும் எ-று. (ககபஉ)

வாதமுதல்வாய்வும் வரும்பித்தசேத்துமங்கள்
மாதவிடாசூதகமு மாண்டுபோம்-கோதையே
அவரைதொவரை அரக்கிரைதூதுளங்காய்
விரையில்லாக்கத்திரிப் பிஞ்சாம்.

(இ-ள்.) வாதங் காரணமான வாயுவும், பித்தங்களும், சேத்துமங்களும், மாதவிடாய் கலைத்து சூதகமும் குணமாம்பத்தியம்;— அரைக்கீரை, தூதுளங்காய், அவரை, துவரை, விரைப்பிடியாத கத்திரிப்பிஞ்சுமாகும் எ-று. (ககபங)

இருவினையால்தாக மெடுப்பதனுலென்றறிந்து
கருத்தறியாதென்னவிதங் காரணமோ-இருவினைநோய்
விகாரமதுசன்னிவிடு மூன்றுநாளதனில்
அகாரமதுநீரதனு லாம்.

(இ-ள்.) தேகமானது நல்வினை தீவினைகளால் எடுப்பதாம் இந்தக்கருத்தை யறியாதது என்னகாரணமே? அவ்வினையினாலுண்டாகின்ற சந்தி கரு-க்கும் ௯-நாள் பனிநீரில் அனுபானிக்கவும் எ-று.

சாரமதில்கிண்டி சண்டமாருதக்குழம்பு
தேறவுங்காணிஞ்சிரசந் தேனும் சாரமதில்
அதிகாலையுண்ண அகனுஞ்சுரதோஷமு
சதிசெயுஞ்சன்னியும் போம்.

(இ-ள்.) இஞ்சிரசமும் தேனுங் கலந்து அதிகாலையில் உண்டால் சுரதோஷங்களுஞ் சந்நியும்போகும் எ-று. (௧௧௦௫)

விருத்தம்.

அரத்தையாமணக்கெண்ணை யாடாதோடை அதின்ரசத்தில் குழம்பதுவுங்குன்றிதாக்கி, சுரசமிதுஅவிழ்தமதை யுதையகாலைச் சூரியனைத்துதித்துபணிந்துடனுமுன்னை, பரிட்சையனுபோகமென்னசத்தபேதி பலாபலத்தைக்கண்டு மருந்தூட்டுவீராய், வரட்சியொடுவாய்வுதச வாதம்பித்தம் மருவிவெகுநாளிருந்த மந்தம் போமே.

(இ-ள்.) சிற்றரத்தை சிற்றாமணக்கெண்ணெய், ஆடாதோடை இவற்றில் ஒன்றில்குழம்பில் ஒருகுன்றிமணி யளவு கொடுத்தால் வரட்சி, தசவாயுக்கள் வாதபித்தம், நாள்பட்டமந்தம் இவைகள் தீரும் எ-று. (௧௧௦௬)

அன்றுவிட்டுப்பின்புதைய காலந்தன்னிலறிந்துகுழம்பதனில் குன்றிநாலுக்கொன்று, கண்டரோபண்டிதரே பாலமந்தங் கருது முன்புசைய்கைவிதங்கருதிடீர்காண், தெண்டிரையில்குழந்தைகளுக்கிசுவுமூர்ச்சைத் தெளிந்திடுங்காணுப்பசமுமன்னருந்தீரும், தண்டுமொன்றாய்ப்பிரளிசத்தி விக்கல்மூர்ச்சை சாந்தமரஞ்சாந்தமில்லா மருநாளூட்டே.

(இ-ள்.) உதயகாலத்தில் குழம்பில்குன்றி ௪ கொடுக்க பாலர் மாந்தம், வலிமூர்ச்சை, உப்பிசம், அன்னரு, பிரளிவலி, வாந்தி, விக்கல், மூர்ச்சை இவைகள்குணமாம் மறுநாளுங் கொடுக்க வேண்டியது எ-று. (௧௧௦௭)

நாவரட்சிதோஷமொடுசுரமுஞ்சன்னிநாள்தோறுங்கனசுரமுநாடுங்காலை, நாவுகரித்திடவரிதுகுழம்பிற்குன்றி தனையெடுத்துநாளிரண்டுபாகம்வாங்கி, பூவையர்க்குமுன்பதுகாணுவில் தேய்த்துப் புகல்விராம்சுடுவென்னீரையாராக்கு, பாவையெனு மைந்தருக்கு பின்புஆண்டே பார்சிவிடுகுழம்புகுன்றி நாள்பட்டே.

(இ-ள்.) இதில் ஒருகுன்றி நாவில்தேய்த்து அரையாழாக்கு வெந்நீர்கொடுத்தால் நாவரட்சி, தோஷம், சுரம், சன்னி, தினசுரம் இவைகள்தீரும் எ-று. (௧௧௰௮)

ஊட்டுநிலத்துளசிஅவித்துடன்சாற்றைக்கொண்டுரைத்து மருந்துடனேயுட்கொள்வீராகில், சாட்டியமாங்கிருமிபழ மலமும்போக்குந் தசையுள்ளவாய்வுமுதல் ரணமுந்தீரும், பாட்டிலிந்தப்படி சொன்னேம்பாரில்மாண்பர் பண்டிதரேயுங்களுக்கும்பலிதமாகும் நாட்டினில்நாலாயிரத்துநானூற்றெட்டு நல்வினையுந்தீவினையுநாடாதாண்டே.

(இ-ள்.) நிலத்துளசி சுரசத்தில் கொடுத்தால் கிருமி பழைய மலம் சதையைப்பற்றினவாயு கணங்கள் இவைகள் தீரும் எ-று.

பரத்தையர்க்குப்பழம்புளியுமுளநீர்கூட்டு பாலருக்குமருந்தூட்டிப்பால்தானூட்டு, சுரஞ்,சன்னிதோஷமதுக்கிச்சாபத்தியம்சுண்டைக்காய்வற்றலரைக்கீரையாகும், உரிசையென்றஉப்புவறுத்துள்ளுக்கூட்டு ஒருபோதுமன்னமதுமுண்பீராகில், அறிவீராய்தசவாய்வுநோய்கட்கெல்லாம் ஆகாதுமாங்கிஷமு மாகாதாண்டே.

(இ-ள்.) பத்தியம், பழம்புளியும் இளநீரும் சேர்க்கவேண்டும் குழந்தைகளுக்கு மருந்துகொடுத்துப் பால்கூட்டு, சுரஞ்,சந்நி இவைகளுக்கு இச்சாபத்தியம் அவை சுண்டைவற்றல், அரைக்கீரை, உப்புவறுத்தும், ஒருவேளைசாப்பாடும், வாதநோய்களுக்கெல்லாம் மாமிசம் உதவாது எ-று. (௧௧௧௰)

பாசியுடன்பருப்புமொச்சைக் கடலைமச்சம் பாக்குவெற்றிலை புகயிலைசுண்ணும்போடும், காசுயெனுங்கட்டியொடுகனிகள் தேங்காய் கன்னலொடுநல்லெண்ணெய்காற்றுநித்திரை, பொசிப்பெடுத்தபின்புரவியுறக்கமாகா பொழுதுகதிர்போனபின்பு புகல்வீராகில் தூசிபோல்பறந்துவிடுந்துன்பம்போகுந் துரைராஜபண்டிதர்க்குச் சொல்வீராண்டே.

(இ-ள்.) பச்சைப்பருப்பு, மொச்சைக்கொட்டை, கடலை,மீன் பாக்கு, வெற்றிலை, புகையிலை, சுண்ணாம்பு,காசுகட்டி,பழவகைகள் தேங்காய், கரும்பு, நல்லெண்ணெய், காற்று,நித்திரை, உண்டபின் தூங்கல், இளவெயிலிலிருத்தல் இவைகளாகிய அபத்தியஞ் செய்யாதிருந்து மாலைவெயில் விரும்பினல் தூசைப்போல நோய்கள் பறந்துபோய்விடும் இவ்விதிகளைத் துரைராஜபண்டிதர்கள் சொல்வார்கள் எ-று. (௧௧௧௧)

மாதர்கருக்குழியில் செனித்திடுநோய்சூலை வகையாறுவிதமது வுமனங்குகாலே, பதராகுங்கருக்குழியில்சதைதான்மூடிப்பாயாது விந்ததுவும்பாழாய்ப்போகும், விதுரமாங்கருக்குழியில்கிருமிசூழ்ந் தால்விந்ததனையுண்டுவெறும்பாழாம்பூமி, போதரவாய் கருக்குழி யில்பூநீர்காரம் பூர்க்குடிந்தப்பூமியைப்போல் பூத்தாலாண்டே.

(இ-ள்.) பெண்களுடைய கருப்மையில்உண்டாகும் யோனிச் சூலைகள் ஆறுவிதமாகும் அவையாவன கருக்குழியில் சதைவளர் ந்து இருந்தால் அவ்விடத்தில் விந்துபாயாதிருப்பதுஒன்று, கருக் குழியில் கிருமிகூடினால் அவ்விடத்தில் செல்லும் விந்துவை அப்பு பூச்சிகள் புசித்துவிடும், இது இரண்டாவது, கருக்குழியில்பூநீறுபூக் குங் பூமியைப்போல எ-று. (ககக௨)

பூர்க்குமந்தப்பூநீரு உவருண்டானல் புளிப்பாழுவிந்ததனைப் பூநீருண்ணும், ஏர்க்காதுஇடம்விட்டுஇடந்தான்விநது இருப்பிடம் விட்டிடம்பாய்ந்தானிசெல்லாது, கார்க்காதுகருக்குழியில் வாய் வுஞ்சேரக் கட்டிடுமோநாதவிந்துகனல்நோய்சேரும், பார்க்கபனி க்குடமுடையும்பனிநீர்போனல் பாழாகும்விந்ததுவும் பாழ்தானு ண்டே.

(இ-ள்.) உவர்பூக்கும் அதனல்விந்துவை உப்புஉண்ணும் இது மூன்றாவது விந்தானது இடம்விட்டு இடம்செல்வதினல்விநதுபாய் கிறதில்லை இதுநான்காவது, கருக்குழியில் அதிகமாக வாயுசேர்ந் தால் விந்து அவ்விடம்செல்லாது இது ஐந்தாவது சம்போககாலத் தில் இருவருடைய உஷ்ணத்தினல், விந்துஜலரூபத்தை யடையும் இது ஆறாவது, இந்த ஆறுவகைக்காரணங்களால் விந்து வீணுய்ப் போகிறதேயொழிய கருதங்குகிறதில்லை எ-று. (கககங)

ரதிபுருஷர்இருவருந்தான்புணரும்போது நாயகிதன் கருக்குழி யில்நாதவிந்து,விதியுமதியிரண்டிடமும்நீறுய்ப்போகுமிஞ்சிஇடியிடி க்குமிந்தவேகம்போலாம், பதியைவிட்டுப்பதியிழந்து பாயும்விந்து பரத்தையரெண்சாணுடலும்பஞ்சுபோலாம், அதிவிதமாய்ப்புணர் ந்ததலலண்டபிண்டம் அண்டஇடிபிடித்ததுபோலாகுமாண்டே.

(இ-ள்.) ஸ்திரீ புருஷர்கள் இருவரும் புணரும்போது விந்து சோணிதம் இரண்டும், சலமாய்ப்போகும். இடியிடிக்கின்ற வேகம் போல் இடம்விட்டு இடத்திற்திற்குப்பாயும், ஏனெனில் பெண்களு டைய எண்சாண் உடம்பும் முழுமையும் பஞ்சுபோன்றதாகுமஇப் படியிருக்கப் புணர்வதினல் அண்டத்தில் இடிபிடித்தது போலா குமஎ-று. (கககச)

இந்தவிதம்யானறிந்துஅனுபோகத்தை யினியுரைத்தேன் யாவர்களுமினமாய்க்காண அந்தமுடனறுவகைதன்சூலையாலும்அனுகாதுபுத்திரேட்சைப்மைக்கும்வாறு, சந்ததமாய்சதைமூடில்சதையைத்தின்னசண்டமாருதக்குழம்பிற்பணந்தானென்று, விந்தையுடன்சீலைதனில்விரவிப்பூசி மிகுந்தரவிமுகந்தனிலும் விளங்குவீரே.

(இ-ள்.) இவ்விதமாக நான் தெரிந்துகொண்ட அனுபோகத்தை யாவரும் உணர்தற்பொருட்டு நான்சொன்னேன் மேலேசொன்ன ஆறுவிதமான கற்பச்சூலையினாலும் புத்திரபாக்கியம் உண்டாகமாட்டாது இவ்வகையான கருப்பக்குற்றங்கள் ஆறுநாள்முதலாவதான கருக்குழியில் சதையடைத்தல் என்னும் நோய்க்கு மேற்படி சண்டமாருதக்குழம்பில் ஒருபணவெடை எடுத்து சீலையில்பூசி வெயிலில் உலர்த்தவேண்டும் எ-று. (௧௧௧௫)

வற்றிடநீர்த்திரியிலன்னீர்சண்டமருவிய பதனமதாய்வைத்து போற்றி, சத்தியெனும்பரத்தையர்க்குஅவிழ்தங்குன்றிசண்டமாருதக்குழம்புசாற்றுவீராய், பத்தியந்தான்சங்கன்பழச் சாறுவாங்கி பலமஞ்சில்மருந்திழைத்துபபாச்சுங்காலை, சித்தியதாஞ்சதைகரைந்துசூலைதிருந் தியதனையாவிதனில்செலுத்திடீரே.

(இ ள்.) உலர்ந்தபிறகு அதைப்பத்திரப்படுத்திவைத்துக்கொள்ளவேண்டும், பிறகு மேற்படிகுழம்பில் ஒருகுண்டுமணி யளவு உள்ளுக்குக்கொடுத்துப் பத்தியம்வைத்து சங்கம்பழச் சாற்றிலிழைத்து குழம்பைப் பிரயோகிக்கவேண்டும், இதனால் சதைகரைந்துவிடும் எ-று. (௧௧௧௬)

இருள்சூழுமதிதனிலுமிருக்கும்வீட்டில் இத்திரியைக்கொளுத்திரவிதனிலுமாட்டி, கருக்குழிக்குமையநடுநேராய்வற்றிகருதிடவும் யோனிவிழிபுகைதான்பாய, சுருக்கமுடன்மாதும்ண வாளற்கிந்த சூட்சமிதையறிக்கையிட்டுச்சொல்லிச்செய்யும், சுருக்கமுடன்புகை யோனிவழியேபாய்ந்து சதையெல்லாஞ்சுருங்கிவழிசாந்தமாமே.

(இ-ள்) முன்மருந்து பூசிதிரித்து வைத்திருந்ததிரியை ஒரு அறையில் அப்பெண்ணை யிருக்கச்செய்து கொளுத்தி அதில்வரும் புகையை யோனிக்குள் போகும்படி செய்யவேண்டும், அதினல் அச்சதைகளெல்லாஞ் சுருங்கிவழி தாராளமாகும் எ-று.

சாதுரியமங்கையர்கருத்திரிநாளிந்தசண்டமாருதக்குழம்பை தாக்கும்போது, வாதுசெய்யுஞ்சூலையினல்மலடுமென்றுமாமுனிவரெனக்குரைக்கயானுஞ்சொன்னேன், தீதுவாராது ஒருவேலையன்

னந் திங்கானபுளிகையுஞ் சேர்க்கலாகா, பூதலத்தில்பெண்மலடுபுக லப்போகா புருடன்மலடெனு மிகவும்புகல்வதாண்டே.

(இ-ள்.) பெண்களுக்கு மேற்படி திரிப்புகையினால் அனேக குளமுண்டு சண்டமாருதக்குழம்பை கொடுக்கும்போது சூலயி ஞல் மலடாவாளென்று முனிவர் எனக்குச்சொல்ல நானுஞ்சொ ன்னேன் இதனால் யாதொருகுற்றமும் உண்டாகமாட்டாது இதற் குப்பத்தியம் ஒரேவேளை போஜனஞ்செய்யவேண்டும்புளியும்புகை யும் சேர்க்கக்கூடாது உலகத்தில் பெண்மலடு சொல்லக்கூடாது· ஆண்மலடுஉண்டென்று சொல்வது, வழக்கமாகவிருக்கின்றது.

கேவலமாங்கிருமியினால்சூலையொன்று கிரிகிக்கும்விந்துதனைக் கெற்சித்துண்டால், மேகவுமடங்கையர்க்கு மலடென்றென்னில் மேதினியோர்புகழ்வதுகாண்மெய்யென்றெண்ணி, பூவுலகில்செப தபங்கள்பூசைநேமம் பிரார்த்தனைகள்செய்துபின்னும்புத்திரன்கா ணார் ஆவதினாலதற்கவிழ்தமாண்டேகேளீர் அதிதசண்ட மாருதத் தை யருள்வதாமே.

(இ-ள்.) அசேதனமான கிருமிகளினால் ஒருசூலைஉண்டு அக் கிருமிகள் அவ்விடம்செல்லும் விந்துவைப் புசிக்கிறபடியால் கரு தங்குகிறதில்லை இதைமலடென்று சொல்லுவார்கள் அப்படிசொல் வதினால் கோவில், குளம், செபதபம் முதலியவைகளைச் செய்வார் கள் அப்படிசெய்தும் அனேகர் பிள்ளைகளில்லாதவர்களாகவளரு கிறார்கள் ஆகையால் அப்படிப்பட்ட ஸ்திரீகளுக்கெல்லாம் சண்ட மாருதக்குழம்பைக் கொடுக்கவேண்டும் எ-று. (௧௧௧௯)

அவிழ்தமென்றகுழம்பதனில்குன்றிவாங்கி ஆகாசகெருடனந் தக்கிழங்குசசாற்றில், கவனமதாய்க்குழைத்துஅதில்கற்கண்டிட்டு காலைதனிலமூன்றுநாள்கருகும்போது, புவனைய நள்பதம்போற்றிப புகட்டும்போது பொல்லாதகிருமியிருந்திடத்திற்சென்று, முவனம தாய்குழம்பதுவின்வேகத்தாலும் மூடுபனிபோல்சூழ்ந்துமுடிக்குந் தானே.

(இ-ள்.) மேற்படி குழம்பில் ஒருகுண்டுமணி அளவு எடுத்து ஆகாசகருடன் கிழங்குச்சாற்றில் குழைத்து அதில்கொஞ்சம்சீனு கற்கண்டுபோட்டுக் காலையில் மாத்திரம் மூன்றுநாள் கொடுத்தால் அந்தக்கிருமிகள் இருக்கும் இடத்திற்குப்போய் மூடுபனிபோல் முடிக்கும் எ-று. (௧௧௨0)

முடுக்குமிருபணயிடைதான்சீலைக்கூட்டி முன்திரிபோல்திரித்து மூலாவிதான்வீச,படிக்குமந்தப்பாவனைபோல்கவிழ்ந்துமூடிபாவை

யர்தன்பேகனிருடமையந்தாக்கக்,கொதித்திடச்சொல்புகையதுகா ண்கொடுக்கும்போது கொலைசெய்யுங்கிருமியெல்லாங் கொடியாய் வீழும் தடுக்கவொண்ணுதமனுலுந் தடுக்கப்போகா சாந்தகுணமா மூன்றுநாளிலாண்டே.

(இ-ள்.) அந்தக்குழம்பில் இரண்டுபணவெடை எடுத்துச் சீலையில்தடவி திரியைப்போலத் திரித்து கவிழ்ந்து படுக்கச்சொலவி அந்தஸ்திரியின் யோனியில் புகைபிடித்தால் அந்தபுகையை வாங்கினபோதே கிருமிகளெல்லாம் கொடிபோல ஒன்றின்பின்ஒன்றாக வெளியிலே வந்து விழுந்துவிடும் எமனாலுந் தடுக்கமுடியாது இப்படிசெய்தால் மூன்றுநாளில் குணமாகும் எ-று. (௧௧௨௧)

ஊஷணத்தால்கடுங்காரமுடனுண்டாகி உப்பதனல்விந்துப்பா யுருவமாறி, வேழ்விளையாங்கருக்குழியும்வெந்துபுண்ணுகும் வெகுவிதஞ்செய்தாலும்விந்துதரியாதென்க,பூஷணமாய்போசனமுண்டுணந்தாலும்பொல்லாதஉட்காரச்சூலையாலும், ஏஷணையாயெரிந்தசயிலங்கள்மாறி யிரத்தமெல்லாங்கிருகிளைத்திடுவாராண்டே.

(இ-ள்.) வெட்டையினல் சரீரத்தில் கொடியகாரமுண்டாகி உப்பதனல் விந்துப்பு உருமாறக் கருக்குழியானது வெந்துபுண்ணய்விடும் அதற்கு அனேகவிதமான சிகிச்சைகளைச் செய்தாலும் விந்து அவ்விடத்தில் நிலைத்துநிற்கிறது போஜனங்கள் நன்றாய் அதிகமாக கொண்டதாலும் உள்ளேயுண்டான கடுங்காரச்சூலையினாலும் மலையான இடங்கள்மாறி இரத்தமானதெல்லாம் கருகிச் சரீரம் இளைத்துப்போவார் எ-று. (௧௧௨௨)

இவ்விதங்களறியாமலுலகமாண்பர் எடுத்துரைப்பாரிதுமலடு என்னபாவம், செவ்வையினிமலடுகளைச்சிவனுலுந்தான்ஜெயிக்கமுடியாதுஜென்மக்கூறென்பார்காண்,அவ்விதமாயுரைத்திடுவாரவனிமீதில் அழைத்துவிதமறியார்களாண்டேகேளீர், கவ்விடவுங்குழம்பதனில்குன்றிவாங்கி கர்ப்பூரவெற்றிலைச்சாறதனிற்காணே.

(இ-ள்.) இத்தன்மைகளை யெல்லாம் உலகத்தி லுள்ளவர்கள் உணராமல் மலடென்று எடுத்துச் சொல்லுவார்கள் ஐயோ! இதுவென்னபாவம்! அப்படி பெண்மலடிருந்தால்.அம்மலட்டைச் சிவனுலும் ஜெயிக்கமுடியாது அதுஜென்மக் கூறுகையால் என்றுசொல்லுவார்கள் இவ்விதமெல்லாம் சொல்லுவார்களே யொழிய அது வந்தவிதத்தை உணரமாட்டார்கள் ஆகையால் அவர்களுடைய சொற்களையெல்லாம் ஒருபொருட்டாகக் கொள்ளாமல் மேற்படி

சண்டமாருதக் குழம்பில் ஒருகுண்டுமணியளவு எடுத்து கர்ப்பூர வெற்றிலைச்சாற்றினால் எ-று. (ககஉ௩)

ஊட்டிடவுமூன்றுநாள்மூன்றுவேளை உள்ளிருந்தவர்களெல்லாநீரில்சேர்ந்து, சாட்டியமாய்மலசலத்தைச்சாடுஞ்சாடும்சடத்தினுள்ளகனல்வேகஞ்சாரித்தேபோம், மேட்டியிந்தகருக்குழிதான்தமன்மேல்சுற்றி வெண்மதியுஞ்செங்கதிரோன் விளக்கத்தாலும் நாட்டிவிடுங்குழம்பதனைமுன்போல்வற்றி நயந்துதிரிபுகையதனால் நமனோய்போச்சே.

(இ-ள்.) இதைநந்து மூன்றுநாள் காலையில்மாத்திரம் கொடுத்தால் மலசலங்களை வெளியிற்சாடும், அதனால் சரீரத்திலுள்ள உஷ்ணவேகம் நீங்கும் இப்படியாவதினால் கருப்பாசயமானது நல்ல விளக்கத்தையடையும் ஆகையால் முன்போலவே திரிப்புகை யூட்டினால் மௌனம்போலிருந்த நோய்போச்சுது எ-று.

அடுத்தபுகைமூன்றுநாள்கொடுக்கும்போது அவ்விடத்திலிருந்தபுண்களாறிப்போகும், தடுத்துரவிமாண்பர்களுந்தடுக்கப் போகா சாபமெப்துமவநசியமசியசுவாகா, தொடுத்தவிழ்தமனுபோகிராசயோகிகுவலயத்தில்ஞானபண்டிதனாய்வாழ்வார், தொடுத்தேன் திருவள்ளுவன்வாக்கமிர்தவாக்கியன் சூக்ஷசடாதாரசுழிதொழுதேனண்டே.

(இ-ள்,) முன்சொன்னபடி புகைகள்மூன்றுநாள்கொடுத்தால் அவ்விடத்திலிருந்த புண்களெல்லாம் ஆறிப்போகும். இதை எவராலுந் தடுக்கமுடியாது அப்படி தடுத்தால் சாபம்வரும் மவநசியமசியசுவாஹா, என்று உச்சரித்து மருந்துகொடுத்தால்உலகத்தில் ஞானபண்டிதர்களாக வாழ்வார்கள் ஈஸ்வரன் உள்ளசுழிமுனையை வணங்கினேன் எ-று. (ககஉ௫)

தொடுத்ததிந்த சண்டமாருதத்தைபோற்றி சூக்ஷமில்லாமிந்நூலில்சொல்வேன்காணும், கொடுத்துவிட்டாருலகருக்குமதியோரில்லைகுணமில்லைவேதாந்தக்கூறுமில்லை, விடுத்துவிட்டா ராமாகில் வினையோயில்லை மெய்க்குருவையறியாதவீணர்வீணர், அடுத்தபனிரெண்டாண்டு ஆசான்சொல்ல அறியலாஞ்சாரவித்தை ஆண்டே கேளே.

(இ-ள்.) இந்த சண்டமாருதக் குழம்பைப்போற்றிசெய்து இந்நூலின்கண் உள்ள சூட்சங்களையெல்லாஞ் சொல்லுவேன் உலகவாசிகளுக்கு புத்திகிடையாது குணமில்லை வேதாநதக்கூற்றுமில்லை விடுத்துவிட்டால் வினையில்லை இவர்களெல்லாரும் மெய்யாசானை

உணர்ந்த வினைர்களாவார்கள் ஆசானைப் பன்னிரண்டு வருஷம் வரைக்கும் அடுத்திருந்து தொண்டுசெய்து சாரவித்தைதயை அவர் சொல்ல உணர்ந்துகொள்ளவேண்டும் எ-று. (௧௧-௩)

சூதகத்தில்வாய்வதுபோய்சொக்குங்காலே சருதியெனும்வன் னிபித்தந்துணையாய்சேரு, மாதவிடாய்நாகமதும்வஸ்துக்கட்டு மா தாந்தங்கட்டினதால்மாறுதேகம், ஊறுவுடல்சீரமெல்லாங் கருப் பைபுந்து உதிரநீர்சூசிகாவாய்வுந்தோன்றி, வாதனையால்வயிறு டம்பெருத்துவூதி மகத்தான அடிமூலம் வாதஞ்சேர்ந்தே.

(இ-ள்.) பெண்களுக்குச் சூதகத்தில் போய் வாயுதங்குங்கால த்தில் அப்போது அக்கினியான பித்தமும் துணையாகக்கூடும்மாத விடாயான நாகமானது கட்டிப்போகும், அப்படி அதுகட்டின தால் பெண்ணின்சரீரம் ஊதும், உதிரங்கூட்டி நீர்நோக்கும் அதி லு சூசிகாவாயுதோன்றும், அப்போது மூலத்தில் வாயுசேரும்.

மாதருக்கிவ்விதக்கூறுமருவுங்காலமங்கையர்க்குமனிதர்சொ லும்வாறுகேளீர், சூதகமுங்கட்டினதால்கெர்ப்பங்காணுந்தோகை யர்கள்கண்டுமந்தவிதஞ் சொல்வார்காண், நாதமென்றசூலையினால் கெற்பசூலை காட்டிவிதையறியபண்டிதஞ்செய்வாரோ, வேரமிந்த சூலையினால் மலடென்பார்கள் வினைப்பயனையொழித்திடவும் விளங் காராண்டே.

(இ-ள்.) பெண்களுக்கு இவ்விதம் உண்டாகுங்காலத்தில் சூத கம் கட்டினதாகும் இதை உலகத்தினர் உணராமையால் கர்ப்ப மென்று சொல்லுவார்கள் இந்த கர்ப்பசூலையினால் இதற்கு வயித் தியஞ்செய்வார்களோ செய்யமாட்டாமல் மலடென்று சொல்லி விடுவார்கள் அன்றிக் கர்மநிவர்த்தியையுஞ் செய்யமாட்டார்கள்.

கெற்பக்கோளறிந்துவினையொழித்தோன்ஞானிகேதமிலாராஜ பண்டிதனேயோகி, துற்பவித்தசூலையதுநாதசூலைசுக்கிலமுஞ்சுரோ ணிதமுமிரண்டுஞ்சேரா, கற்பகமாம்விந்து ஒருவழியிற்பாயுங்கருக் குழியில்சுரோணிதமுங்கலக்காதாகில், முற்பகஞ்செய்தனுபோகக் கூறில்லைகாண் முச்சுடரினுதித்தநெனுமொழியலாமே.

(இ-ள்.) இவ்விதமான கர்ப்பக்கோளை உணர்ந்து இருவினைக ளையும் ஒழியப்பெற்றோனே ஞானியாவான் இதையுணர்ந்த ராஜ பண்டிதனே யோகியாவான் கர்ப்பசூலையானது நாதமான பெண் ணின் சுரோணிதத்திற் சம்பந்தப்பட்ட சூலையாதலால் சுக்கிலத்து டன் அச்சுரோணிதஞ் சேரமாட்டாது அப்படி கலக்காததினால்

விந்துவானது வேறொருவழியிற்பாயும் கருப்பஸ்தானத்தில் சுரோ ணிதங்கலக்காதானல் அனுபோகக்கூற்றில்லாமல்விளங்கும் எ-று.

மொழிவதுங்காண்சண்டமாருதக்குழம்பில்முன்பாகங்குன்றி யிடைமூன்றுநாளும், அழிஞ்சிவேர்த்தயிலமதில் பலந்தான்வாங்கி அத்தயிலந்தனிலரைத்து அதன்பின்நேரீர், பழையபனைக்கற்கண் டுந்தேனுங்காசும்பகுந்துடனுஞ்சேர்த்துவுண்ணநிடுவீராகில் பழை யதுபோல்வாரியதுமலத்தைப்போக்கும்மன்றுதிடச்சித்தமதாய்மகி ழ்ச்சொல்லே.

(இ-ள்.) இதற்குச் சண்டமாருதக்குழம்பில் குன்றிமணியளவு எடுத்து அழிஞ்சில்வேர்க் குழித்தயிலம் ஒருபலத்திற்கலந்து பழைய பனங்கற்கண்டு தேனு இவைகள் வகைக்கு காசெடைசேர்த்து ௩ நாள் காலையில்மாத்திரம் கொடுத்தால் மலங்கழிந்து சுகமாகும்.

துவரைமுளநீருஞ்சுண்டை வற்றல்கூட்டி தூதுபத்திரியினுட வற்றல்சேர்த்து, அவரையரைக்கீரைமுளகதுவுங்காயம் அதிபேதி க்காலின்மோர்சுக்குஓமம்.விவேகஞானவெட்டியருள்பணிந்துபோ ற்றிவெள்ளுள்ளிசீரகமுமரத்தைபோடு, தவராதயிவ்வகைகள் சே ராதென்னில் தகர்த்துவதும்புளிபுகையுந்தள்ளலாமே.

(இ-ள்.) பத்தியமோ, துவரை, மிளகுநீர், சுண்டை வற்றல், தூதுவளங்கால்வற்றல், அவரைப்பிஞ்சு, அரைக்கீரை, மிளகு, பெ ருங்காயம், சேர்த்துக் கொள்ளலாம் பேதிஅதிகமானல்,பசுமோர் சுக்கு, ஓமம், சேர்க்கவேண்டும் வெள்ளைப்பூண்டு, சீரகம்,சன்னரா ஷ்டம், இவைகள் சேராவிட்டால், புளிபுகை இவைகள் கட்டாயம் நீக்கவேண்டும் எ-று. (௩௩௩.௧)

தள்ளுவதுயெட்டுநாள்திரிநாளுண்டு சண்டமாருதக்குழம்பில் பணந்தான்ரெண்டு, தெள்ளிமையால்திரியதுகாண்முன்போல்செய் துதீங்கில்லாமூவேளைபுகைதானூட்டி எள்ளளவும்பிழைவராதெண் சாண்தேகம் இருந்தகெர்ப்பச்சூடதுபோய் சூலைபோகும், கள்ள மில்லாநீர்களெல்லாங்கடலேபுக்குங் கருக்குழியுஞ் சுத்தியதாய்க் கருதலாமே.

(இ-ள்.) இவ்வாறு மூன்றுநாள் மருந்து சாப்பிட்டால் எட்டு நாள் பத்தியங் காக்கவேண்டும் இதுவன்றி மூன்றுவேளை முன் சொன்னமாதிரி சுற்றிப்புகையுங் காட்டவேண்டும் இப்படி செய் தால் எண்சாண் சரீரத்திற்கு கொஞ்சமும் குற்றம் உண்டாகமாட் டாது கர்ப்பச்சூடு நீங்கிச்சூலையும் நீங்கும் சரீரத்திற் கோர்த்திரு க்கின்ற நீர்களெல்லாம் கடலில் நுழையும், கருப்பாசயமும் சுத்தி யாய்விடும் எ-று. (௩௩௩.௨)

வாதமென்றதேகியென்றாலஞ்சுநாள்தான் மருவும்பித்ததேகியென்றால்நாலுநாள்தான், நாதசேத்துமதேகிமூன்றுநாள்தான்நயந்துசண்டமாருதத்தைநாட்டுங்காலை, வேதமெனுங் கியாஃபொருளதீதமிந்நூல்விதிந்தவிதியெள்ளளவும்விதம்போகாது, காதலிந்த சாஸ்திரத்தைகண்டபேர்கள்கைவிடார்கருக்குழியில்கருதுவாரே.

(இ-ள்.) இந்தமருந்தை வாததேகமுள்ளவர்கள் ஐந்துநாளும் பித்ததேகமுள்ளவர்கள் நான்குநாளும், சேத்துமதேக முள்ளவர்கள் மூன்றுநாளும் சாப்பிடவேண்டும் ஆகையால் இந்நூல்மகிமையையுணர்ந்தவர்கள் எள்ளளவும் தவறிநடக்கமாட்டார்கள் எ-று.

வெந்துகருக்குழியதுவும்புண்ணாய்ப்போகும் வெட்டையினால் தேகமீறிப்பாய்ந்து, உந்தியெனுங்கமலமதில் யிரணங்கண்டு ஓரிடியாயிடித்துவயிற்றுவலியுண்டாக்கி, தந்திரமாய் கிடைகொடுக்காபிரட்டல்சொபங் தாபம்வருமூழ்வினையாய் சடத்திலெய்தும், யிந்துவெனுஞ்சுரோணிதமிரண்டுங்கூடி யிருக்குமந்தகாலமதில் வாய்வாலாண்டே.

(இ-ள்.) அதிகவெட்டையினால் கருப்பாசயமானது புண்ணாய் வெந்து அதினால் தொப்புளில் விரணமாய் இடித்து வயிற்றுவலியுண்டாய் படுக்கைதங்காமல் பிரட்டல், சோபம், தாபம், இவைகளெல்லாம் பூர்வவினைப்பயனால் சரீரத்தில்வந்துசேரும் இவைகளெல்லாம் போககாலத்திலுண்டாகும் வாயுவினால் நிகழ்வதாம் எ-று.

வாய்வுமனுசரிக்குமடமாதர்க்கேதான் மாதாந்தங்கட்டியது மருவுநாளில்,பாயும்ரதிபுருஷருமேபுணர்வாராகில்பரிதியெனுநாதமதில்விந்துஞ்சேரில், தேயுவெனுங்கனலேகக்கனலினாலுஞ்செவ்விளநீர்போலவுமேயுதிரஞ்சாயும்,பேயதனால்பெரும்பாடுஅதீதமென்பார் பேருலகிற்கல்லெரியு முனியென்பாரே.

(இ-ள்.) இப்படி வாயுசேர்கின்ற பெண்களுக்கு மாதாந்மானது கட்டுகின்றநாளில் பஞ்சபுருஷ சையோகஞ்செய்தால் நாதத்தில் விந்துசேரும்போது தேயுவின்வேக வுஷ்ணத்தினால் செவ்விளநீர்போல உதிரமுண்டாகும் இதுவே பெரும்பாடாம், இதனைபே யெனறும், கல்லெறிமுனி என்னும் உலகர்கள் சொல்லுவார்கள்.

சாயுமடைமதமகில்சலஞ்சரித்தாப்போல் தங்குதடையில்லாமல்சாருமாப்போல், ஓயாமலுதிரமது மோடிப்பாயும் ஒருதிங்கள் நாதவிந்துஒக்கச்சேர்ந்து, மாயுமடமங்கையரோடனுபோகித்தால் மருவியுமேபோகமதில்மகிழ்ந்தாராகில், தூயிருமூன்றதுநாளுமஞ்சுமாறுதுகையேழு எட்டிரண்டிம்பத்தும்பாழே.

(இ-ள்.) உடைந்த மதகிலிருந்தும்சலம் ஓடுவதுபோல இடைவிடாமல் உதிரமானது ஓடிப்பாயும், இதில் புணர்ச்சியில்விருப்பங் கொண்டால் பத்துமாதம்வரைக்கும் பாழேயாகும் எ-று.

கருவுருவாய்திரண்டுகெர்ப்பங் கருதுமாப்போல் காசினியில் யாவர்களுங்கணக்கேன்பார்காண், உருவதுமுண்டாச்சி தென்பாருலகவாதர் உருதியென்பார்துருதமனென்பா ருகமையென்பார், சிறுவரெனும்புத்திரனென்பார்திருமாதென்பார் சிலபேரிதுவென்னசெய்கையென்பார், வருவதுசெய்வினையிதென்பார் வளர்பாண்டென்பார் வசனமெடுத்துரைப்பவர்கள்மாதராண்டே.

(இ-ள்.) கர்ப்பந் திரள்வதைப்போல எல்லாரும் மாசக்கணக்கென்பார்கள் தவிர, சிலர் பிள்ளை என்றும், சிலர் பெண் என்றும் சொல்லுவார்கள், சிலர் இதுகர்ப்பமல்ல, பாண்டுநோய் என்பார்கள் எ-று. (௧௧௩-எ)

பத்துதிங்கள்சென்று சரியாச்சுதென்பார் பாரில்மடமாதர் வந்துபரிசோதிப்பார், கற்றுணர்ந்தபேர்கள் வெருவயிறென்பார்கள் கடிந்துரைக்குஞ்சிலபேர்கள்குளியதென்பார், குத்தமில்லாப் பலபலவாய்யோசிப்பார்காண் கூருவேனுண்டை யினிகுறித்துயானும், சுத்தமெனுஞ்சண்டமாருதக்குழம்பில் சூட்டியெடுத்தொரு குன்றி கொடுக்கத்தானே.

(இ-ள்) இவ்வாறு பத்துமாதங்கள் சரியாய் விட்டதென்பார்கள் பிறகு சிலர், பரிசோதனை செய்வார்கள், கற்றுவல்லவர்கள் இதைமகோதரம் என்று சொல்லுவார்கள், சிலர் குளிதானென்பார்கள், இப்படிக்கெல்லாம் பலபலவாய்ப் பேசுவார்கள், எப்படியிருந்தாலும் இந்தச் சண்டமாருதக்குழம்பில் ஒருகுன்டு எடுத்து.

கொடுக்கிலாந்தூதுளத்தின்பழத்தின்சாற்றில் குழம்பொருபணவிடைதான்பொரித்துக்காயம், மடக்கலாமிந்தவடை பதினெட்டு மத்தித்துமூன்றுநாள்மடந்தைக்கிந்து, கெடுக்குமந்த உதிரமதாஞ் சூலைபாயிங், கெடுதிமலசலஉதிரமெல்லாம்போக்கும், விடுக்கலாங் கருக்குழியுஞ்சுத்தியாகும் விளங்குமுன்பு திரிபுவகையை விளங்கலாமே.

(இ-ள்.) தூதுவளைப்பழத்தின் சாற்றில் அனுபானஞ்செய்து பெருங்காயம் ச குன்றிஎடைபொரித்துக்கூடச்சேர்த்து ச-குன்றி எடை பனைவெட்டிட்டு மத்தித்து ௩-நாள்காலையில் மாதிரம் அப்பெண்ணுக்குக் கொடுத்துப்பார்த்தால் சூதகத்தில் உதிரந்தங்குதல் சூலைகருக்குழி சுத்தி இவைகள் குணமாம் எ-று. (௧௧௩-அ)

சண்டமாருதத்திரியைமுன்போல்பாகந்தாக்கானயோனிவழி புகைதான்சொல்ல, முண்டனனெனும் வாய்வுகனல் மேகசூலை முச்சுடரில்வெட் டைடகனல்மூலமெட்டு, கண்டிதமாய்குழம்பு அதி வேகத்தாலுங் கண்காணுதோடிஅனல்புக்குமாகில், உண்டிடவுமு திர்சூலையோடிப்போகும்உடல்சுத்திகருக்குழிதன்புண்கள்போமே

(இ-ள்.) பிறகு இந்த குழம்பின்திரியை யோனி வழியாய்ப் புகைகொடுத்தால் வாயு, வெட்டை, மேகசூலை, மூலக்கனல் இவை களெல்லாம் குழம்பின் வேகத்தாலும், சுத்தியாம் சூலையும் ஓடும் கருக்குழிப்புண்கள் ஆறும் எ-று. (ககசூய)

அறுவிதத்தால் சூலையெய்துங்கெர்ப்பக்கோள்கள் அடைவுத னையறிந்திந்தயவிழ்தத்தாலும், பரவசமாய்சொன்னதிந்நூல் யோ கிக்காக பரிக்ஷையனுபோகமிதைப்பாரில்மாண்பர், கெறுவமில்லா ப்பண்டிதற்குச்சொன்னேனுண்டே கேவலமாயிருந்ததனு லென்ன வாய்க்கு, மாறுபடாஞானவிதியறிவோனுகில்மகாராஜபூபதிபண்டி தனேஆண்டே,

(இ-ள்.) கர்ப்பக்குற்றம் ஆறுவிதங்களையும் உணர்ந்து இந்த அவிழ்தம் யோகிக்காகச் சொன்னதாதலால் இதை உலகவாசிகள் பயனடைய கர்வமில்லாத பண்டிதர்களுக்காகச் சொன்னேன். கேவலமாயிருந்தால் ஒன்றும்வாய்க்காது இதுவே மகாராஜபூபதியு மாகும் எ-று. (ககசக)

வேறு-விருத்தம்.

அன்னையபிராமிசிரோமணியருளா லாண்டையினி யவுழ்தஞ் சொல்வேன், நன்னயமாய் சண்டமாருதக்குழம்பிற் குன்றியிடை நல்குவீராய், மன்னர்மண்டலீகருமே மகிழ்ராஜபண்டிதனை வணங் கிப்போற்றி, யின்னிமித்தமறியாசுகசன்னியதும் விலங்கிடவுமினி சொல்வேனே.

(இ-ள்.) தேவியின் கிருபையினுல் ஔஷதஞ் சொல்லுவேன், சண்டமாருதக்குழம்பில் குண்டுமணியளவு கொடுத்தால் மகாராஜ பண்டிதர்களெல்லாம் வணங்கிப் போற்றுதல்செய்ய, சுகசந்தி நீங் கும் விதத்தைச சொல்லுகின்றேன் எ-று. (ககசஉ)

வேம்பினுடவித்ததனில்வெள்ளாட்டுப்பிச்சது விட்டிழைத்து மேலும், செம்பதுவின்பற்பமொருஅரிசிடைக்குழம்பு மரைக்குன் றித்தாக்கி, நம்பியிதுநாலுமொருமித்தவர்க்குநாவதனில் நன்றுகத் தேய்த்து, வெம்புதலைவாராமல் வென்னீருங்குடி பபித்து மிகசசெ ய்வீரே.

(இ-ள்.) வெள்ளாட்டுப்பிச்சியில் வேப்பம்பருப்பைஇழைத்து அதில் தாம்பிரபற்பம் அரிசி எடையும், சண்டமாருதக் குழம்பு அரைக்குண்டுமணி எடையுங்கூட்டி நாக்கில்நன்றாய்த் தேய்த்து வெந்நீர் கொடுக்கவேண்டும் எ-று. (௧௧௪௩)

நயனமிருவிழியதனில்கலிக்கமிடுங்கடு களவுநாடியேற்றபயம ணுகுஞ்சன்னியதும்பறந்துவிடுஞ்சரயானம் பாய்ந்தாற்போலும், துயரணுகாதுயிருவிழியதனில்நீர்த்தாரை சொரியுமாகில், சயனுதி துகனல்வேகமென்சாணுதேகமெல்லாந் தணலாமாண்டே.

(இ-ள்.) கண்களுக்குக் கலிக்கமிட்டுப் பார்த்தால் சுகசந்நி சொல்லாமலோடிவிடும், சரபாணம் பாய்ந்தாற்போலக் கண்ணில் நீர்வந்தால் எனகண் அளவுள்ள சரீரமெல்லாம் கனல்வேகமுண் டாம் எ-று. (௧௧௪௪)

தணல்பாயபாதாதிகேசம்வரையனல்சூழுஞ் சன்னிதோஷம், அனலருவியரிக்கும்விதந்தொண்ணூறுகடிகைமஞேவேகத்தாலும், புனல்சொரியும்பேதியர் தம்பத்தியமுந்துவரை முளநீருங்கூட்டும் அனல்வேகமடங்கிடுங்கா ளொருவேளையன்னமதுமருளுவீரே

(இ-ள்.) அவ்வாறு அக்கினிமயமாகவே தொண்ணூறுகடிகை க்கு பேதியாகும் பத்தியம் துவரை, மிளகுநீர் சேர்க்கவேண்டும் ஒருவேளைதான் சாப்பாடு கொடுக்கவேண்டும் எ-று. (௧௧௪௫)

மூன்றுநாளிந்தவித மொருவேளை யவிழ்தமதுமுணருங்காலை, நின்றுயிருநாசியிலுமுன்சொன்னவற்றியதுநசியமேத்த, பண்டுபழ கினதோஷஞ்சுகசன்னி பறந்தோடும்பாரில்விட்டு, கண்டுமிந்தப் பெரியோர்கள் கருத்ததனுலெனக்குரைத்த கருவீதாண்டே.

(இ-ள்.) இப்படி மூன்றுநாள்காலையில் மாத்திரம்புசித்துமுன் னேசொன்ன வர்த்திப்புகையை மூகருக்கு நசியங் கொடுத்தால் சுகசன்னியானது போய்விடும் இதுஎனக்குப் பெரியோர்கள்சொ ன்னதாகும் எ-று. (௧௧௪௬)

கொச்சகம்.

காயாபுரியிலகுங் கன்னியபிராமியருள்
தாயாமதியமிர்தந் தந்துவரமேயளித்தாள்
மாயாமருந்தறிந்தேன் வாசிகொண்டுநான்மகிழ்ந்து
சாயாவிருக்ஷமதின் சஞ்சீவிகண்டேனே.

(இ-ள்.) இக்காயத்தின்கண் விளங்குங் கன்னியான அபிராமி யம்மையானவள் எனக்கு மதியமிர்தங்கொடுத்து வரமுங் கொடுத்

தாள், அதனால் மாயாதமருந்தை உணர்ந்தேன், வாசியைக்கொண்டு நான் மகிழ்ச்சியை யடைந்து சாயாவிருட்சத்தின் சஞ்சீவியைக் கண்டேன் எ-று. (கககள)

மதுரசஞ்சீவியுமே வாச்சுதுகாணுண்டுசென்றால்
விதுரனெனுஞானசிங்கம் வெட்டியருளால்மொழியும்
சதுர்முகஷட்கோணவரைத் தாண்டிசண்டமாருதத்தைச்
சுதனருள்தன்கிருபையினால் சோதிமதியாயெனக்கே.

(இ-ள்.) மதுரமான சஞ்சீவி கைகூடினபடியால் சண்டமாருதக்குழம்பை நான்சொன்னேன் எ-று. (கககஅ)

கலித்துறை.

பிரசண்டமாருத மெய்ஞ்ஞானபோத பிரபந்தமாய்
வரமுத்திஞான குருமுனிவாக்கிய மகிழ்ந்தெனக்கு
திரமாய்விதேகமும் கல்வியின்பேரின்பத் தேன்புகழ்ந்து
சரமாயாதீததுரை ராஜபண்டிதன் சதுர்மறையே.

(இ-ள்.) இது குறுமுனிவர் திருவருளினால் நான்குவேதம் போல்வதான ஞானவெட்டியை அருளிச்செய்தேன் எ-று.

வீராதிவீர வீரஞான வெட்டியெனும்
பேராற்பிரசண்ட மாருதபாணப் பிரயோகமதால்
வேரானநோய்க ளதமாய்பறந்து வெளிப்படவும்
தோராதவுழ்த மதுபானஞ்சொல்லத் தொடங்கினனே.

(இ-ள்.) வீரமுள்ள ஞானவெட்டி என்கிற பாணப்பிரயோகத்தினால் சகலநோய்களும் பறந்துபோகும், அவைகளை ஆடுதற்கு அனுபானஞ்சொல்லத் தொடங்கினேன் எ-று. (ககநய)

வெண்பா.

கண்டீரோபண்டிதரே காலைதனில்குன்றியது
சண்டமாருதக்குழம்பைச் சாதித்தால்-எண்டிசையில்
மண்டலத்தோர்காண்க மருவியொருவேளை
அண்டிபஞ்சதாரையினி லாம்.

(இ-ள்.) பண்டிதர்களே. நீங்கள் பார்த்தீர்களா? காலையில் சண்டமாருதக் குழம்பைக் குண்டுமணியளவு எடுத்துச்சர்க்கரையில் கலந்துகொடுத்தால் எ-று, (ககநக)

வாதமுதல்வாய்வும் வரும்பித்தசேத்துமங்கள்
மர்த்விடாய்சூதகமு மாண்டுபோம்-கோதையே

அவரைதுவரை யரைக்கீரைதூதுளங்காய்
விரையில்லாக்கத்திரியை மேவு.

(இ-ள்.) வாதம் முதலியவாயுவும், பித்தமும், சேத்துமமும், மாதவிடாய் குற்றமான சூதகவாயுவும், நீங்கும் அவரைக்காய், துவரை, அரைக்கீரை, தூதுளங்காய், விரைபிடியாத கத்திரிக்காயும் ஆகும் எ-று. (ககருஉ)

விருத்தம்.

சம்பழத்தின்சாலதனில்கற்கண்டிட்டு சண்டமாருதக்குழம்பு குன்றிகூட்டி, நம்புதலாயதிகாலைதனிலேயுண்ண நாவரட்சிசுரதோஷஞ்சன்னிதீரும், அம்புவியில்மூன்றுநாளிச்சாபத்தியம் அகன்று விடுமாண்டைபிணியறையக்கேளீர், கெம்பிரதானமிதுவதிதவேகங் கேட்டீரோபண்டிதரேகேள்வியாண்டே.

(இ-ள்.) எலுமிச்சம்பழச்சாற்றில் கற்கண்டுபோட்டு அதில் சண்டமாருதக் குழம்பில் ஒருகுண்டுமணியளவு சேர்த்து அதிகாலையில் தின்னநாவரட்சி, சுரம் தோஷம், சந்நி, இவைகள் நீங்கும் இப்படி ந-நாள் கொடுக்கவேண்டும் இச்சாபத்தியம்வைக்கவேண்டும் இதனால் சர்வரோகங்களும் நீங்கும் இதன்மகிமைப் பண்டிதர்களே! நீங்கள் கேட்டீர்களா? எ-று. (ககருங)

வேறு விருத்தம்.

அதிவீரசண்டமாருதக்குழம்பிலொருகுன்றிஅவுழ்தந்தன்னில் துதிசெய்துமாவிலிங்க மூலமெனும்வேர்தயிலங்கழஞ்சிதூக்கி, விதியதுவாய் மிளகுசுக்குதிப்பிலிமென்பொடியிலத்தேன் விரவிக்கொண்டு சதிசெய்யும்வினையதுகாண்சச்சுவாய்வது தனைக்குருஞ்சாற்று

(இ-ள்.) வீரத்தன்மையுள்ள சண்டமாருதக் குழம்பில் ஒரு குன்றியளவு மாவிலங்கவேர்க் குழித்தயிலம்கழஞ்சிலக்கு,மிளகு, திப்பிலி இவைகளைப் பொடித்துத்தூவி தேன்விட்டுக்கின்றுகொடுத்தால் சச்சுவாயுவு சொஸ்தமாகும எ-று. (ககருச)

கதிசெய்யுங்குமரகண்டவ்பாரிசமும்பச்சைநொந்தி நமர்வாய்வோடு, மதிமயக்குமுசல்வலியும் காக்கைவலிமூர்ச்சையதும் வாதரோகம், இதுக்கதிதமுன்னிசிவுபின்னிசிவுபிரைப்பிரும லொயுய்ஞ்சுவாசம், அதிதமெனும்வாய்வுதனை யையஞ்சமோரமேவ மகுமாண்டே.

(இ-ள்.) கெடுதியைவிளைவிக்கின்றகுமரகண்டவலிக்கும்,முயல்வலிக்கும், காக்கைவலிக்கும், மூர்ச்சையை யுண்டாக்குகின்றவாத

ரோகத்திச்கும் முன்னிசிவுக்கும், பின்னிசிவுக்கும், இரைப்பிருமல் சுவாசம் இவைகளெல்லாம் சொஸ்தமாம் எ-று. (௧௧௫௫)

பட்சமிக்தப்படியவுழ்தமதிகாலையொருவேளைபாவித்தேதான் துஷ்டிவினைய ற்றுமஷ்டகுன்மவலிமூலமெட்டுந் துலைந்துபோகும் கஷ்டமென்ற கர்மமெல்லாமவுழ்தத்தாலகலுமெனுங் கருதினேங் காண், இஷ்டமெனும்பத்தியந்தா னியம்பிடுவீரன்ன மிதுவேளை தான.

(இ-ள்.) இவ்விதம் இவ்வெளஷதத்தை அதிகாலையில் ஒருபட்சம்வரைக்கும் ஒருவேளை சாப்பிட்டால் சர்வவினைகள் ஒழியும், அஷ்டகுன்மவலிமூலம்எட்டும்தொலைந்துபோகும்இதற்குபத்தியம் உரைக்கிறேன் எ-று. (௧௧௫௬)

விருத்தம்.

திரிபுரத்தைமெரித்தமதிரவியைப்போற்றி ஜெனகாதிரிஷிகள் பதினெண்பேர்போற்றி, கருதவித்துநாதவிந்துகமலம்போற்றிகன கரத்ததீபசுழிமுனையைப்போற்றி,மருமலரம்பிகைஞானகுருவைப் போற்றிமதிசகுண்டலிகமலபதமேபோற்றி,திருபமணிமகுடமுடி வானசோதி நிர்மலத்தாய்பதம்பணிந்து நிகழ்த்துவேனே.

(இ-ள்.) முப்புரங்களையும் எரியச்செய்த சந்திர சூரியர்களைப் போற்றிசெய்து ஜெனகாதிரிஷிகளையும், பதினெட்டுச் சித்தர்களையும் போற்றிசெய்து கரு உண்டான விந்துவின் கமலத்தைப் போற்றிசெய்து, கனகரத்தினம்போல் விளங்குகின்ற சுழிமுனையைப் போற்றி, அம்பிகையையும், ஞானகுருவையும் போற்றி செய்து, குண்டலிசத்தியின் கமலத்தைப் போற்றிசெய்து, நிர்மலமான ஆத்தாளின் திருவடிகளை வணங்கிச் சொல்லுகிறேன் எ-று.

பஞ்சாமிர்தக்குளிகை தரு.

பஞ்சாமிர்தக்குளிகையைப்பாரும்-பூபதியாண்டே
ரஞ்சிதநாதவிந்தாலுநா னுண்டுகண்டேன்.

(இ-ள்.) ஆண்டே! பஞ்சாமிர்தக்குளிகையை நீர்பாரும் இதுவே பூபதிகுளிகையுமாகும் அதின்மகிமையை நானே உண்டுதெரிந்துகொண்டேன் எ-று.

சஞ்சமலர்க்கணேசகமலபாதாரவிந்தஞ் செஞ்சொல் மொழி மெய்ஞ்ஞான திருவள்ளுவன்பிரபந்தம்-ஜெகமும்பணியமதியமிர்த பரிபூரண-திரிவம்பலமிகுஞ்சுழியின்முனைகருணை தெரிசித்தொழு மலர்சூடியும் வருஷித்துதிதமிழ்பாடியும் பஞ்சா

(இ-ள்.) கணேசன் திருவடிகளைத் தொழுது உண்மைஞானத்தையுடைய திருவள்ளுவன் பிரபந்தத்தை உலகத்தார்களெல்லாரும் வணங்கும்படி திருவம்பலத்தில் விளங்குகின்ற சுழிமுனையைத் தெரிசித்து மழையைப்போல் வருஷித்து தமிழ்த்துதிபாடியும்.

சூதங்கெந்திமால்தேவி துய்யபாஷாணலிங்கந்-தினுசொன்றுக்குப்பலந்தானிடையதும் தாகையஞ்சது கிளிகொண்டரு பத்ததுவுகமை-தொழுதுநாதமொன்றிடையமுரிநாலுமந்திடை சுகமெய்ப்பொருளதுசுத்தியில் தகமைப்படியனலக்கினி. பஞ்சா

(இ-ள்.) ரசம், கந்தம், அரிதாரம், வெள்ளைப்பாஷாணம், லிங்கம் இவ்வைந்தும் வகைக்கு ஒருபலம்கொண்டு கிழிகட்டி அமுரிச படி ஒருபாத்திரத்தில்விட்டு அதில் தொங்கவிட்டு எ-று.

வீரமென்றவிந்துநீர்காரமென்றநாதநீர்-வீரமும்பூரமுநன்றாய்மேவியும் விரவிய-சாடியிவிரவிமதியைச்சாடி-மிகவும்வைத்து நான்மூன்றுதெளியவைத்துநாளொடும் விபரத்துடன்கிளிதொங்கிட கமலாக்கினி யனல்வீசிட. பஞ்சா

(இ-ள்.) அக்கினியிலேற்றி நன்றாய்ச் சிறுதீயாக நான்மூன்று எரித்து எடுக்கவேண்டும் எ-று. (௧௧௪௰)

நீர்தொக்கிடநாதவிந்ததிதஅட்டுவொட்டுப்பு-திறமுந்தல்யமதிபோலவுதிலவுபோல்திகரிலகுதிசையிலுலகுமிகபுகழும் நெடியகனலமிர்தபடிகமெனும்லவனம்திகழ்பத்தொருகதிர்காந்தியில்துருவெண்மதிவொளிவீசவும். பஞ்சா

(இ-ள்.) அதினால் ஜலம்வரள மேற்படி சரக்குகளெல்லாம் நல்லகுணமான சுத்தியாகும் எ-று. (௧௧௪௧)

அஞ்சுபஞ்சபூதத்திலாடுஞ்சரக்கதஞ்சு - ஆனால்சுத்தியிதாண்டேயஞ்சுங்கட்டினமாச்சு-அமுரியுவர்க்கனலில்விபரமதுசலநீர்புகலரவியிஞெளிகிரமுஞ்செழுமையுருஅதுபந்தனமிதுசிப்பியில்வெகுபந்தன யுகையாய்வரும். பஞ்சா

(இ-ள்.) மேற்படி பஞ்சபூதசரக்குகள் ஐந்தும் சுத்தியாகவே கட்டினதாகும் அதினால் செம்மையும் வெண்மையுமாகும் எ-று.

இருவிகுஸ்திரநாபிநிருவிசாஸ்திரபேதி-யேலமிதஞ்சு வகையினமதும்-இடைபலமுமவ்விதகடல்நுரையுமிளகும் - மிருசிரகமுஞ்சுக்குவகையுமிடையுபலமெடுமஞ்சினை திடமித்தொருஇனமாமிவைமனமேவியசிர்.

(இ ள்.) இருவி, சூத்திரநாவி, நிருவிஷம், சாத்திரபேதி, ஏல ரிசி இவ்வைந்துவகைச் சரக்குகளும் ஐந்துபலம், அதிமதுரம்பலம் க, கடல்நுரை, மிளகு, கருஞ்சீரகம், நற்சீரகம், சுக்குஇவைகளும் வகைக்கு ஒருபலம், இவைகளை எல்லாம் எடுத்து எ-று.

சாதிக்காயும்பத்திரி செண்பகஞ்சவ்வாது - சட்டஞ்சந்தனங் கஸ்தூரிகுரோசனையுந்-தவளநிறமதிபடிகமடநெகனதனதுபசுமை யொளிகனலும்பூரமதுகாண்சனிதானிடை யிதுரோகணி யதுகால ரைபலமாவதும். பஞ்சா

(இ-ள்.) சாதிக்காய், சாதிபத்திரி, சண்பகப்பூ, சவ்வாது, புனுகு, சட்டம், சந்தனம், கஸ்தூரி, கோரோசனம், பச்சைக்கர்ப்பூரம் இவைகளும் ஒவ்வொருபலம், கடுகுரோகணி முக்கால் பலமும் எ-று. (௧௧௬௪)

சருதுஞ்சீனச்சரக்குவகைபலமரைகாண்-கடைசரக்கது வஞ் சங்கணக்காய்பலமதுகாண்-கடினம்வுனவுசரக்கதிதமது காலென கடூரமில்லாவகையுங் கருதுமைந்திடைகாணும்கவனத்துடனவலே சதுசயனத்துடன்சரிபார்த்திடை. பஞ்சா

(இ-ள்.) சீனகாரம்பலம் அரை எடுத்து மற்றுமுள்ள சரக்குகளையும் சரியாக நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும் எ-று.

கொச்சகம்.

மதிரவியுநாதவிந்து வந்தவரலாறறிய
மதியும்ரவிவாதபித்த மண்ணும்விண்ணுமேபடைத்த
மதியுங்கதிர்சோதிமின்னல் வாரிபொழிந்தேசொரியும்
மதியுஞ்சலசூஸ்திரமாய் வந்தவகைகாண்கிலரே.

(இ-ள்.) நாதவிந்துக்கள் வந்தவிதத்தை யுணர, வாதபித்தங்களையும், பூமியையும் ஆகாசத்தையும் உண்டாக்கின வாரி பொழிந்து சொரிகின்ற சூத்திரமாய் வந்தவிதத்தையாவரும் உணரமாட்டார்கள் எ-று. (௧௧௬௫)

கருதியதைநாதவிந்து கண்டுமனமென்றுருவை
திருமருவெண்சக்கரைபோல் தீக்ஷைபத்துஞ்சென்றதுகாண்
அருவுருபோல்அவ்வும்உவ்வும் அன்னந்தண்ணீருண்டபலன்
வருவதுமுன்போனதெல்லா மதிரவியாற்காண்கிலரே.

(இ-ள்.) நாதவிந்துக்கள் சூரியோதயத்தில் கண்டுமனமொருமித்துசெய்யத் தசதீக்ஷைகளும் சென்றன அவ்வும், உவ்வும் அன்னந்தண்ணீர் உண்டபலனும், இவைகளையெல்லாம் மதிரவிகளால் காணமாட்டார்கள் எ-று. (௧௧௬௬)

கலித்துறை.

நாலஞ்சொன்றாகி பிருதிவிநாத ரசமுறவாய்
மாலானஅப்பு மால்தேவிபுப்பு மதிரவியும்
மேலானதீப நதிமேவுஞ்சோதி மெய்க்குருவை
ஆலாலமுண்ட சிவனாலுஞ்சொல்ல அதுகழஞ்சே.

(இ-ள்.) பஞ்சபூதங்களின் குணங்களும், அவைகளின் காரியங்களும் ஒன்றாகிநின்ற தேஜோ மயமான குருவின் மர்மத்தைசிவனாலும் உணரமுடியாது எ-று. (௧௧௬அ)

இருபத்துஒன்று மொருமித்துசுற்றி யினிமருந்தை
ஒருமித்துநாடி யபிராமிபாத மொருபொழுதும்
அறுபத்தில்நின்று கமலாலயத்தி லருள்தனையே
புருவத்தினேரில் துரியாதீதத்தைப் போற்றினனே.

(இ-ள்.) சுத்திசெய்த இருபத்தொரு தினுசுகளையும் அரைப்பதன் பொருட்டு சுழிமுனையை வணங்கினேன் எ-று. (௧௧௬௯)

வெண்பா.

இந்தசரக்கதனை யிட்டுகுளிக்கல்லில்
விந்துகருநாய்த்தலைசன் வெண்மதிபால்-இந்தசரக்
காட்டியொருவாரமது தானதின்பின்தேசியின்பால்
ஆட்டியதுமுன்போலா மாண்டே.

(இ-ள்.) இவைகளை கல்வத்திலிட்டு தலைச்சன் குட்டிபோட்ட கறுப்பு நாய்ப்பாலால் ஒருவாரம் அரைத்து கழுதைப்பாலால்ஒருவாரம் அரைக்கவேண்டும் எ-று. (௧௧௭0)

தேசரியின்பால்விடங் கேட்டீரோ ஆண்டையினி
மேஷம்வெள்ளையாடதின்பால் விட்டு-கேசரியை
பொற்கமலமேவி பூமலரையான்பணிய
சொற்பரஞானமதி சொல்.

(இ-ள்.) பிறகு வெள்ளாட்டுப்பால்விட்டு ஏழுநாள் அரைக்கவேண்டும் எ-று. (௧௧௭௧)

விருத்தம்.

மதிநிலவுரவியொளிமருவுக்கன்பாலில்வாரமொருநாள்பிசகாமயனமாட்டி, கதிருதையமிஞ்சிரசமதனுலேழு கர்ப்பூரவெற்றிலைச்சாறதனிலேழாம், சிறுநீரைமூலமிகுத்தொன்றுகேட்டு சுத்தசலம்விட்டுஅனல்படியொன்றாக்கி குருகுமிந்தகியாமமிட்டு வாரமாட்டி கொடிதாகமெழுதபதங் குடோரியாண்டே.

(இ-ள்.) பிறகு எருக்கம்பாலில் ஒருநாள் மாட்டி, மறுநாள் தொட்டு காலையில் இஞ்சிச்சாற்றால் ஏழுநாளும், கம்மாறு வெற்றிலைச்சாற்றால் ஏழுநாளும், சிறுகீரைச் சமூலம் இடித்து எட்டுபடி சலம்விட்டு க-படியாகச் சுண்டக்காய்ச்சின கஷாயத்தால்ஒருவாரமும் அரைக்கவேண்டும் எ-று. (௧௧௭௨)

குடோரியெனுங்குளிகைநிழ லுலர்த்தல்வாரங் குடோரமில்லாசிறுபயர்போல் குளிகைசெய்து, மிடைபயறினிடையதுகாணிடைவெவ்வேறாய் இருந்தமருந்திடைகுறைந்தா லிதுவேகங்காண், மடையர்களேகவனமில்லாமதிவேறானால் மருந்ததுவுமிடைகுறைந்துமனிதர்க்கூட்ட, புடமதுகொண்டதுபொழியுங்காந்திவீசும்பொல்லாதகிராணிசுரதோஷமாண்டே.

(இ-ள்.) பிறகு சிறுபயறுபோலுருட்டி இந்த மாத்திரையை ஒருவாரம் நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும் அரைக்கச்சொன்ன விதியால் குறையாமல் அரைக்கவேண்டும் எ-று.

பாவமென்னசெய்தொழிலின்தோஷத்தாலும் படித்துகுருஆசானைப்பணியாதாலும், ஆவதென்ன அருள்பொருளுமறியாதாலும் அடுத்ததசதீக்ஷைகொண்டுஅமைத்ததாலும்,மேவிதிறப்பதுவாசல் திறவுகோலால் வெளியாகும்வெளியில்பரவெளியுங்காணும், தேவரிஷியோர்பணியுஞ்சுழினைதீபஞ்சேர்ந்தொருநாள்கடிகையொன்று தெரிசித்தேனே.

(இ-ள்.) செய்யும்வேலையின் கெடுதினாலும், ஆசானைப்பணியாததாலும் திருவருட்பொருளை யுணராதாலும், தசதீட்சைபெற்று அமைத்தாலும், வாசல் திறவுகோலால் வெளியாகும், அவ்வெளியில் பரவெளியுந்தோன்றும், தேவரிஷிகள் பணிகின்ற சுழிமுனைத் தீபத்தைச்சேர்ந்து ஒருநாள்கடிகை ஒன்றுவரைக்கும் தெரிசித்தேன் எ-று. (௧௧௭௪)

மாதரைவிட்டகன்றுகற்பமறியாதாலும் மவுனமென்றேவாசிகொண்டுமாறாதாலும், வேதனையாம்விந்துவிட்டொழிந்தாலும்வீண்வேஷமெடுத்துலகில்விறுதாவாலும்,பாதையறிந்தென்னகுறைபடிக்காதாலும்பாழ்யோனிக்காகமடிந்திடுவாராகில், சூதகவித்தையறியென்றருட்சத்தாலுஞ்சுகஞானபதவிதனிவ்சொக்கார்தானே.

(இ-ள்.) மாதரை விட்டுவிட்டு கற்பத்தை உணராததாலும், மவுனவாசியை மாறாததாலும், விந்துவை விட்டொழித்ததாலும், வீண்வேஷமெடுத்ததாலும் இன்னும் அநேகவிஷயங்களாலும்சுக ஞானபதவியில் சேர்க்கமாட்டார்கள் எ-று. (௧௧௭௫)

கொச்சகம்.

சாத்தியமென்றசன்னி சுரதாபசன்னிதானொழிய
மாற்றிவிடுமோஅவுழ்த மந்திரபஞ்சாக்ஷரத்தை
ஏற்றிவிடுமோர்குளிகை யிஞ்சிரசந்தனிலும்
கார்த்திடுநாள்மூன்றுதினங் காலையொடுமாலையுமே

(இ-ள்.) சாத்தியமாயுள்ள, சன்னி, சுரம், தாபசன்னி இவைகளை நீங்க ஒருகுளிகை இஞ்சிச்சாற்றில் மூன்றுநாள் இருவேளையுங் கொடுக்கவேண்டும். (ககஎசு)

தாந்திரிகசன்னிசுரந் தாபசன்னிவாதசன்னி
ஆந்தரிகப்பித்தசன்னி யையமெனுஞ்சேத்மசன்னி
விந்தைசுகசன்னிகுறி மேகமதுபோல்கறுத்து
சுந்தரமாய்பிரதாபஞ் சொல்லிதுயராற்றுமதே

(இ-ள்.) தாந்திரிகசந்தி, தாபசந்தி, வாதசந்தி, பித்தசந்தி, ஐயசந்தி, சுகசந்தி, இவைகளையெல்லாம் நீக்கும் எ-று. (ககஎஎ)

கலித்துறை.

வாதத்தில்மூன்று பித்தத்தில்ரெண்டு வன்னியொன்று
தாதுத்தமத்த மீரஞ்சுவாயில் சார்ந்ததெனில்
பூதந்தலைப்பட்டு நானாவிநோதம் புலப்படுமாய்
சாதந்தமிதுவறி யாமனுமாண்பர்கள் பேசுவரே

(இ-ள்.) வாதத்தில் மூன்றும், பித்தத்தில் இரண்டும், வன்னி ஒன்றும் தசவாயுக்களிற் சேர்ந்ததானால் பூதமானது வெளிப்பட்டு நானாவிநோதங்கள் தோன்றுவதாய், கிளைக்குமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் எ-று. (ககஎஅ)

மூலாக்கினிதன்னில் பித்தமும்வாதமு முன்னிழைந்தால்
காலாக்கினைகொண்டு வன்னியும்வாயுவுங் கருதினதாய்
வேலாக்கினைரண சூராதிவீர விகாரமந்தம்
பாராமல்பூத வேதாளம்போல் வந்துபாயுமதே

(இ-ள்.) பித்தமும், வாயுவும் முன்னதாக மூலாக்கினியில் நுழைந்தால் காலாக்கினிபோன்ற உஷ்ணத்தைப்பெற்று வாயுவும் அதிக்கிரமித்ததால் விகாரஞ்செய்கின்ற மந்தமானது வேதாளம் போல வந்துசேரும் எ-று. (ககஎசு)

வெண்பா.

வெள்ளெருக்குமாவிலிங்கு வேர்க்கொடியும்வேலிபுனல்
மெள்ளவிடுமுருங்கை வேர்பட்டை-உள்ளபடி.

இஞ்சியதின்சுரச மினியசரியஞ்சமிடை
அஞ்சபஞ்சபூதரச மாம்.

(இ-ள்.) வெள்ளெருக்கு, மாவிலிங்கு, கொடிவேலி, புனமுருங்கைவேர் இவைகளின் பட்டைகளின் சுரசமும், இஞ்சிச் சாறும் சமன்கூட்டி எ-று. (௧௧௭௯)

காலையதுமாலை கதிருதையகாலத்தில்
வாலைப்பருவத்தில்வரும் வாதசன்னி-காலைரனில்
இஞ்சியதோடஞ்சு மினியசுரசமதில்
அஞ்சிலொருகுளிகை யாம்.

(இ-ள்.) காலை, மாலை, உச்சி, இக்காலங்களில் வாதசன்னிக்கு இஞ்சிச்சுரசத்தில் ஒருகுளிகை கொடுக்கவேண்டும் எ-று.

வேறு-விருத்தம்.

விரவியனல்வெதுப்பியெட்டுக்கொருபங்காய்சுரசமதுமினிநீர் வாங்கி, துறவியெனுமமிர்தபஞ்சாட்சரமெனவுந்தொடுத்தவுழ்தஞ் சுகபோகிக்கு, நிறுவியெனுஞ்சன்னியதுவகைவிபர தோஷமதுந் தீருந்தீரா, ச்ரசமிந்தநீரதனிலிழைத்து மருந்திருவிழிக்குஞ் சூட்டிடரே.

(இ-ள்.) அந்தச்சுரசத்தைப் பாகப்படுத்தும்விதம் எப்படியென்றால, அனலினிடத்தில் வெதுப்பி எட்டில் ஒன்றாகக்குறுக்கிஅந்தச்சுரசத்தில் ஒருகுளிகை கொடுப்பதுடன், கண்களுக்குங் கலிக்கம்போடலாம் எ-று. (௧௧௮௨)

பனிநீர்போல்நீர்த்தாரைகடிகைதொண்ணூற்றுறுவிழி பகட்டிமூடி,இனியமருந்தனுபானஞ்சுரசமிருவேளையிடுமிழைத்துநாவில் சனியன்விடுஞ்சன்னிசுரந் தாபம்விடுந்தாந்தரீகந் தலைமேற்கொண்டா,மனிதனல்லவென்றுபுகைவற்றிவசியங்கள்செய்துமாற்றலாமே

(இ-ள்.) நீர்த்தாரை நோய்க்கு இந்தச்சுரசத்தில் வேளைக்கு ஒருமாத்திரையாக இரண்டுவேளைகளும் கொடுத்தால்அந்தரோகந் தீரும், தாந்திரீக சன்னிவந்து கூடினால் மேற்படியே மாத்திரை கொடுத்து புகையுங்கொடுத்தால் சாந்தமாம் எ-று. (௧௧௮௩)

வேறு.

சூஸ்திரசன்னிவாதந் தொடும்பித்தசேத்மசன்னி
வேற்றுமைபலதொந்தங்கள் விகாரத்தினிடரினாலும்
சேத்துமமிகவும்விம்மி சென்னியகனலுண்டாகும்
பார்த்திரோவேதஞான பண்டிதரறிகிலீரே.

(இ-ள்.) பலபல தந்திரமாய்வரும் சந்நிவாதமும்,பித்தசேத்ம சன்னியும் பலபலவான தொந்தரோகங்களும், இவைகளாற் சீதளம் மிகுதிப்பட்டு சிரசில் சீதோஷணம் ஏறித் துன்பமுண்டாக்கும் எ-று. (௧௧அ௬)

நாபியில்சூடுண்டாகி நற்குளஞ்சிதறிப்போகும்
நாபியில்வாதஞ்சேரில் நமனதாய்வாய்மீறும்
நாபியில்தோஷமெய்தும் நாவரட்சியுமேயுண்டாகும்
நாபியில்பித்தஞ்சேரில் நளிர்குளிர்சுரங்காணுண்டே.

(இ-ள்,) நாபிஸ்தானத்தில் சூடுஉண்டாகுமானால்தோஷத்தையடையும் நாபிஸ்தானத்தில் வாதஞ்சேருமானால் வாயு எமனாகும், இவைகளால் நாபியில் தோஷமுண்டாய், நாவறட்சியுமுண்டாகும் நாபியில் பித்தஞ்சேருமானால் நளிரும்,குளிர்சுரமும் உண்டாகும்.

கன்றிடுங்குடைச்சலண்டங் கதிர்மதியிடியுங்குத்தல்
அண்டிடுந்தாபசோப மருட்பிரள்கடுக்குங்கைகால்
குண்டியும்வாய்பித்தங் கொலைவயிறிடிக்குமுஷ்ணம்
கண்டிரோஆண்டேயிந்த காரசாரத்தின்வாறே.

(இ-ள்.) அதினால் குடைச்சலுண்டாகும், மண்டைஇடி, குத்தல், தாபம், சோபம், கைகால்கள் கடுத்தல், குண்டிக்காயில்வாயு, பித்தம், கொலையும், வயிறும்வலிக்கும், உஷ்ணமுண்டாம் இவைகளெல்லாம் மேற்படி காரசாரமருந்துகளால் வசப்படும் எ-று.

கொச்சகம்

குரோசனைகஸ்தூரிபச்சை குங்குமஞ்சவ்வாதுசட்டம்
அறுவகையிஞேர்பழந்தான் அறுத்ததனிலுங்குழைத்து
மாறுமணிமாத்திரைகாண் வைத்ததிலுந்தேனுமிட்டு
கூறதுவாய்மூன்றுதினங் கொண்டிருக்கலாமறியே.

(இ-ள்.) கோரோசனம், கஸ்தூரி, பச்சைக்கர்ப்பூரம், குங்குமப்பூ, சவ்வாது, புனுகுசட்டம், இந்த அறுவகைமணப் பொருள்களில் ஒன்றான புனுகுசட்டத்தினால் அரைத்துமாத்திரைசேர்த்து தேன்விட்டு ௩-நாள் கொள்ளவேண்டும் எ-று. (௧௧அ௭)

ஆரேமுசன்னியது மாகுமனுபானமதால்
ஈரேழுவாதசுர மிஞ்சிசுரசந்தனிலே
பாரேழுமேபடைத்த பஞ்சாமிர்தக்குளிகை
காரார்கனோசனருள் கர்மவினையேகிடுமே.

(இ-ள்.) இந்த அநுபானத்தினால் பதின்மூன்று சன்னிகளும் தீரும் வாதசுரமானது இஞ்சிசுரசத்தில்தீரும், இவைமுதல் கர்ம ரோகங்களும் பஞ்சாமிர்தக் குளிகையினால் கணேசனருளை முன்னிட்டு நீங்கும் எ-று. (௧௧௮௮)

கலித்துறை.

கொட்டாவியிட்டு விக்கலுமேப்பமுங் குன்மக்ஷயம்
ஒட்டாச்சயமீளை உப்பிசமன்ன விரோசனமும்
தொட்டால்வலிவயர் காசமுஞ்சத்தி சுவாசபித்தங்
கட்டோடுசன்னி சுரங்குளிர்குத்தல் கடல்புக்குமே.

(இ-ள்.) கொட்டாவியைவிட்டு, விக்கல், ஏப்பம் முதலியவற்றோடுண்டாகின்ற குன்மம், க்ஷயம், ஈளை, உப்பிசம், அன்னத்துவேஷம், பேதி வயிற்றுவலி காசம், சுவாசபித்தம் சன்னி, சுரம், குளிர், குத்தல் இவைகள் கடலிற்போய்விழும் எ-று. (௧௧௮௯)

ஆடாதொடைரச மாதண்டைத்தும்பை யதில்பூரசங்
கோடாசாலைரசம் பொற்றலையிஞ்சி குறிச்சிருமூன்
றுறுயசுரசம் வகைக்குப்பலங்கொண் டன்னீரினில்தேன்
நேராய்சரியிடை மாத்திரையொன்று நிகழ்த்திடுமே.

(இ-ள்.) ஆடாதொடைச்சாறு, ஆதண்டைச்சாறு, தும்பைப்பூச்சாறு கோடாசலச்சாறு, பொற்றலைக் கையான்சாறு, இஞ்சிச்சாறு இவைகளைக்கலந்து வகைக்குப் பலங் கணக்காகக் கொண்டு தேன் சரிஎடைவிட்டுக் கலந்து அதில் ஒருமாத்திரை கொடுக்க வேண்டும் எ-று. (௧௧௯௰)

உரைத்திருவேளை விழிக்கொருவேளை யோரைந்துநாள்
துரைப்படிநோய்க ளகல்வதுநன்று சின்னாட்கள்சென்றால்
முறைப்படிவர்த்தி புகைகொண்டுநாசி முடுக்குடனே
மறப்புனல்நீறு நதியாய்ப்பெருகி வழிந்திடுமே.

(இ-ள்.) இவ்வாறு இரண்டுவேளை கொடுத்து ஒருவேளை கண்ணுக்கும் கலிக்கம்போடவேண்டும். இப்படி ஐந்துநாள் செய்தால் நோய்களெல்லாம் விலகும் சிலநாட்களானால் வர்த்திபுகைபிடித்து நாசியிற்கொண்டால் நீர்வடிந்து சுகமாகும் எ-று. (௧௧௯௧)

வேறு-கவி.

சண்டமாருதக்குழம்பின்வேகஞ்சத கோடிகோடிவினைசருவி போங், கண்டபோதுசுரசன்னிதோஷங் கடல்புக்கியோடிவிடுங்காண்கிலார், விண்டவேதையிதில்சண்டமாருதமும் வெள்ளிசெம்பது

வெவ்வேறதாய், துண்டுதுண்டம்வராகனேரிடையுந் தூக்குவாய் தகடுகுக்ஷமே.

(இ-ள்.) சண்டமாருதக் குழம்பின் வேகத்தால் சதகோடி நோய்கள் விட்டொழியும் அவைகள் அரம், சக்தி, தோஷங்களாம் வெள்ளி, செம்பு இவைகள் வகைக்கு ஒருவராகனெடை சேர்ந்து உருக்கி தகடுநயப்பாக அடித்து எ-று. (கக௪௨)

ரசிதமாவதும் ஐவராகனிடை தகடிலிருந்தகுரு காற்பலம்
விசிதமாயமுரி யுடனும்வைத்துகுழை மேலுஞ்செம்பதுமே பூசிடு
கசிடுங்கதிரில் காய்ந்ததின்னுமியில காட்டுமெஞ்சமுற மாமெடு
நேசகிழதுமேல் வன்னிபிட்டுகனல் நீறினூடிபி னேர்மையே.

(இ-ள்.) அந்தவெள்ளியில் காற்பலம் சண்டமாருதக் குழம்பு கூட்டிக்குழைத்து செம்பின்மேற்பூசி சூரியனில் உலர்த்தி உமிப் புடம்போட்டு எடுத்துக் கொள்ளவேண்டும் எ-று. (கககூ)

நீறியாறியது பாருஞ்செம்பினெளி நேரிதுக்குவய தெட்டதாய்
மாறிசீவனமும் வாழ்வீர்நாடதிலும் வாசிவாவெனவும் ரேசிகாண்
வாரியொடுநில்ல வங்குசிங்கெனவு மாறிவாழ்வீர் கண்டதாரையில்
ஆசியண்டவரை கீழுமேலுமிது ஆவிநின்றிட மறிந்திடே.

(இ-ள்.) பிறகு ஆறினபிறகு பார்த்தால் வயசு எட்டாகும் அதைவைத்துக் கொண்டு ஜீவனஞ்செய்து வாழலாம் எ-று.

பாரும்செம்புபசும் பொன்னின்வர்ணமதுபரிசவேதைகுருபா
தைகாண், வாரிவெள்ளியதுவராகனூறு இடைவாங்கிடுங்குருவிற்
கால்பலம்,வேருமேமுரிவிட்டுமத்தியதுவெள்ளிமேலுந்தகடாதிதம்
போகுமேகதிரில் வாலைவீசகனல் போடுமுன்னுமுயல் புடமிடே.

(இ-ள்.) இந்தச்செம்பானது பசும்பொன்னின் வர்னமாகும் இதுநிற்க வெள்ளி நூறுவராகனெடை எடுத்து காற்பலம் சண்டமாருதக்குழம்பு தகட்டில் அமுரியினால் இழைத்துப்பூசி உமிப்புடம் போடவேண்டும் எ-று. (கககூந)

தகடுநூறுவரை கனலில்போடபுடந் தவளமென்றநிற ரசிதமாம்
முகடுமேவரா வயசுபத்தரையு மோடியாகிபொன் ஞணிதான்
அகடுமேயில்லையார் சீவனஞ்செய்து அம்புவிதனிலும் வாசதாய்
எகடுதன்வரா மவுனசாதனையி லெய்திடுமமுரி மாறிடே.

(இ-ள்.) மேற்படி தகட்டைப் புடம்போட்டதினால் வயசு பத்தரையாகும் அதைக்கொண்டு ஜீவனஞ்செய்துமௌனசாதனையில் இருப்பார்கள் எ-று. (ககக௭)

மாறிமாறிவர வாசியூதிவர வாசிவாசியதும் வீசியுந்
தேறிதேறியொரு நாளுநாளுமினி தேகசுத்திசித ரூமலும்
வாரிவாரிகட லாழியானசல மாறமாறசதிர் வாலைகாண்
சூரிசூரியனுந் தேகதேகமொளி சுரூபசூக்ஷசுக சுத்தியே.

(இ-ள்.) அம்மௌனத்தில் மாறிமாறி வாசியையூதிநாள்தோ றும் இடைவிடாமற்செய்து கொண்டிருந்தால் தேகமானது சொ ரூபசுத்தியை யடையும் எ-று. (௧௧௩௭)

வருஷமொன்றுமதி மாறமாறகதிர் வர்ணமாமதித வேதைகாண்
புருஷனோடுரதி போகமோகமது போலுங்காரசாரபோதனை
பரிட்சையாய்வருதல் காயதேகியெனும் பாடுபாடுவெகுபாடுகாண்
அருளிலங்குமதி சந்திரபுஷ்கரணி யமிர்தசஞ்சிவீயி னூட்டமே.

(இ-ள்.) ஒருவருஷம் வரைக்கும் சந்திரகலையை மாறி மாறி மாறிக்கண்டால் புருஷனோடு ரதிகலவைபோலாம். காரசார அனு போகம் வெகு பாடுபடக் கூடியதாகும் அமிர்தசஞ்சீவினூட்டம்.

நாலுங்கண்டுவெகுநாள்கள்சென்று உடல்நாடிநாடிவெகுநாளதும்
போலுங்கற்பமுணா ரம்புவிதனிலும் பூதலத்தில்சில ஞானிக
ளாலும்வாதரச போதனைச்செயலி லாவிதானுஞ்சுடு காடுபோய்
தேலுந்தேலிடினுங் காரசாரகுரு தேடிதேடியலை வார்களே.

(இ-ள்.) மேலே நான்கையுங்கண்டு அநேகநாள்சென்று சரீர த்தைநாடி வருந்தி சுடுகாடுபோய்ச் சேர்ந்தாலும் காரசார மார்க் கத்தைத் தேடித்தேடியே அலைவார்கள் எ-று. (௧௧௩௯)

மாதுயோனிதனில்வாழ்க்கைநாள்சிலது வாடிவாடிசிலமாய்கையா
ஓதுநாள்முழுதுமோடிமோடியுழன் றோர்களம்புவியிலோர்சிலர் [ல்
வாதினால்சிலதுநோய்களால்சிலது வறுமைபால்சிலதுநாள்கள்போ
ய், ஏதுகாய்ந்தளர்ந்தானபின்புசட மேதுநாள்தினமுமில்லையே.

(இ-ள்.) ஸ்திரீயின் கர்ப்பக்குழியில் சிலநாட்களிருந்துவாடிச் சிலமாய்கையால் உலகத்தின்மேல் ஓடிஓடித்திரிந்துவருந்தினார்கள் வாதினால்சிலரும், நோய்களால்சிலரும் வறுமையால்சிலரும், ஆகை யால் இப்படி காலங்களெல்லாங் கழிந்துவீண் ஆனார்கள் எ-று.

சயிலமஞ்சும்ரவி கானலுண்டுவர தானுந்தன்னறிய லாகுமோ
சபிலமாதுவின் சாரமாவதனில் சத்தும்சித்தும்விளை யாடலாம்
சயிலங்காணுதக தயிலஞ்சுண்டுஞ்சை தன்னியத்தில்மனஞ்சாரிடா
சயிலமஞ்சுமது தானேதானதுவாய் தாதும்வலுவதாகுமே.

(இ ள்.) பஞ்சமலைகளும் சூரியன் கானலைப் புசித்துந் தன்னை த்தானறிதலாகாது அதுகைகூடினல் சத்துஞ்சித்துங்கலந்து விளையாடலாகும் சைதன்யத்திலும் மனஞ் செல்லுவதாகும் இதனல் தாதுவும்வலிவாகும் எ-று. (கஉ0க)

வேறு விருத்தம்.

மூலகுண்டலி மும்மதவாரிசூழ்
ஆலமுண்டயான் மால்திருபொற்பதம்
வாலிகுண்டலி மாமுகனைத்தொழ
சீலமாமலர் சேவடிபோற்றுவாம்.

(இ-ள்.) மூலாதாரத்தின்கண் தூங்கும் குண்டலிசத்தி, ஆலகாலத்தை உண்டவன், பிரமன், விஷ்ணு விநாயகன் இவர்களுடைய திருவடிகளைத் தொழுது வணங்குவோம் எ-று. (கஉ0உ)

அண்டரண்டபகிரண்டமண்டல அகண்டகுண்டலியின்பொற்பதம்
நின்றிலங்குமதி வாரிசூழ்மருவி நிகழுலாவியவன் நிர்மலம்
கண்டதாரையுட லாதியந்தசுழி கருணைஞானதமிழ் கருதயான்
தென்றலாவிகதிர் திருப்பரங்கிரியிதிசைமுகன்கமலம்போற்றுவாம்

(இ-ள்.) அண்டரண்ட பகிரண்டங்களிலும் வியாபித்திருக்கின்ற அகண்ட குண்டலியின் பொற்பாதங்களும், நிர்மலத்தின் பொற்பாதங்களையும், போற்றி இத்தமிழைப் பாடுதற் திருப்பரங்கிரியில் சதுமுகனை வணக்கஞ்செய்வோம் எ-று. (கஉ0௩)

வே று.

வெற்றிதருஞானவெட்டி ஆயிரத்தைம்பதுக்கு மேலாமஞ்சில்
சித்திதருங்காயகற்பநாலாண்டுசென்றதின்பின்செனித்தநோய்க்கு
முத்திதருமவிழ்தமொடு வாதவயித்தியமுமுப்பு முடித்தவாறும்
சத்தியமாமமிர்தமுண்டு சண்டனையுஞ்செயித்துநிலைசாதித்தேனே.

(இ-ள்.) ஜெயத்தைக் கொடுக்கின்ற ஞானவெட்டிஆயிரத்தைந்நூறு நாலாண்டு சென்றபிறகு காயகற்பங்கைகூடும் இந்தநூலில் ஔஷதங்கள், வாதங்கள், வயித்தியங்கள், முப்புமார்க்கங்கள்முதலியவைசொல்லும் இதனல் எமனையும் ஜெயிக்கலாம் எ-று.

இத்தலத்தில்முன்னோர்கள் மறைத்தமறைப்பொருள்களெல்லாமியம்பலானேன், கற்றறியார்கற்றுணர கற்பசித்தியோகசித்தி காயசித்தி, சித்ததிதசத்துஞ்சித்து மித்துருசத்துருக்களின்செய்தியெல்லாம், முத்தமிழால்குருமுனிபின வுங்கிரகமிருந்தநல் முடிந்ததாமே.

(இ-ள்.) இந்த உலகத்தில் பூர்வாசாரியர்கள் மறைத்தசிலவற்றைநான் சொல்லத்துணிந்தேன் ஆனுல் அவைகளையாவரும் கற்றுணரமாட்டார்கள், அப்படி கற்றுணர்ந்தால் அநேகசித்திகளையடைவார்கள், இவைகளெல்லாம் எனக்கு குறுமுனிவருடைய அனுக்கிரகத்தினுல் முடிந்தவைகளாம் எ-று. (௧௨0௫)

முடிவதுமெய்ஞ்ஞானகுரு பரனருளாலாறண்டு முடியவேணும், வடிவுடையவம்பிகை வாலாம்பிகைப்பெண்ணருள் இந்நூல் மவுனந்தன்னில், கெடிவீரசிங்கமெனு ஞானவெட்டியா லமைத்த கீர்த்திதன்னும், படிபடியாயெய்துவதிரவியதனுல் பதம்பெற்றுப் பாரில்வாழ்வார்.

(இ-ள்.) அவ்வாறு முடிவது ஞானகுருவின் அருளினுலாகும் ஆறண்டு பழகினுல் வாலாம்பிகையின் கிருபைமேலிட்டு ஞானவெட்டியா லமைத்த கீர்த்தியினுல் படிப்படியாய் சகலசித்திகளுங்கைகூடும் கற்பஉணவோடு உலகத்தில் வாழ்வார்கள் எ-று.

இற்பிறப்புமகற்றகற்பம் வாகியதுநிலைத்துவிட இயம்பலானேன்
சற்பமதின்சாரையினுல் சருகினதாலிடையூறு சார்ந்ததாலும்
கற்பமதையுண்டுவருங் காலமதிலவபத்தியங் கருதுங்காலை[ண்டே
உற்பனநோய்வயித்திடினு மதற்குவயித்திய அவுழ்தமுரைப்பேனு

(இ-ள்.) இந்தச் சென்மத்தை யொழிக்க கற்பஞ்செய்ய வாசிநிலைக்கவழி சொல்லலாம் சாரையால் இடையூறு உண்டானுலும் அக்காலத்தில் அபத்தியம் நேரிட்டாலும், ரோகங்கள் உதித்தாலும் அவைகளுக்கு ஔஷதங்கள் சொல்லுகிறேன் எ-று.

கற்பமுண்ணுங்கால் அபத்தியநேரிடுமாகில்

அதற்குவயித்தியம்-தரு.

வயித்தியம்பாடுகிறே ணுண்டேகேளீர்-வயித்தியம்பாடுகிறேன்.

(இ-ள்) ஆண்டமாரே! நான் வயித்தியம் பாடுகிறேன். அவைகளை நீங்கள் கேளுங்கள் எ-று.

வயித்தியம்பாடுகிறே னுயித்தியமாகவுஞ்,சுயித்தியமாம்பித்தசாபசோபந்தீர, பயித்தியகாசமும்பாண்டுசோகையுஞ்சொரி, பச்சைகிரந்திகாமாலை பறந்துவிட்டோடவும். வயி

(இ-ள்.) யுத்தியாகப்பாடும் வயித்தியமாவது, பித்தம்,தாபம், சோபம், பித்தகாசம், பாண்டு, சோகை, சொறி, கிரந்தி, காமாலை இவைகளைப்போக்கும் எ-று. (௧௨0அ)

மூலப்புளிதனையும் முறைவாய்மைபோலரைத்து, முருட்டியெ
டுத்துருட்டித் திரட்டிக்காலைமாலையுஞ், சாலவும்பித்தமுஞ்சோகை
க்ஷயமுமதிககாசந், தானெனும்பரந்தோடவு நானெனுமுரைத்தே
னுண்மிட. வயி

(இ-ள்.) மூலப்புளி என்னும் பொருளை கிரமப்படி அரைத்து
திரட்டி இருவேளையும் கொடுத்தால் பித்தசோகை, க்ஷயம், காசம்
இவைகள் பறந்துபோகும் எ-று. (கஉ0௯)

சுக்குடன்வாதமடக்கிதிப்பிலிஓமத்துடனும், உக்கிரமதாகுமு
ருக்கன்பூவதுஞ்சேர்த்தரைத்திவை,பக்குவமாகியகாலைமாலையும்வி
டாமலுண்ண, உக்கிரமதாகியநோய்க ளோடியும்பறக்குமாண்டே.

(இ-ள்.) சுக்கு, வாதமடக்கி, திப்பிலி, ஓமம், முருக்கம்பூ இவை
களைச் சமமாகச் சேர்த்தரைத்து இரண்டுவேளையும் தின்ன நோய்
களெல்லாம் ஓடிப்போகும் எ-று. (கஉக0)

அண்டவாதங்கள்வாய்வு அசிரணத்தால்பேதியு,மையிருவாய்
வரோசிகமதிகமாய்க்கடுக்கு,மண்டைபிடியுஞ்சூலைகிரந்தியரையாப்பு
டன், வாதமும்பித்தசேத்ம மாறிடுநோய்களாண்டையே. வயி

(இ-ள்.) விரைவாயு, அஜீரணபேதி, அரோசகம், மண்டையிடி
சூலைகிரந்தி, அரையாப்பு, வாத, பித்த, சேத்துமநோய்கள் ஆகிய
இவைகள் நீங்கும் எ-று. (கஉகக)

பூரணமாமதுவைந்துபுனலாவதுவைந்து, பொறியாவதுமைந்
துபுளியைந்துகாயைந்து,ஆரணமாகவரைத்துஅமுரிவிட்டரைத்து
ண்ண, அலறியோடிவொளிக்குமதிதநோய்களாண்டையே. வயி

(இ-ள்.) ஐந்துபுலன்கள், ஐந்துபொறிகள், இவைகளை அமுரி
யினால் அரைத்துண்டால் சகலநோய்களும் ஓடியொளிக்கும்எ-று.

காரியசெந்தூரந்தனில் உப்பைச்சேர்த்து அண்டக் கருவினால்
அரைத்துருட்டி இருவேளையும் உண்டால் எமன்போல்வரும் நோ
ய்களெல்லாம் நடுங்கிஓடும் எ-று.

(இ-ள்.) காரியசெந்தூரத்தில் உப்பைச்சேர்த்து அண்டக்கரு
வினால் அரைத்துருட்டி இருவேளையும்உண்டால்எமன்போலவரும்
நோய்களெல்லாம் நடுங்கிஓடும் எ-று. (கஉகஉ)

காலையிலிந்துப்புடனே சறியுப்பிட்டுப்பதுவுங், கடுக்காயுடனை
ரைத்து கலக்கியமுரிதனில், ஞானமேகொள்ளவுங் குன்மநாடியே
க்ஷயங்களோடி, தேடியேபறக்குநோய் சேதியைக்கேளு மாண்
டையே.

(இ-ள்.) காலையில் இந்துப்பு, சறியுப்பு, அட்டுப்பு, கடுக்காய்
இவைகளைச் சேர்த்தரைத்து அமுரியில்கலக்கி இருவேளையுங் கொ
ள்ள குன்மம் க்ஷயங்கள், நீங்கும் எ-று. (கஉகச)

கருவிழுதியின்வேரிலோடியேவடவேர்ப்பட்டை, கானகந்தனிலுமிச்சங் காணுவோர்மதியில்கொள்வோர், ஆலகாலவிஷத்தினமுரியதின்மேற்கொள்ள, வாலவயதுண்டாகுங் காலனில்லையே ஆண்டே. வயி

(இ-ள்.) கருப்பு விழுதியின் வடக்குவேர்ப்பட்டையை அரைத்து அமுரியில் கலக்கிக்கொள்ள பாலப்பருவமுண்டாகும், ஏமன் வருதலில்லை எ-று. (௪௨௧௫)

கருவசளையுங்கைப்பு காணுவோர்மேருகள்தோறுங் காடுகள்தோறுந்திரிந்தால்காணுமோகருவசளை, திரிபுவனந்திரிந்துங்காடலைவோர்தமக்கு, செழுந்தேன்பொழியுமேசொல்வீரிம்மூலிபார்.

(இ-ள்.) கசக்கின்ற கருவசளை எங்குங் கிடைக்கமாட்டா.

வசளைவால்மிளகுடனாத்தைவாதமடக்கி, வரிசையதாய்கழஞ்சிவாங்கிடுமனல்வெதுப்பி, வசளையதுசரக்கும்வாங்கித்தூளதாய்ச்செய்து, வாயிபெனுமமுரிவார்த்து விட்டாட்டிமைபோல் வயி

(இ-ள்.) அந்தவசளை, வால்மிளகு, சன்னராஷ்டம், வாதமடக்கி, இவைகள்வகைக்கு ஒருகழஞ்சுவாங்கி அமுரியினுல்அரைத்து

கதிர்மதியும்வருதலுவகையாக்காலைமாலையும்,கருதிசுண்டைக்காய்பாகங்கண்டுகளிகூறவும்,உதையமண்டலமுண்ணபற்பதமதனிலூட்டி, ஒருபணவிடைகொண்டு உணர்ந்துயோகஞ்சாதித்தால்.

(இ-ள்.) இருவேளையும் சுண்டைக்காய் அளவு ஒருமண்டலம் வரைக்கும் உண்டால் பற்பம்பணவெடை வைத்து உண்டுயோகஞ் சாதித்தால் எ-று. (௧௨௧௮)

நீலக்கொடியின்வேருஞ் சாதிப்பத்திரியேலம், நேர்சமனது வகையதுவுஞ்சேர்த்தெடுத்து, ஞாலமதினீர்விட்டுரசனைக்கவனமாட்டி, நாற்பதுநாளிருவேளை நாவேயுண்டுவிட்டோங்காண். வயி

(இ-ள்.) நீலோற்பலக் கொடியின் வேரும், சாதிபத்திரியும், ஏலமும், சமனுக எடுத்து சலத்தாலரைத்து நாளொன்றுக்கு இருவேளையாக நாற்பதுநாள் உண்டோம் எ-று. (௧௨௧௯)

கறுப்புக்கையாந்தகரைகருஞ்சீரகமுஞ்சுக்கும்,கடுக்காய்தோடுங்கழஞ்சி வகைக்கிவ்விதமாகும்,நறுக்கியமுரிதனிலுடனுண்டிருவேளையும், உபமாய்மண்டலங்கொண்டு உணர்வீரென்னுண்டையே கேள். வயி

(இ-ள்.) கரியகரிசலாங்கண்ணி, கருஞ்சீரகம், சுக்கு, கடுக்காய்த்தோல் அமுரியினுல் அரைத்து நாளொன்றுக்கு இரண்டுவேளையும் ஒருமண்டலம் தின்னவேண்டும் எ-று. (௧௨௨௦)

கனகாம்பரமெனவுங்காசிடைகாண்வேரின்தோடுங்கடுக்காய்
கற்ககிடசிங்காசிடைகணக்கதாகும், செனகாதிதமேவிய அமுரிய
தனலாட்டி, தினமுமிருதன்வேளை யொருமண்டலமுமுண்ண.

(இ-ள்.) வேரின்தோல் காசெடை, கடுக்காய்த்தோல். சுடுக்
காய்ப்பூ, இவைகள் வகைஒன்றுக்கு காசெடை எடுத்து அமுரியி
னால் அரைத்து நாளொன்றுக்கு இருவேளையாக ஒருமண்டலம்
உண்ண எ-று. (௧௨௨௧)

காட்டுமுளகருணை கருத்திலகப்பட்டாக்கால், கறுப்பா யிரு
ந்துகண்டால் பொறுப்பாய்சமூலம்வாங்கி, கூட்டுமிளகு சுக்குங்
குரோசனையுங்கஸ்தூரி, கொடுத்துப்பணமரைதானெடுத்துமதிநீர்
விட்டே. வயி

(இ-ள்.) காட்டு முளகருணைகிடைத்தால், அதுவுங் கறுப்புக்
கிடைத்தால் அதின்சமூலமும், மிளகு, சுக்கு, கோரோசனம், கஸ்
தூரி, இவைகள் வகைக்கு அரைப்பணவெடை எடுத்து மதிநீர்
விட்டரைத்து எ-று. (௧௨௨௨)

மதிநீர்விட்டுமயன மதுபோல்மெழுகுபதம்,வருதலிரண்டுவே
ளை மகிழுமண்டலங்காணும், விதிபிறந்தோர்தமக்கு விட்டகுறை
வந்தெய்தும், வேதசாஸ்திரத்திலுள்ள விசிதமிதுவறியும். வயி

(இ-ள்.) மயனபதமானபோது எடுத்து நாளொன்றுக்கு இர
ண்டுவேளையாக ஒருமண்டலம் கொள்ளவேண்டும் எ-று.

விருத்தம்.

காஞ்சபுளிதனையெடுத்துத்தூளாய்செய்துகம்பியுப்புக்கிடைக்
கிடைதான்கலந்துவுண்ண, துஞ்சலென்றகுன்மமெல்லாம் பறந்து
ஓடுஞ்சுணங்கனுக்கு ஈயாதேதோஷமெய்தும், ஒஞ்சலென்றபுளிய
முரிசாரணையுங்கூட்டி யுண்டிடவுநோய்பறக்கு முடனேதானும்,
அஞ்சாதநோய்களெல்லா மமுரிதன்னால் அலரியதுமுடலைவிட்டக
லுமாண்டே.

(இ-ள்.) காய்ந்தபுளியைத் தூள்பண்ணி கம்பியுப்புக்குச் சம
னாகக்கூட்டிக் கலந்துண்டால் குன்மங்களெல்லாம்நீங்கும், இன்னு
முள்ள ரோகங்களும் உடனேநீங்கும் எ-று. (௧௨௨௪)

அகலவும்பத்தியங்காணுமருளக்கேளு அவுழ்தமதில் கோளாறு
அனேகமார்க்கம், புகலவுநாதாக்களுரைத்தமிர்தவாக்கியம் பூட்
டினார் வெகுநூல்கள்புனிதமாக, விகற்பமில்லாமலுரைமறப்பாய்ப்

போச்சு வெளியாகப்பாடியுமேவிகற்பமாச்சு, உறையதுவாயுரைத் திடுநூல்செய்தியெல்லாம் உரைதவறுதுரைத்துவிட்டாரொளியாய்த் தானே.

(இ-ள்.) அதற்குப்பத்தியம்:—ஔஷதத்தின் கோளாறுகள் அநேகவிதம் இது நாதாக்கள் சொன்ன வாக்கியமாகும். இதை வெட்டவெளியாய்ப் பாடினதினால் விகற்பமாச்சு, அப்படி யிருந்தும் நூலைத்தவறுது சொன்னார் எ-று. (௧௨௰௫)

காலசருங்கையெரியுங்கண்வாய்கூசும் கண்டமதுபச்சை புண்ணிதங்காணும், ஆலவிடந்தீண்டினதுபோலாந்தேகம் அசதிமெத்ததீபனமதிகங்காணும், வாலையொருதிங்களூ மூன்றுச்சுதானால் மயக்கமெனும்பேதியதாமனந்தராளாது, கோலமெனுமனதுமேறேறவேணுங் கொடிதாகக்கொண்டறிந்துகொள்ளலாமே.

(இ-ள்.) காலசரும், கையெரியும், கண்கூசும், வாய்கூசும், கண்டம், பச்சைப்புண்போல் நோவும், விஷந்தீண்டினாற்போல் சரீரம் ஆகும், சரீரம் அதிகஅசதியாம், பசிஅதிகப்படும், இப்படி ௩-மாதங்கள் இருந்தால் பேதி ரோகம் உண்டாகும், இவைகளுக் கெல்லாம் மனந்தேர்ச்சியை யடையவேண்டும் எ-று. (௧௨௰௬)

உள்ளிருந்தநோய்களெல்லாம் வெளியேகாணும் உடம்பெல்லாம்புண்ணாகவெந்துநீறு, மெள்ளளிலைபோல்மேனியெல்லாந் தடித்துக்காணுமஇந்திரியமுடைந்தல்லோதண்ணீராகும், கொள்ளியால் சுட்டபுண்போல்நாபிவேகுங் குமட்டுவதாலவுழ்தத்தைக் கொள்ளாட்டாது, துள்ளிவிழுந்தாலறுமதாமெரியுந்தேகம் சுருக்கெனவும் நீர்கடுப்புந்தோன்றுந்தானே.

(இ-ள்.) உள்ளிருந்த நோய்களெல்லாம் வெளிக்கிளம்பும்,உடம்பெல்லாம் வெந்துபுண்ணாகும், சரீரம் எல்லாம் தடிப்புஉண்டாகும், இந்திரியம் உடைந்து தண்ணீராம், நாபி கொள்ளிக்கட்டையினாற் சுட்டபுண்போலாகும் இவ்வளவும் ஔஷத வேகத்தினால் உண்டாவதாகும், நீர்க்கடுப்பும் உண்டாகும் எ-று. (௧௨௰௭)

ஒட்டொட்டாய்மேனியெல்லாங் கடுப்புத்தோன்றும்ஊதுமது நீர்த்தாரையுடனேபுண்ணாங், கட்டிவைத்தபழங்கனிபோல்தேகங் காந்துங் கலகலென்றுநரம்பெல்லாந்தளர்ந்துகாணும், முட்டியல்லோவாய்வுஅங்கேயேறிமீளும் முறைமையைந்து திங்களுக்குளொருமையாகும்; ஒட்டியம்போல்மட்டமிலான்தன்னை நம்பிஓங்காரபீடமதிலூறிடாயே.

(இ-ள்.) சரீரம் முழுமைக்கும் கடுப்புண்டாகும், உடனேநீர்த் தாரை புண்ணாகும், பழம்பழம்போல் சரீரங்கன்றும், நரம்பெல் லாம் தளர்ந்துவிடும், வாயு ஏறிஇறங்கும், ஐந்துமாதங்களுக்குள் குணமாம் பெண்ணைநம்பி ஓங்காரத்தின்கண் மனத்தைவைப்பாய்.

கற்பமுண்ணும்போது நோடுந்துன்பம் தரு.

தனனந்தன தனனா-தான-தத்தனந்தான தனதனனா.

அண்ணமாரேகேளீரோ-அந்த-அஞ்சுதிங்கள் படும்பாடதனில், என்னவென்றுயானுரைப்பேன்-நல்ல-இடிபோலிடிகள் முழங்கிட வே, மன்னமன்னர்கூடியல்லோ-நல்ல-மல்லுபித்தியங்கள்வளர்ந்த துபோல், தன்னுடலுந்தன்னுதல்ல-விந்து-தாமரைதண்ணீர்போல் தான்வருதல்,சொன்னேன்படும்பாடு-இந்நூல்-சூதென்றுந் தள்ளி டலாகாது,உண்டால்தெரியுமதாம்-அமுரி-உடலுக்குள் தொண்ணூ ற்றறுவருமே, சென்றுபித்தியங்காண்-மீளா-சித்திரவதையினைதநீ யறிந்து, பண்டுபழகினதால்-பின்பு-பாவையருடன்சேராதே.

(இ-ள்.) அண்ணன்மாரே! கேளுங்கள், அஞ்சுமாசங்கள் படு கிற கஷ்டத்தை நான் எப்படியென்று சொல்லுவேன் நல்ல இடிக ளைப்போல் சத்திக்க நல்லயுத்தம் உண்டாக்கினதுபோல, தன்சரீ ரம் தன்னுடையதல்ல, விந்துதாமரைத் தண்ணீரைப்போல் வரு தல் இவ்விதம் படும்பாட்டைச் சொன்னேன் இந்நூலைச்சூதான தென்று தள்ளிடக்கூடாது அமுரி உண்டால் உடலிலிருக்கின்ற தொண்ணூற்றாறு பேரும் கஷ்டப் படுத்துவார்கள், ஆகையால் இதை உணர்ந்து பெண்களுடன் சேரவேண்டாம் எ-று.

கண்டாலும்பேசாதே-மெத்த - கடினமதாம்பேதி தாளாது, நரம்புஎலும்புகளும் மச்சைநாடிகளுள்ளபசைகளும்போம்,கரும்பு முறிந்ததுபோல்-அஸ்தி - கட்டுதளர்ந்துவிட்டுவிடுங்காண், துரும் பாகிடுஞ்சடலம் செல்லுத்-தூணையெரித்ததுபோல்காணும்வருமே யனேகம்வினை மட - மாதுமயல்கொண்டணுகாதே, அந்தியினிற் கொள்வதற்குபுளி சந்திற்கிடக்குதுதானறிந்துந் தன்னைப்போலிரு க்குமதாங்கற்பந் - தானேயறிந்திடும்பேர்களுக்கு முன்னமேயான் சொல்லிவிட்டேன்-அந்த-முக்கோணமாகியகேசரியை. தன

(இ-ள்.) அவர்களைக் கண்டாலும் பேசவேண்டாம் பேதிபெ ருகும் நரம்புகளும், எலும்புகளும், மச்சைகளும், நாடிகளிலுள்ள ரத்தப்பசைகளும், போய்விடும், கருப்பானது ஆலையினிடத்தில் முரிந்து விடுவதுபோல எலும்புகள் கட்டு தளர்ந்துவிடும், சரீரம்

தூண்களைச்செல்லரித்ததுபோலாகும், இவைகளெல்லாம் பெண்க ளின் மாய்கையினால் நேரிடுவதாகையால் அந்தமாய்கையை விட்டு மாலையினில் மூலப்புளி கற்பங்கொள்ளவேண்டும் எ று.

அன்னம்போலினமயிலாள் அந்த-அம்பிகைபாதத்தை நம்பி னேன்யான், என்னைப்போலெளியவர்கள்-இனி-எங்கெங்குமுண்டு பார்வையகத்தில் சாதியில்விந்தீஸ்பரன்காண்- எந்தன் - தாயோப ராபரைதானளித்த, வேதியர்குலங்காணும்-பிர்ம- வேதவேதாந்த விதித்தகுலம்,நாதன்பரகுருவாம்-பிரமநாதாந்தத்திலவதரித்தோர் பேதாபேதங்களெந்தன் சாதி பிரபல்லியமெவராரறிவார், ஆறுந் தான்திங்களினுந் தேகம்-அசதிகள்மெத்தவுறக்கமதால், மாறுதது மக்க-மங்கமாதிதமுதமுமனல்தேகமதே. தனனுந்

(இ-ள்.) அன்னநடையையும் இளையமயிற் சாயையுமுடைய அம்பிகையின் திருவடிகளை நான்நம்பினேன் ஆகையால் என்னைப் போல எளியவர்கள் இவ்வுலகத்திலிரார், நானேசாதியில் விந்தீஸ் வரன், என்னுடையதாயோ பராபரையாவள், என்னுடைய குல மோ வேதியர் குலமாம். ஈஸ்வரனே பரமகுருவாகும், எங்களு டைய சாதியின் பிரபல்லியத்தை யாவர் அறிவார்கள்? எ-று.

தோராதுடல்கூசுந் தொண்ணூற்றாறுகருவியுறுஞ்சோபமதாம் வேறாய்வெவ்வேறுபடுத்தி-மாது-வேதனைபோலுடல்வேசாறும்,வீ றுடன்பசிகோபங் கனல்-வேகமெத்தகாணும்பூரணத்தில், கூறுட னறிந்துகற்ப மதி கொண்டாலல்லோ தேகக்கூறுகாணும், தேறு மேழுதிங்கள்மாது-செல்வமயக்கங்கள்பொல்லாதுபேறுபெற்றறிந் தோர்கள்-பிர்மகற்பமதின்கூறுபிரயல்லியமே,யெட்டாந்தான் திங் களிலும்-மெத்த-கொட்டாவிவிட்டாலுயிர்போகும், பட்டால்தெரி யவரும்-பாடு-பட்டதனுல்பாலையாவதுகாண். தனனுந்

(இ-ள்.) இவ்வாறு கற்பமுண்டால் தொண்ணூற்றாறு தத்துவ ங்களும் வெவ்வேறாய் நிற்கும், பசி, கோபம், கனல் இவைகள் அதி கப்படும் தேகம்வந்தகூற்று நன்றாய்க்காணும். இவ்வாறு ஏழுமா தங்கள் சென்றால் பிரமகற்பத்தின்கூறு பிரபல்லியமாயிருக்கும், எட்டாவது மாசத்தில் கொட்டாவிவிட்டால் உயிர்போகும். பட் டால்தான் அருமை தெரியவரும் எ-று. (௧௨௩௨)

விட்டால்விந்துவெந்திடுங்காண்-விணை மீளாதுகாமக்குரோத த்தினுல், கெட்டாருலகருமே-மாது-கேஸரியோனிதனில்கேவலமா ய், ஒன்பதுகாண்திங்களிலே-பின்-னுபாயமதாகவுநதேறவேணும்,

ஜென்மவினைப்பயன்போகுஞ்-சிவ யோகராஜாங்கச்செயல்காணும்
பொன்போலுடல்விளங்கும் மாயப்-போதனைகண்டவர் போய்மீ
ளார், ஐம்பூதமாரறிவார்-மதி-அப்புஅறிந்தோரவர்மாளார்பத்தா
ந்தான்திங்களிலும்-துயர்-பாலன்படும்பாடு மெத்தவுண்டு, கற்றூர்
கவியார்காணியங் கற்பங்-காயசித்திபெற்றல்காலனில்லை. ௩௯

(இ-ள்.) விந்துவை வெளியில் விட்டால் அதுவெந்துபோகும்
செய்தவினை நீங்காது ஆகையால் உலகத்திலுள்ளவர்கள் காமாதி
களால் கெட்டார்கள். ஒன்பதாவது, பத்தாவது மாதங்களில் பிள்
ளை படுந்துயரும் மிகவுங்கொடியது எ-று. (௧௨௩௩)

வித்தால்விளைவுமுண்டு-மிகு வேதனைமெத்தவெகுபாடு, சற்று
கிலும்பொறுக்காச்-சடஞ்-சாக்காடுசாகாதிருப்பதுபார், உற்றுரு
றவின்முறை சுற்றத்-தார்களொருதுணையானறியேன், இதுக்குமரு
ந்ததுவும்-புவியில் - எங்குமில்லைகருகண்டறியார், உதவாதினியறி
யேன்கற்ப-முண்டிடுவோர்மாற்றதுகாணும், இறவார்கதிர்மதியால்
செட மெங்சாணுடலும்வலுத்திடுங்காண் பரவசமாயளித்தேன்
ஜென்மபாதகஞ்செய்தால்பறந்துவிடுந், துரைராஜயோகத்தினல்.
துன்பஞ்சேராதுகற்பச்சுகாதீதமே. ௩௰

(இ-ள்.) விதைவிதைத்தால் விளைவும் அனேகமுண்டு மிகுந்த
வேதனை வெகுபாடு கொஞ்சமாவது பொறுக்காத சரீரமானது
சாவாதிருப்பதற்கு வழிப்பார், உற்றூர் முதலியவர்களை நான் அறி
யமாட்டேன், இதற்கு மருந்தோ உலகத்தில் எங்குமில்லை. கற்பமு
ண்டவர்கள் மாத்திரம் இறக்கமாட்டார்கள். இதனல் எண்சாண்
உடம்புபலப்படும் சென்மத்தில் பாவஞ்செய்பக்கூடாது ராஜயோ
கத்தினல் துன்பம் உண்டாகமாட்டாது. இதுவே கற்பசுகாதீத
மாகும் எ-று. (௧௩௩௪)

விருத்தம்.

திங்கள்தசபத்தாச்சுபாலனுர்க்குசிறுவனுமே பிறந்திட்டான்
திங்கள்பத்தில்,கங்கையணிசடையாரைப்போற்றிநித்தங்-கருத்தா
லுமெடுத்துலகில்செனித்தேன்காணு, மங்கையுடன்வாதாடியமிர்த
கொண்டுமனோன்மணிதன்பாதமறவாமல்போற்றி,அங்கிருந்தவண்
மையெல்லாமுறைப்பேன்காணும் ஆதிகுருபாதமறவாமல்தானே.

(இ-ள்.) பிள்ளைக்குப் பத்துமாதமாச்சுது பத்தாவது மாசத்
தில் பிள்ளைபிறந்தான் பரமேஸ்வரனைத்துதிசெய்து உலகத்தில்பிற
ந்தேன் அம்பிகையோடு வாதாடி அமிர்தத்தைக்கொண்டு அவனு

டைய திருவடிகளைத் துதிசெய்து அவ்விடத்திலிருந்த உண்மை களை யெல்லாம் சொல்லுவேன் குருவின் திருவடிகளை மறவாமலி ருந்து எ-று. (கஉ௫)

மூலமெனும்வச்சிரப்பை வீட்டுக்குள்ளே மூங்கில்முளைபோல துவுங்காரசாரம், வாலையருளாலமைத்தவாறுதன்னால் மதிரவியுங் கூடியதுமிரண்டுஆண்டில், பாலனதுபோல்ஜெனித்துப் பிறவியாகி பத்துதிங்கட்குள்ளுஞ்சிறுபாலனாகி, தூலமிர்தமூலமதிலுதித்தவன் மைசொல்வேனினிகாயம்வந்தகூக்ஷமாண்டே.

(இ-ள்.) மூலாதாரம் என்கிற வஜ்ஜிரம்போன்ற பைபுள்ளவீட் டுக்குள்ளாக மூங்கில் முளையைப்போல வாலாம்பிகையின் அருளி னால் காரசாரங்கள் உண்டாக்கின விதமும், மதியும், ரவியுங்கூடி இரண்டுவருஷத்தில் பாலனைப்போல்பிறந்து பத்துமாதங்களுக்குள் சிறியபாலனாய் இனி மூலத்திற்பிறந்த தன்மையைச் சொல்லுகின் றேன் எ-று. (கஉ௬)

காயசித்தி-தரு.

காயம்வலுத்ததுகா-ணண்டே-காயம்வலுத்ததுகாண்.

(இ-ள்.) ஆண்டையே-சரீரமானது வலுமையடைந்தது எ-று.

காயம்வலுத்ததுமாய்கைமறைந்தது, கவலைதெளிந்தது சகல மொழிந்தது, நேயனருள்பணிந் தாக்கைவலுத்தது, நீயென்றுநா னென்று நேசமொழிந்தது. காயம்

(இ-ள்.) சரீரமானது வலிமையடைந்தது! அதனால் மாய்கை மறந்தது, கவலைதெளிந்தது, சகலமும்ஒழிந்தது, இவைகள் எல் லாம் நீக்கவே ஈஸ்வரனுடைய கிருபையினால் சரீரமும் மிகுந்தவலி மையடைந்தது, நீ! நான்என்கிற இருபகுப்பு ஒருந்ததுஅத்துவித நிலை உண்டானது எ-று. (கஉ௭)

கூற்றுவனென்கிறகொடூரமழிந்தது, கோடானகோடிவியாதி பிறந்தது, யேற்றியிருந்தஇகழ்ச்சிமறந்து, என்னுள்ளேயீஸ்பரன் தன்னையறிந்தது. காயம்

(இ-ள்.) எமன்என்கிற கொடூரமானது முழுமையும்நீங்கினது கோடானுகோடி கணக்கானவியாதிகள் பிறந்தன, இருந்த இடத் தின் இகழ்ச்சிமறந்து விடப்பட்டது, எனக்குள்ளாகச் சர்வேஸ்வ ரனை உணர்ந்தது எ-று. (கஉ௮)

வாசமாய்கித்திரைபாசமறந்தது, வையகத்தோர்கள் வசியம் பிறந்தது தூஷணையற்றது பூசைசைவேததியஞ் சொல்லுமந்திரசெ பஞ்சொக்கியும்போச்சுது. காயம்

(இ-ள்.) நித்திரையானது பாசத்தை மறந்தது, உலகத்தில் ஜனங்களுக்கு வசியம்பிறந்தது, தூஷணைஒழிந்தது, பூசை நைவேத்தியம், சொல்லுகின்ற மந்திர, செபம் இவைசொக்கிப்போச்சுது

தத்துவந்தொண்ணூற்றாறும்பிரிந்தது, தாதுகள்நாடிசடமும் வேறாச்சுது, சுத்தசலமென்றமுரிதேறைச்சுது, சுகஞானதீபச்சுழியைக் காணலாச்சுது. காயம்

(இ-ள்.) தொண்ணூற்றாறு தத்துவங்களும் என்னை விட்டுப் பிரிந்தது, தாதுகளாகிய நாடிகளும், சடலமும் வெவ்வேறாய் விட்டது, சுத்தசலமானது தேறைச்சுது, ஞானதீபச்சுழியைக் காணலாச்சுது எ-று. (௧௨௪௰)

காமப்பாலுண்டகருத்துமழிந்தது, காமக்குரோத லோபங்கண்டிதமாச்சுது, வாமப்பால்கொண்டுமதியொளிகண்டு, மகிழ்ச்சியடைந்து வச்சிரதேகமாச்சுது. காயம்

(இ-ள்) காமப்பாலைப்புசித்த கருத்தானது ஒழிந்தது,காமம், குரோதம் லோபம் இவைகள் கண்டிக்கப்பட்டது, வாமப்பாலைப் பானம்பண்ணி மதிதேஜஸைத் தரிசித்து சந்தோஷித்ததனால் வஜ்ஜிரதேகம் ஆச்சுது எ-று. (௧௨௪௧)

மூலத்தினுள்ளமுப்பாழுமறிந்தது, முன்னமேயன்ன மயமும் பிரிந்தது, ஞானத்திலேறவும்வாசிவளரவும், ஞானசிரோமய கியானவானுண்டையே. காயம்

(இ-ள்.) மூலத்தின் கண்ணுள்ள முப்பாழும் அழிந்தது, அதற்குமுன்னமே அன்னமயமும் என்னைவிட்டுப் பிரிந்தது, வாசியானது ஏறஏற நான் ஞானவானுவேன் எ-று. (௧௨௪௨)

ஓராண்டுக்குள்ளே யுடல்வெவ்வேறாச்சுது, ஓங்காரத்துள்ளே யுயிருறவாச்சுது, நீங்காதவாசிநிராமயமாச்சுது, நின்னுள்ளேநின்மயம் நேசமதாச்சுது. காயம்

(இ-ள்.) ஒருவருஷத்துக்குள்ளாகச் சரீரம் வெவ்வேறாச்சுது, ஓங்காரத்துக்குள் ஆன்மாகலந்தது, ஒழியாத வாசியினால் நிராமயம் ஆச்சுது, உனக்குள் உன்னுடைய நிலைவெளிப்பட்டது எ-று.

பிராணயவாசியும்பின்னிட்டிழுக்காமல் பேசுமூலாதாரம் வாசம்பொருந்திட, வீரனவாயுவுந்தசபத்துங்கூடியு, மேவியொருமித்துத் தாவியுமொன்றதாய். காயம்

(இ-ள்.) பிராணயாமத்திற்குரிய வாசியானது பின்கொண்டு இழுக்காமல் மூலாதாரமானது மனங்கொள்ள தசவாயுவுங் கூடி ஒருமித்ததாம் எ-று. (௧௨௪௩)

பத்துமொருமித்துப் பாய்ந்திடுநாடிதான், நித்தம்வாசியது நேர்பிசகாமலும், சத்துஞ்சித்தானந்தமுத்தியருள்தருஞ், சித்திய னுக்கிரகசுத்தமதிமலர். காயம்

(இ-ள்.) தசவாயுக்களும் ஒன்றாகச்சேர்ந்து பாய்கின்ற நாடிதான் தசவாயுக்களையும் தவறுதபடியிருந்து காக்கின்றது எ-று.

நித்தம்வாசியூதிநின்றருசாதியும், மற்றதுகைப்பு அப்புவஞ் சுண்ணமாம், பெற்றபேரிப்படிபேர்பெறுஞானிகள், உத்தமர்சொல்லுமுண்மையிதாண்டையே. காயம்

(இ-ள்.) தினந்தோறும் வாசியைஊதி நின்றிருக்கின்ற சாதியும், கைப்பும் அப்பும் கலக்கச்சுண்ணமாகும், இதுவே உத்தமர்களாகிய ஞானிகள் சொல்லுகின்ற உண்மையாகும் எ-று.

வாசிநிலையாதேன்மரண்டிடுந்தேகமும், பாசம்வைத்துவிசுவாசித்திஊதிடும், பேசபேசவெகுகோடிரகசியம், ஈசனருள்படியனுக்கிரகநிலையினில். காயம்

(இ-ள்.) பிராணாயாமம் கைகூடாவிட்டால் சரீரம் விழுந்துவிடும். ஆகையால் மனத்தை நன்றாகவைத்துஊது. இதுவேபெரிய ரகசியமாம் இது ஈஸ்வரன் சொன்னபடியே நான்சொன்னதாகும்

இந்தவாசியூதிஎத்தேசகாலமும், அந்தப்படியனுக்கிரகநிலையினில், சிந்தைவைக்காமலுஞ்செய்கைவிதப்படி, விந்தையதாகவிளங்கிளுராண்டையே. காயம்

(இ-ள்.) எக்காலமும் இவ்வாசியைஊதி அனுக்கிரக நிலையில் மனத்தை வைக்காமல் விந்தையாக விளங்கிளுர்கள் எ-று.

சந்தையங்கள்வாராசாக்ஷிநூலைப்பாரும், வந்தவழிவருமாறலகப்படும், எந்தன்கருத்தறிந்தநவிதிப்பயன், நிந்தனையுமில்லாநீடூழிவாழ்வார்களே. காயம்

(இ-ள்.) சந்தேகங்கள் உண்டாகாத சாக்ஷிநூற்களைப்பாருங்கள், பார்த்தால் வந்தவழியை உணரலாம், மாறுவதும் ஏற்படும் என்னுடைய கருத்தை உணர்ந்து நிந்தனையில்லாமல் நீடூழியாக வாழ்வார்கள் எ-று. (௧௨௪௬)

கட்டும்வாசியறுகால்பன்னிரண்டிணுவ், நெட்டிட்டேறுமலும் நீஞ்சிடநீஞ்சிட, மட்டுப்படுமிந்த அம்பிகாயோகமுந், தட்டுப்படுந் கனம்பலசோதியில். காயம்

(இ-ள்.) கட்டவேண்டிய வாசி செவ்வையாகக் கட்டுப்படாமல் பன்னிரண்டு அங்குலம்வரைக்கும் பாய்வதிஞல் அதுநீஞ்ச,

நீஞ்சப்பலமாய் ஏறுகிறது ஆகையால் அம்பிகாயோகமும் தட்டுப் படும் பொன்னம்பலசோதியில் எ-று. (௧௨௫௰)

அட்டியில்லாமலுமாண்டையினிகேளும், ஒட்டிக்கண்டதாரை ஓயாமலூதிடுங், கெட்டிகெட்டிவச்சிரதேகமதாகிடும், நெட்டிநெட் டியேறநிர்மலசொரூபமே. காயம்

(இ-ள்.) ஆண்டையே! தடையில்லாமற்கேள்கண்டதாரையிற் சேர்ந்து ஓயாமல்ஊத கெட்டியான வஜ்ஜிரசரீரமாகும் ஆகையால் நெட்டிநெட்டி ஏறினால் நிர்மலசொரூபமாகும் எ-று. (௧௨௫௧)

நாளுநாளுக்குவிநாடிவிநாடிகொண், டாளுந்தினந்தினமப்படி யேறினால், ஏழுமேழும்பதினாலுலகங்களும், சூழுஞ்சூழுஞ்சுகாதீத ங்காணுமே. காயம்

(இ-ள்.) நாள்தோறும் இப்படிசெய்து ஏறினால் பதினாங்கு லோகங்களுக்கும் சுகாதீதமுண்டாகும் எ-று. (௧௨௫௨)

விருத்தம்.

தராதலவிராசர்களுந்துரும்பதாச்சு தரணிதனிலுள்ளவர்களெ றும்பதாச்சு, துராதுரைகளனுமளவுதுன்பம்போச்சுதுலையாதசெ கமாய்கைதுலைந்துபோச்சு, மாராதசடர்கோபமாறிப்போச்சு மகி தலமுமண்டரண்டமறியலாச்சு,வீராதிவீரவென்றும்வேகம்போச்சு வேதாந்தசாரமெல்லாம் வெளியாய்ப்போச்சே.

(இ-ள்.) இவ்வண்ணஞ் செய்ததினால் அரசர்களெல்லாரும் துரும்புக்கு ஒப்பானார்கள். உலகவாசிகள் எறும்புக்கு ஒப்பானார் கள் சகலதுன்பங்களும் ஒழிந்தன கோபங்கள்நீங்கின அண்டரண் டங்களின் உண்மையை உணர்கின்ற சக்தி உண்டாச்சுது வீராதி வீரன் என்றுசொல்லும் அகங்காரம்போய் சாந்தமுண் டாச்சுது வேதாந்தசாரங்களின் உண்மை ஐயந்திரிபற உணரலாச்சுதுஎ-று

கல்லுமலைகரடெல்லாம்பொன்னதாச்சுகண்டவிடமெல்லா ங்கயிலையாச்சு, நல்வினைதீவினைக்கவுழ்தங்கற்பமாச்சு நாடினபேரெ ல்லோர்க்குஞானமாச்சு, சொல்லவல்லபெரியோர்க்குத் தெய்வமா ச்சு சூரியப்பிரகாசவொளிதோணலாச்சு, புல்லறிவுகொண்டோர் க்குப்பேய்தானச்சு பூரணத்தையறிந்தவர்க்குஞானமாச்சே.

(இ-ள்.) கல், மலை, கரடு இவைகளெல்லாம் பொன்னாய் விட் டது, பார்க்கின்ற இடங்களெல்லாம் கயிலாசமாச்சுது, இருவினைக ளுக்கு ஔஷதம் கற்பமாச்சுது இவைகளை விரும்பினவர்களுக்கு ஞானமாச்சுது சொல்வதற்கு வல்லவர்களான பெரியவர்களுக்கு

